# சிவகீதையும் சித்தாந்த மரபும்

**(சிவகீதை, சிதானந்த கீதை, புடைமருதூர் மரபு ஆகிய நூல்களின் தொகுப்பு)**

பதிப்பாசிரியர்:

**ச. கிருஷ்ணமூர்த்தி**

எம்.ஏ., (தமிழ்) எம்.ஏ., (வரலாறு)

பி.எட்., கல்வெட்டியல் முதுகலை பட்டயம்.

வெளியீடு:

**ஆ. உண்ணாமலை**

12/1, புதுப்பேட்டை வடக்குத் தெரு,

சிதம்பரம் - 608 001

## நூலாக்கக் குறிப்பு

நூல் தலைப்பு: சிவகீதையும் சித்தாந்த மரபும்
(சிவகீதை, சிதானந்த கீதை, புடைமருதூர் மரபு ஆகிய நூல்களின் தொகுப்பு)

பொருள்: வேதாந்த சித்தாந்த கருத்துகள்.
ஓலைச் சுவடிகள் இருந்து நகல் செய்த நூல்கள்.

:

பதிப்பாசிரியர்: ச. கிருஷ்ணமூர்த்தி,
எம்.ஏ., (த), எம்.ஏ., (வ)
பி.எட்., கல். பட்டயம்.

வெளியீட்டாளர் மற்றும் உரிமை: ஆ. உண்ணாமலை
உண்ணாமலை பதிப்பகம்
12/1, புதுப்பேட்டை வடக்குத் தெரு
சிதம்பரம் - 608 001.

மொழி: தமிழ்

பதிப்பு: முதல்

பதிப்பு ஆண்டு: டிசம்பர் 1998

நூல் அளவு: 1 x 8 டெம்மி

பிழை திருத்தம்: கி, மாசிலாமணி, B.Pharm.,

பக்க எண்ணிக்கை: 168 + 8

விலை: ரூ. 50-00

அச்சிட்டோர்: சபாநாயகம் பிரிண்டர்ஸ்
கீழரத வீதி, சிதம்பரம்
போன்: 23040



காணிக்கை

**மாதவர் மடங்க ளாதி வரதன்மந் திரங்க ளாதி**
**நாதமா மிலிங்க மாதி நளினபுட் கரணி யாதி**
**சேதமுற் றிடின்முன் போலச் செய்கின்றோர்க் குறும்ப லந்தான்**
**ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணித மோங்கும்.**

(நூல் புண்ணியத் தெளிவு)

மேற்கண்ட பாடலில் குறிப்பிட்டதற்கிணங்க திருப்பணி செய்து வரும் அன்பர்களில் டாக்டர் க. நடராசனும் ஒருவராவர். சிதம்பரம் ஆர். கே. மருத்துவமனையின் உரிமையாளரும் கல்யாணசுந்தரத்தின் மகனும் டாக்டர் எழிலரசியின் கணவரும் ஆன டாக்டர் க. நடராசன் உளுந்தூர்பேட்டை அருகே எலவானாசூர் கோட்டையில் உள்ள தொன்மையான மாடக் கோயிலைத் திருப்பணி செய்து வருகிறார். இவ்வரிய செயலுக்காகவும் சிவகீதை நூலில் குறிப்பிட்டதற்கிணங்க எதையும் சிவார்ப்பணமாக செய்து வரும் பண்புக்காகவும் அவருக்கு இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

- பதிப்பாசிரியர்

**திரு. கு. தாமோதரன்**, எம்.ஏ.,
இயக்குநர். (பொ)
தொல்பொருள் ஆய்வுத்துறை,
தரமணி- சென்னை - 113.

## வாழ்த்துரை

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டுப் பயிற்சி முதுக லைப் பட்டயம் முடித்த திரு. ச. கிருஷ்ணமூர்த்தி முதன்முதலாக 1978ஆம் ஆண்டு இறுதியில் தஞ்சை மாவட்ட தொல்லியல் அலுவலராகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டார். நான்கு ஆண்டுகளுக்கு மேலாக அம்மாவட்டத்தில் இவர் பணியாற்றிய காலத்தில், பல்வேறு ஊர்களில் ஓலைச்சுவடிகளை அரசிற்காகத் திரட்டித் தந்து ள்ளார். அச்சில் வராத சில ஓலைச்சுவடிகளை நகல் செய்தும் சேகரித்த ஓலைச் சுவடிகளுக்குச் சுவடிகளின் விளக்கப்பட்டியல் தயார் செய்தும் உள்ளார். பதிவு அலுவலராகத் தஞ்சையில் நான் பணியாற்றிய காலத்தில், இவருடைய புலமையையும் தொழில் ஆர்வத்தையும் கண்டு வியந்துள்ளேன். தன் குடும்பத்தைக் கூட கவனியாமல் ஆய்வுப் பணியிலேயே இவர் காலத்தைக் கடத்தியவர்.

தருமபுரி மாவட்டத்தில் இவர் தொல்லியல் அலுவலராகப் பணியாற்றிய போது பெருங்கற்கால ஓவியங்கள் பலவற்றைக் கண்டு பிடித்ததுடன் பழங்காலக் காசுகளையும் அரிய கல்வெட்டுகளையும் கண்டறிந்துள்ளார். அரிய உதிரிச் சிற்பங்களைத் தருமபுரி அகழ்வைப்பகத்திற்குத் திரட்டித் தந்துள்ளார். தருமபுரி அகழ்வைப்பகத்தின் முன்னேற்றத்தில் இவருடைய பங்கு மகத்தானதாகும்.

பல்வேறு கருத்தரங்குகளில் கட்டுரைகள் வாசித்துள்ள இவர் நாளிதழ்களில் பல கட்டுரைகளைப் பாமர மக்களுக்காக எழுதியுள்ளார்.

பிரகலாத சரித்திரம் என்ற ஓலைச் சுவடியைப் பிரதி செய்து முதன் முதலில் பதிப்பித்த இவர் தருமபுரி வரலாற்றைக் கல்வெட்டுகளின் அடிப்படையில் எழுதியு ள்ளார். சிதம்பரம் தொல்லியல் அலுவலராக இவர் மாற்றப்பட்ட பின், கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள், சிற்பங்கள் ஆகியவற்றை விரிவாக ஆய்வு செய்து பல நூல்களை எழுதியுள்ளார்.

மறைந்த பேரறிஞர்கள் திருவாளர்கள் மு. அருணாசலம், போன்றோர் இவருடைய கல்வெட்டு, இலக்கிய புலமையைப் பாராட்டி உள்ளனர். ஆதீனங்களின் அன்புக்கும் இவர் ஆளாகியுள்ளார். மறைந்த பேரறிஞர்கள் திருவாளர்கள் மு. அருணாசலம், வெள்ளைவாரணம் போன்றோர் இவருடைய கல்வெட்டு, இலக்கிய புலமையைப் பாராட்டி உள்ளனர். ஆதீனங்களின் அன்புக்கும் இவர் ஆளாகியுள்ளார்.

இதுவரை அச்சில் வராத திருக்குறள் பழைய உரையை மூலத்துடன் சுவடி யிலிருந்து இவர் நகல் செய்து இத்துறைக்கு 1992 இல் வழங்கினார். இவரையே

பதிப்பாசிரியராக்கி அந்த உரையை எம் துறை திருக்குறள் பழைய உரை என்ற பெயரில் வெளியிட்டு மகிழ்ந்தது. திரு ஐராவதம் மகாதேவன், திரு சாரங்கபாணி போன்றோர் இந்நூலை பாராட்டி உள்ளனர்.

திருவோத்தூர் என்ற இவரது வரலாற்று நூலுக்கு தமிழக அரசு சிறந்த நூலுக்கான விருதை அளித்துள்ளது. பாராட்டுக்குரியது. செப்பேடுகள் பலவற்றை ஆய்வு செய்து, ஆய்வுக் கட்டுரைகளாக மெய்கண்டார் போன்ற இதழ்களில் இவர் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

காசியில் உள்ள தமிழ்க் கல்வெட்டுகளை நேரில் சென்று படித்தறிந்து கட்டுரை எழுதியுள்ளது இவருடைய சாதனை என்று குறிப்பிடலாம்.

சிவகீதை மற்றும் சிதானந்த கீதை ஓலைச்சுவடிகளுடன் புடைமருதூர் மரபு என்ற சித்தாந்த ஓலைச்சுவடியையும் சேர்த்துச் சிறந்த ஆராய்ச்சியுடன் இந்நூலை இவர் பதிப்பித்துள்ளார். மேற்கண்ட சுவடிகள் தஞ்சை மாவட்டத்தில் பல ஆண்டு களுக்கு முன் இவரே நகல் செய்தவை ஆகும். தமிழ் மக்கள் அனைவரும் இந்த நூலை வாங்கி பயன் பெற வேண்டும்.

தமிழக வரலாற்றுக்கு இவர் ஆற்றி வரும் தொண்டு போற்றுதற்குரியது. மேன்மேலும் இவர் பணி சிறக்க உள்ளன்புடன் வாழ்த்துகிறேன்.

அன்பன்
**கு. தாமோதரன்**.

## பதிப்புரை

'சைவ சித்தாந்தமானது தென்னிந்தியாவிற்கே சிறப்பாக உரிய தமிழர் சமயமாகும். தென்னிந்தியாவிலேயே வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பழம் பெரும் சமயம் சைவம். ஆரியர் வருகைக்கு முற்பட்ட இச்சமயம் தமிழ் மக்கள் நெஞ்சத்தில் நிறைந்து விளங்குகிறது' என்று குறிப்பிடுகிறார் திருவாசகத்தை மொழி பெயர்த்த டாக்டர். ஜி. யு. போப்பையர்.

'சிவ வழிபாடு அல்லது பசுபதி வழிபாடு சிந்துவெளி நாகரிகத்தில் இருந்துள் ளது' எனத் தொல்லியல் அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

தென்னாடுடைய சிவனும் ஆரியருடைய ருத்திரனும் பிற்காலத்தில் ஒன்று பட்டன.

சைவ சமயத்தை முதன்மையாக வைத்து அகச்சமயம், அகப்புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச்சமயம் என்று முன்னோர் பாகுபடுத்தி உள்ளனர்.

இந்து மதத்தின் இருபெரும் பிரிவாக வேதாந்தம், சித்தாந்தம் அமைய, சித்தாந்தத்தில் சைவத்தைச் சேர்ப்பர். வேதம், ஆகமம் இரண்டையும் சித்தாந்தம் ஏற்றுக் கொள்ளும். இராஜசிம்மன் என்ற பல்லவ மன்னன் சைவ சித்தாந்தத்தில் பேரறிவு உடையவன் என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது.

வேதாந்த வழியை ஏற்ற சங்கரர் அத்வைதத்தைத் தாபித்தார். இவர் மரபினரை ஏகான்மவாதிகள் என்றும் அறிஞர் கூறுவர். அறுசமயக் கடவுளரையும் சங்கரர் போற்றியுள்ளார். பகவான் ஸ்ரீகிருஷ்ணர் உபதேசம் செய்த பகவத் கீதைக்கும் சங்கரர் பாஷ்யம் செய்துள்ளார். இவர் மரபில் வந்த பரமசிவேந்திர சரசுவதி சுவாமிகள் 'சிவகீதா தாத்பரிய பிரகாசிகை' என்ற நூலை எழுதினார்கள். வடமொழியில் கூடிய அச்சுவடி அச்சிட்ட விவரம் தெரியவில்லை. ஆயின் பரம்சிவேந்திரரைக் குருவாகப் போற்றும் தியாகராஜ சாஸ்திரிகளின் தமிழ் மொழி பெயர்ப்பான சிவகீதை, சிவனின் பெருமைகளையே குறிப்பிடுகிறது. தியாகராஜ சாஸ்திரிகள் வேதாந்தம் மற்றும் சித்தாந்த வல்லுநராக இருந்துள்ளார். அச்சில் வராத அவருடைய கீதை என் கவனத்தை ஈர்த்தது.

வேதாந்தத்தை மிகவும் சுருக்கமாகக் குறிப்பிடும் சிதானந்த கீதை என்ற சுவடியும் என் பார்வைக்கு வந்தது.

மூன்றாவதாகப் புடைமருதூர் மரபு என்ற பெயரில் கூடிய சித்தாந்த மரபுக ளைக் கூறும் ஓலைச் சுவடி என்னைப் பெரிதும் ஆட்கொண்டது. மூன்றையும் நகல் செய்து ஆய்வு செய்தேன். தமிழ் நூல்களைச் செம்மையாகப் பதிப்பித்த உ. வே. சாமி நாதஐயரே அபூர்த்தியான, பிழைப்பட்ட சிதைந்த ஏடுகளைக் கொண்டு துன்பப்பட்ட போது ஆர்வம் மட்டும் கொண்ட என் நிலையைக் கூற வேண்டியதில்லை.

# சிவகீதையும் சித்தாந்த மரபும்

சிவகீதை கிடைத்தது ஒரே சுவடி என்பதாலும், ஓரளவு, சிதலமானது என்பதாலும் பிராமணர் பேச்சு நடையில் கூடியது என்பதாலும் நகல் செய்ய மிகவும் சிரமப்பட்டேன். எனவே சுவடியில் உள்ளபடியே பதிப்பிக்கப்படுகிறது. சிவகீதை எளிமையான நூல் என்று தியாகராஜ சாஸ்திரிகள் குறிப்பிட்டிருப்பினும் சற்றுக் கடின நடையாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் சிவகீதைக்கு விரிவான ஆராய்ச்சி உரையை எழுதி உள்ளேன். சிதானந்த கீதையின் சுருக்கமும் இணைத்து ள்ளேன்.

'புடைமருதூர் மரபு' என்ற பெயரில் இதுவரை நூல் வெளி வரவில்லை. இம்மரபின் ஒரு பகுதி 'சித்தாந்த மரபு' என்ற பெயரில் பலர் அச்சிட்டுள்ளனர். சித்தாந்த மரபில் அறுபது சித்தாந்த கருத்துகள் தலைப்புகள் இன்றி உள்ளன. இந்த அறுபதில் நாற்பது மட்டுமே தலைப்புகளுடன் புடைமருதூர் மரபில் இடம் பெற்று ள்ளன. இந்த நாற்பதில் கூட வேறுபாடுண்டு. புடைமருதூர் மரபின் பிற்பகுதியில் உள்ள இருபத்தாறு சித்தாந்தக் கருத்துகள் தலைப்புகளுடன் உ. வே. சா. நூலக வெளியீடான 'சைவசித்தாந்த வினா விடை' யில் இடம் பெற்றுள்ளன. எஞ்சிய ஏழு தலைப்புகள் புடைமருதூர் மரபில் மட்டும் உள்ளன.

புடைமருதூர் மரபு என்ற சுவடி நன்னிலையில் இருந்ததாலும் ஆய்வு செய்ய வேறு சுவடிகளும் புத்தகங்களும் கிடைத்ததாலும் முடிந்தவரை செம்மையாக எழுதி இருப்பதாகவே நம்புகிறேன். சைவ அன்பர்களுக்குப் பரிச்சயமான பெயர் என்பதால், சித்தாந்த மரபு என்றே நூல் தலைப்பில் குறிப்பிட்டுள்ளேன்.

மனோன்மணியம் என்ற நாடகக்காப்பியத்தில் நிட்டாபரர் மற்றும் கருணாகரர் வேதாந்த சித்தாந்த கருத்துகளைக் குறிப்பிடுவார்கள். அடியேனும் வேதாந்த சித்தாந்த கருத்துகளைக் குறிப்பிடும் நோக்கில் ‘சிவகீதையும் சித்தாந்த மரபும்' என்ற பெயரில் இந்நூலைப் பதிப்பிடுகிறேன். சுவடிகளை அன்புடன் வழங்கி ஆய்வு செய்யக் கேட்டுக்கொண்ட கருந்தட்டாங்குடி புலவர். கோவிந்தராசு அவர்களுக்கும் ஓய்வு பெற்ற ஆசிரியர் வேதாரண்யம் சொக்கநாத தேசிகர் அவர்களுக்கும் என் ஆய்வுக்கு வழி காட்டிய டாக்டர். இரா. நாகசாமி அவர்களுக்கும் என் முதற்கண் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய நூல்களில் உள்ள நிறை குறைகளைச் சுட்டிக் காட்டும் சமூக வரலாற்றறிஞர் நெல்லை நெடுமாறனுக்கும் பேராசிரியர் டாக்டர் ஜெயபாண்டியனு க்கும், என்னுடைய ஒரு மாணாக்கனும் கல்வெட்டறிஞனுமான நண்பன் எஸ். இராமச்சந்திரனுக்கும், நண்பர்கள் வெள்ளையாம்பட்டு சுந்தரத்திற்கும் சிதம்பரம் டாக்டர். நடராஜனுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வுப் பணிகளை மனந்திறந்து பாராட்டும் திரு. நடன. காசிநாதன் அவர்களுக்கும் இந்த நூலிற்கு வாழ்த்துரை வழங்கியுள்ள தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் (பொ) திரு. கு. தாமோதரன் அவர்களுக்கும் என் நன்றியி னை உரித்தாக்கிக் கொள்கிறேன். துறைக்கும் என் நன்றி.

சுவடிகளைப் பார்வையிட்டுக் குறிப்பெடுத்துக் கொள்ள அனுமதி வழங்கி யிருந்த கும்பகோணம் சங்கராச்சாரியர் மடத்து நிர்வாகிகளுக்கு என் நன்றி. காஞ்சி சங்கர மடத்து சங்கராச்சாரியார்கள் ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கும் ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கும் என் சிரம் தாழ்ந்த வணக்கங்களைத் தெரிவி த்துக் கொள்கிறேன்.

‘சிவகீதையும் சித்தாந்த மரபும்' என்ற இந்நூல் தடங்கல் இன்றி வெளிவர காசிக்கு முகாம் செல்வதற்கு முன்பும் காசிக்குச் சென்ற பின்பும் ஆசியுரை வழங்கிய திருவாவடுதுறை ஆதீனக் கர்த்தர் சீர்வளர் சீர் சிவப்பிரகாச தேசிகரை மனம், மெய், மொழிகளால் வணங்குகிறேன்.

'துறசை ஆதீனத் தாபகருடைய மகரத் தலைநாள் குருபூஜை விழா நாட்களில் ஐந்தாம் நாளில் (19-1-99) நூல் வெளியீட்டு விழாவை வைத்துக் கொள்ளலாம் என்று அருளாணை வழங்கிய இளைய சந்நிதானம் காசிவிசுவநாத தேசிகர் அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிவனுடைய 108 நாமங்களையும் சேர்த்துப் பதிப்பிட ஆலோசனை கூறிய நூல் வெளியீட்டாளர் ஆ. உண்ணாமலையும் பொறுமையாகப் பிழை திருத்தம் செய்த கி. மாசிலாமணியும் குறித்த காலத்தில் நூல் அச்சிட்டுத் தந்த சபாநாயகம் பிரிண்டர்ஸ் உரிமையாளர் இரா. கௌதம சங்கர் அவர்களும் நம் பாராட்டுக்குரிய வர்கள் ஆவார்கள்.

தமிழ்மக்கள் இந்நூலை வாங்கிப் சீர்மிகு பயன்பெறுமாறு வேண்டுகிறேன்.

# சிவகீதை ஆராய்ச்சி உரை

**பகவத்கீதை**

கீதை என்றால் அறிவுரை அல்லது உபதேசம் என்று பொருள். அர்ச்சுணனுக்கு உபதேசம் செய்த கண்ணனை மகாபாரதக் காவியத்தில் காண்கிறோம். இவ்வுபதேசம் பகவத் கீதை என்று வழங்கப்படுகிறது. பகவத் கீதைக்குப் பின்னர் பல கீதைகள் தோன்றியுள்ளன. கீதை நூல்கள் யாவும் வேதாந்தத்தை அடிப்படையாகக் கொண்டவையாகும். பகவத் கீதை வடமொழியில் இருந்து தமிழில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பாடலாகவும் உரைநடையாகவும் பகவத் கீதையைக் காண்கிறோம்.

**பகவத் கீதையும் பாஷ்யமும்**

பகவத் கீதை வடமொழியில் சுலோகங்களாக இருப்பதால் தாத்பரியம் எல்லோருக்கும் விளங்க வேண்டி, ஸ்ரீசங்கரர் பகவத் கீதைக்கு பாஷ்யம் எழுதினார். இதுவும் வடமொழியில் கூடியது. பகவத் கீதை உண்மையில் வேதாந்தமாயினும் வைணவ சமயத்துக்குரியதாகக் கருதி, சைவ வைணவர்களுக்கிடையில் தருக்கப் போர் நடைபெற்றுள்ளது. ஸ்ரீசங்கரர் பகவத் கீதை தவிர ஏனைய கீதைகளுக்கு உரை (பாஷ்யம்) எழுதாததால் சிவகீதை உயர்ந்த நூல் அன்று என்று வைணவர் சிலர் கூற, சிவகீதை எழுதிய சிலர், சிவகீதையே உயர்ந்தது எனக் கருத்துப் போர் நடத்தத் துவக்கி விட்டனர். கி. பி. 15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தத்துவராயர் ஒரு வேதாந்தியாக இருந்தாலும் சிவனையே பெரிதும் போற்றியுள்ளார். சைவர்கள் வேதங்களை ஏற்றுக்கொண்டாலும் சைவ ஆகமங்களுக்கே முதன்மை தருவர். வைணவர்களில் வடகலையார் வடமொழிக்கு முக்கியத்துவம் தர, தென்கலையார் தமிழிற்குக் குறிப்பாகத் திவ்விய பிரபந்தத்திற்கு ஏற்றம் தருவர். வைணவர்களில் இரு பிரிவினரும் பகவத் கீதையைப் பெரிதும் போற்றியுள்ளனர். பகவத் கீதை அளவுக்குச் சிவகீதை சைவர்கள் மத்தியில் வழங்கவில்லை. ஆயின், வேதாந்த நெறியில் வந்த சங்கர மடம் போற்றி உள்ளது.

**சிவகீதை**

சிவகீதை எளிமையானது. சகல உபநிடதம். சகல வேதாந்த சாரம் என்று கூறத் தொடங்கிய சிவ கீதை ஆசிரியர், எவ்எவ்வகையில் பகவத் கீதையை விட உயர்ந்தது என்று பட்டியலிட முற்பட்டுள்ளார்.

**புனித வஸ்துக்கள்**

கங்கை, கீதை, காயத்திரி மூன்றும் பவித்திரமான வஸ்துக்கள். இம்மூன்றிலும் கீதை அதிசயமானது. சிவனுடைய ஞான சொரூபம் என்று கூறி, கீதையை

நூலாசிரியர் போற்று இங்குக்கீதை என்பது சிவகீதையை நூலாசிரியர் குறிப்பிடு கிறார்.

**வைணவரும் சிவகீதையும்**

வைணவர்கள், சிவபுராணங்களும், சிவகீதை முதலிய நூல்களும் முத்தி தராது என்று கூறுவதை மறுத்துச் சிவகீதையே முத்தி தரவல்லது என்று சிவகீதை ஆசிரியர் குறிப்பிடுகிறார். பல ஏதுக்களைக் குறிப்பிட்டுச் சிவகீதையே பிற கீதை களை விட உயர்ந்தது என்றும் அவர் நிலைநாட்டுகிறார்.

**பரமசிவேந்திரர்**

சங்கராச்சாரியார் மரபில் 57 ஆவதாக வரும் பரமசிவேந்திர சரசுவதி சுவாமிகள் II (கி. பி. 1539-1586) குறித்துக் காஞ்சி மடத்தின் வெளியீடான "சங்கராச்சாரியார் குரு பரம்பரை" என்ற நூலில் இரு குறிப்புகளை அந்நூலாசிரியர் வே. மகாதேவன் குறிப்பிடுகிறார். நாராயணேந்திரர் என்பவர், வித்யா குருவாகப் பரமசிவேந்திரருக்கு இருந்துள்ளார். பரமசிவேந்திரர், 'சிவகீதை தாத்பரிய பிரகாசிகை' என்ற வடமொழி நூலை எழுதியுள்ளார் என்பதே அவ்விரு குறிப்புகளாகும்.

**தியாகராஜ சாஸ்திரி**

வடமொழியில் பரமசிவேந்திரர் எழுதிய சிவகீதையைத் தமிழ் அன்பர்களு க்கும் பயன்பெறும் பொருட்டு, தியாகராஜ சாஸ்திரி என்பவர் தமிழில் மொழி பெயர்த்து எழுதியுள்ளார்.

**பதினாறாம் நூற்றாண்டு**

நூலில் தம் குருவாக நாராயணேந்திரரையும் பரமசிவேந்திரரையும் தியாகராஜர் குறிப்பிடுவதால், சிவேந்திரர் வாழ்ந்த காலத்திலேயே தியாகராஜ சாஸ் திரியும் வாழ்ந்துள்ளார் ஆகவே இந்நூல் கி. பி. பதினாறாம் நூற்றாண்டு என்பது உறுதியாகிறது.

**பதினாறு அத்தியாயம்**

சிவ கீதை என்ற இந்நூல், பதினாறு அத்தியாய்ங்களைக் கொண்டுள்ளது. இம்மொழி பெயர்ப்பு நூல், சிவகீதை என்று இருப்பினும் வேதாந்த நூலேயாகும்..

**கீதைகள்**

அட்டவற்க கீதை, அவதூத கீதை, உத்தர கீதை, குருகீதை, சிதானந்த கீதை, பிரம்ம கீதை, ஈசுவர கீதை'; ரிபு கீதை கீதைகள் போன்ற பல இருப்பினும் பகவத் கீதையும் சிவ கீதையுமே முக்கியமானவை எனலாம்.

**ஒப்பிட்டாய்வு**

பகவத் கீதை 18 அத்தியாயங்களைக் கொண்டது. சிவகீதை 16 அத்தியாயங் களைக் கொண்டது. பகவத் கீதையில் கண்ணன் உபதேசிக்க பார்த்திபன் கேட்கிறான். சிவகீதையில் சிவன் உபதேசம் செய்ய, இராமர் கேட்கிறார்.

உறவினர்களுடன் போர் புரிய மறுத்து, அர்ச்சுணன் போர்க்களத்தில் செயலிழந்த நிலையில் இருக்கும் போது கிருஷ்ணர் உபதேசிப்பது போல், சீதையை இராவணன் தூக்கிச் சென்ற பின் சோகத்தில் செயலிழந்த இராமனுக்குச் சிவபெரு மான் உபதேசம் செய்கிறார். உயிர்களின் நிலை குறித்தும், இறைவனின் பேராற்றல் குறித்தும், இரு நூல்களிலும் காண்கிறோம். விபூதி யோகம், விசுவரூப தெரிசன யோகம் போன்ற அத்தியாய தலைப்புகள் இரண்டிலும் உள்ளன.

**கருவில் தொடங்கி இறக்கும் வரை**

சிவகீதையின் தொடக்க அத்தியாயத்தில், ஒவ்வொரு அத்தியாயத்தில் கூறப் போகும் கருத்துக்களின் தாத்பரியம் கூறப்படுகிறது எட்டாவதாக உள்ள வயிராக்கிய யோகம் என்ற அதிகாரத்தில் குழந்தை கருக்கொள்வது முதல், ஒவ்வொரு மாத வளர்ச்சியும் பிறந்த பின் அதனுடைய பல்வேறு நிலைகளும், பூவுலகில் மனிதர் எதிர்கொள்ளும் பிரச்சனைகளும், விஞ்ஞான முறையில் விளக்கப்பட்டுள்ளன. மாணிக்கவாசகர் குழந்தை கருக்கொள்வது முதல் ஒவ்வொரு திங்களும் அது எதிர் கொள்ளும் துயரைத் 'திருவாசகத்தில்' குறிப்பிடுவார். அதையொத்து இவ்வாசிரியர் தத்ரூபமாகக் குறிப்பிட்டுள்ளார்.

**பஞ்சபூத தேகம்**

பஞ்ச பூதங்களால் ஆன இத்தேகம், பஞ்ச பௌதீகம் எனப்படும். பிருதிவி ரதானம், பிற பூதங்கள் தேகத்திற்கு, உதவியாயிருக்கும். சராயுசம், அண்டகோசம், சுவேதசம், உப்பீசம், மானசம் என தேகம் ஐந்துண்டு.

**சராயுசம்**

ஆண், பெண் சேர்க்கையால் உயிர் தோன்றும். சுக்கிலம் மிகுந்தால் ஆண்; சுரோணிதம் மிகுந்தால் பெண். இரண்டும் சமமானால் நபுஞ்சகனாகும். கன்னி வீட்டு விலக்கு வந்து, நான்காம் நாள் தொடங்கி பதினாறாம் நாள்வரை ருது காலம். ஒற்றை நாளில் ஆண் பெண் சேர்ந்தால் பெண் குழந்தை. இரட்டை நாளில் சங்கம மானால் ஆண் குழந்தை. பதினாறாம் நாளில் கற்பமானால் பிறந்த குழந்தை சக்கர வர்த்தியாகும்.

**அண்டசம்**

முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பது அண்டசம் எனப்படும்.

**சுவேதசம்:**

வேர்வையினுக்கு மீதி உண்டாகிற பேன், கொசு போன்றவை சுவேதசம் ஆகும்.

**உப்பீசம்:**

பூமியிலிருந்து வெடித்து வரும் மரம் செடிகொடி முதலியன உப்பீசம் என்பர்.

**மானசம்:**

தேவர், ரிஷிகள், அசுரர் முதலியோர் மானசர் ஆவர்.

**தாய் வயிற்றில் முதல் மாத சிசு**

பூர்வ சென்ம கர்ம வசத்திற்கேற்ப விந்துவும் சுரோணிதமும் கூடி, முதல் மாசத்தில் கட்டியாய் மொத்தையாய் பின் வட்டத்திலே வடிவம் கொள்ளும்.

**இரண்டாம் மாதம்**

சிசு மிகவும் கெட்டியாய் இருக்கும்.

**மூன்றாம் மாதம்**

சிசுவிற்குக் கை, கால், தோன்றும்.

**நான்காம் மாதம்**

பிண்டத்திலே சீவன் தோன்றுவன். அசையும். ஆணாயின் வயிற்றின் வலப்ப க்கமும், பெண்ணாயின் இடப்பக்கமும் அசையும். ஆண் குழந்தை இருப்பின், வலப் பக்கமாகப் படுப்பாள். பல், மீசை, தவிர பிற உறுப்புகள் தோன்றும். தந்தை தாய் சுபாவங்கள் குழந்தையிடம் பதியும்.

**ஐந்தாம் மாதம்**

குழந்தைக்குச் சதையுண்டாகும்.

**ஆறாம் மாதம்**

குழந்தைக்கு எலும்பு, மச்சை, நகம், தலைமயிர், குடல்மயிர் போன்றவைகள் தோன்றும்.

**ஏழாம் மாதம்**

குழந்தையின் அங்கங்கள் பூர்த்தி அடையும். கால்களைக் கோத்த நிலையில் கைகளாலே காதுகளை மூடிக் கொண்டிருக்கும்.

**எட்டாம் மாதம்**

குழந்தைக்கு வாக்கும் கேட்கையும் உண்டாகும்.

**ஒன்பதாம் மாதம்**

குழந்தை பிறப்பதற்குத் தயாராகும்.

**பத்தாம் மாதம்**

குழந்தை பிறக்கும். குழந்தை உலகில் அனுபவிக்கும் இன்ப துன்பம் விவரிக் கப்படுகிறது. இன்றைய மருத்துவர்கள் குறிப்பிடும் அறிவியல் செய்திகள் இங்கே ஆசிரியர் குறிப்பிடுவது நமக்கு வியப்பாக உள்ளது. திருமூலரும் திருமந்திரத்தில் கரு தொடங்கி ஒவ்வொரு நிலையையும் விளக்கியுள்ளார். பிற்காலத்தில் தோன்றிய சித்த வைத்திய நூல்களும் விளக்கியுள்ளன. எனினும் ஒரு வேதாந்த நூலில் விளக்குவது புதுமையாகும்.

**உளவியல் கருத்துகள்**

ருதுஸ்தானம் பண்ணின ஸ்ரீயானவள் யாதொரு புருஷ முகத்தை வாஞ்சை யாகப் பார்க்கிறாளோ அந்த கற்பம் அந்த வடிவுடையதாம். ஆகையால் ஸ்ரீயானவள் தன் பத்தாவினுடைய முகத்தைப் பார்க்க வேண்டும். மற்றவர் முகத்தைப் புணர்ச்சிக் காலத்தில் மனதில் நினைக்கக் கூடாது.

ஒரு பெண் கருவுற்றிருக்கும் போது அவளுக்கு விருப்பமானதைக் கொடாது போனால் கருவுக்கு அங்கவைகவிய முதலானது உண்டாகும். தாய்க்குப் பிடிக்காத உணவு, வயிற்றில் உள்ள சிசுவுக்குமாகாது. குழந்தை தலை கீழும் மேலுமாகப் பிறக்கிறது.

**ஐயமும் தெளிவும்**

பகவத் கீதையைக் கிருஷ்ணன் உபதேசித்த வேளையில் சந்தேகம் வரும் போது அர்ச்சுணன் கேள்வி தொடுப்பது போல் சிவபெருமான் கீதையை உபதேசித்து வரும் போது, சந்தேகம் ஏற்படும் போதெல்லாம் இராமர் வினாக்களைத் தொடுக் கிறார்.

சிவன் இராமருக்கு உபதேசம் செய்தாலும் அகஸ்தியரும்,, சூதமுனிவர்களும் நூலில் இடம் பெறுகிறார்கள்.

சிவகீதை என்ற பெயரில் தமிழில் பல நூல்கள் அச்சிடப் பட்டுள்ளன. ஒரு சில நூல்களைக் காண்போம்.

1. **சிவகீதை வசனம்**: சிவகீதை வசனம் என்ற பெயரில் நீலகண்ட சாஸ்திரியார் ஒரு நூல் பதிப்பித்துள்ளார். அ. ராமசாமி தீக்ஷிதர் என்பவர் சுவடியில் எழுதியிருந்தார். 1898 ஆம் ஆண்டு தஞ்சையில் பூரண சந்தரோதயம் அச்சுக் கூடத்தில் இந்நூல் அச்சிடப்பட்டது. இந்நூல் பதினாறு அத்தியாயங்களைக் கொண்டது. வேதோப நிஷத்துக்களின் சாரங்களை ஒன்றாய்த் திரட்டி உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்து கொள்ள உதவுகிறது என்று தமிழ்நூல் விவர அட்டவணை குறிப்பிடுகிறது.

2. **சிவகீதை**: சிவனைத் துதித்தலும் சைவத்துறவு அடையும் மார்க்கமும் கூறப்பட்டுள்ள இந்நூல் கீதாரத்தினமும் சகல சாஸ்திரமுமாகிய ஸ்ரீசிவகீதை மூல ஸ்லோகமும் தமிழ் வியாக்கியானமும் கொண்டது. கணேச சாஸ்திரி என்பவர் 1906 ஆழ் ஆண்டில், சென்னை பண்டித மித்ரன் பிரஸ்ஸில் ஜெ. ஜம்புலிங்க முதலி துணையுடன் பதிப்பித்துள்ளார்.

3. **சிவகீதை-பகுதி 2**: திருச்சிற்றம்பலசுவாமி, நூலாசிரியர் என்று அறிகிறோம்.

4. **சிவகீதை**: பின்னத்தூர் நாராயண சுவாமி 1881 இல் சிவ கீதை ஒன்றைப் பதிப்பித்துள்ளார்.

5. **கிவகீதை**: கைலாசப் பிள்ளை என்பவர் உரையுடன் வெளியிட்டுள்ளார்.

6. **சிவகீதை**: அகஸ்தியர் செய்ததாகச் கூறப்படும் ஒரு தமிழ் நூல் சிவஞான சித்தி உரை மூலம் அறிகிறோம்.

மேற்படி நூல்கள் தமிழ் நூல் விவர அட்டவணை மூலம் அறிகிறோம். மேற்கண்ட ஆறிலும் வேறான சிவகீதை ஒன்று அச்சிடப்படாமல் ஓலைச் சுவடியாகவே இருந்தது. அதனை அடியேன் நகல் செய்து பதிப்பிக்கிறேன்.

**சிதானந்த கீதை**

"கல்வெட்டில் ஆதி சங்கரர்" என்ற கட்டுரை 18-5-91 தினமணி இதழில் பிரசுரமாயிற்று. இக்கட்டுரைக்கு உறுதுணையாக 4-6-91 தினமணி நாளிதழ் வாசகர் கருத்தில் 'சிதானந்தர்' என்பவர் சங்கராச்சாரியர் மரபில் வந்தவரே என்று நான் எழுதியிருந்தேன். சிதானந்த சுவாமிகள் தம்முடைய சீடரான சச்சிதானந்தருக்கு உபதேசம் செய்த நூல், 'சிதானந்த கீதை'யாகும். இந்நூல் வடமொழியில் தத்துவ சாரம் வழங்கப்பட்டது. தமிழில் சிதானந்த கீதையாக எழுதப்பட்டதாக ஓலைச் சுவடியில் பார்க்கிறோம். வேதாந்தத்தைத் தமிழில் உரை நடையில் கூறியவர்

இவரே எனலாம். 'கல்வெட்டில் ஆதிசங்கரர் என்ற கட்டுரையில் பிற்காலச் சோழர் காலத்தில் கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் கோயிலில் கற்பிக்கப்பட்டது என்றறிகி றோம். ஆகவே கி. பி. 12 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இந்நூல் வடமொழியில் தோன்றியிருக்க வேண்டும்.

சிதானந்த கீதை போலவே சதானந்த கீதை என்ற பெயரில் சரசுவதி மஹால் நூலகத்தில் ஒரு சுவடி உள்ளது. இரண்டும் ஒரே நூலாக இருக்கலாம். அச்சில் வராமல் உள்ள நூல்களுள் சிதானந்த கீதையும் ஒன்றாகும். மராட்டியர் காலத்தில் தஞ்சையருகே கட்டப்பட்ட சதானந்தேசுவரர் ஆலயம் சதானந்தர் பெயரில் உள்ளது.

**சங்கரர் மடம்**

நான் தஞ்சை மாவட்டத்தில் பணிபுரிந்து கொண்டு இருந்த காலத்தில் 1979 இல் கும்பகோணம் ஸ்ரீசங்கர மடத்தில் சுமார் 2500 ஓலைச் சுவடிகள் இருந்ததைப் பார்த்துள்ளேன். கீதை என்ற பெயரில் 60 ஓலைச்சுவடிகள் அங்கே இருந்ததை அறிந்தேன். சிவகீதை 15 சுவடிகள், பகவத் கீதை 12 சுவடிகள், உத்தர கீதை 8 சுவடிகள், பிரம கீதை 6 சுவடிகள், குரு கீதை, ரிபு கீதை, கீதாசாரம் பிற சுவடிகளாகும். தற்போது மேற்படி சுவடிகள் உள்ளனவா என்று தெரியவில்லை. எண்ணிக்கையில் கூடுதலாகச் சிவகீதைச் சுவடிகள் இருப்பதால் பெரிதும் இக்கீதை அக்காலத்தில் போற்றப்பட்டுள்ளது எனலாம். இந்தியா மட்டுமின்றி உலகம் முழுவதும் பகவத் கீதை பலருமறிந்த நூலாக இன்று உள்ளது. சிவ கீதை என்றொரு நூல் இருப்பதே சிலருக்குப் புதிய செய்தியாக இருக்கக்கூடும். இச்சிவகீதை பகவத் கீதையைவிட கீழ்க்கண்ட ஏதுக்களால் உயர்ந்தது என்று கூறும் போது மேலும் பலருக்கு வியப்பாக இருக்கும்.

**பகவத் கீதையை விட உயர்ந்தது சிவகீதை.**

பகவத் கீதைக்கு ஸ்ரீசங்கரர் பாஷ்யம் செய்து சிவகீதைக்குச் செய்யாததற்குக் காரணம் கடினமான பகவத் கீதைக்கு உரை கண்டார். எளிதென்பதால் சிவகீதைக்கு உரை செய்யவில்லை. எளிமையான நூல் என்றால் தாழ்ந்த நூலாக இருக்க வேண்டிய அவசியமில்லை.

பகவத் கீதையை முழுவதும் ஸ்ரீபகவான் உபதேசித்த பின் சந்தேகம் நீங்கியதா என்று கேட்க, அர்ச்சுணன் கீதா தத்துவம் ஒன்றும் தெரியவில்லை. மீண்டும் உபதேசம் செய்ய வேண்டும் என்கிறான். சிவகீதையில் உபதேசம் கேட்ட இராமர் மீண்டும் உபதேசம் செய்யுமாறு சிவனைக் கேட்கவில்லை. ஆகவே சிவ கீதை உயர்ந்தது.

பகவத்கீதையில் கிருஷ்ணர் பரமாத்மா. கேட்கும் அர்ச்சுணன் ஜீவாத்மா. ஆயின், சிவகீதையில் கேட்பவரான இராமரும் உபதேசிப்பவரான சிவபெருமானும் பரமாத்மாக்கள்.

சிவகீதை சாத்வீகம் சகலருக்கும் உரியது. பகவத் கீதை அரசர்க்கு மட்டும் உரியது. தாமசமானது. ஆகவே சாத்வீக நூலான சிவகீதையே உயர்ந்தது..

பகவத் கீதையுடன் மட்டுமின்றி ஈசுர கீதை, பிரம்ம கீதை போன்ற நூல்களுடனும் சிவகீதை நூலின் ஆசிரியர் சிவகீதையை ஒப்பிட்டுள்ளார். ஈசுரகீதை சனகாதி முனிவர்களுக்குச் சிவன் உபதேசித்தது. பிரம்மா, ரிஷிகளுக்கு உபதேசித்தது பிரம்மகீதை. கங்கையைக் காட்டிலும் காயத்திரி மந்திரத்தைக் காட்டிலும் சிவகீதை புனிதமானது என்று ஆசிரியர் கூறுகிறார்.

சிவகீதையை மொழி பெயர்த்தவர் பிராமணர் என்பதால் நூல் பிராமணர் பேச்சு நடையில் உள்ளது. ஒருமை பன்மை வேறுபாடு இன்றி எழுதப்பட்டுள்ளது. ஐ என்ற எழுத்து வருமிடங்களில் 'அய்' என்றே எழுதப்பட்டுள்ளது. சுவடியில் இருந்தபடியே பதிப்பிக்கப்பட்டாலும் பத்தித் தலைப்பு மட்டும் புதிதாகச் சேர்க்கப்பட்டு ள்ளது.

அச்சில் வராத ஒரு நூல் அச்சில் கொண்டுவர அடியேன் விரும்புகிறேன். இனி ஒவ்வொரு அதிகாரத்தின் சுருக்கத்தைக் காண்போம்.

1. **சிவபத்தியோக மகிமை**

சிவபெருமான் இரகுநாதருக்கு உபதேசித்த அருளுரை சிவகீதை என்று வழங் கப்படும். சிவபக்தர்களுக்குப் பயன்படும்படி வேதாந்தியான தியாகராஜ சாஸ்திரியார் தமிழில் மொழிபெயர்த்தார். பத்மமென்னும் மகாபுராணத்தில் உத்தரபாகத்தில் கூடிய சிவகீதை என்னும் உபநிடத நூலே ஈண்டுள்ள நூலாகும். வடமொழியில் கூடிய அந்நூலை பரமசிவேந்திர சரஸ்வதி சுவாமிகள் ॥ என்பவர் 'சிவகீதாதாத்பரிய பிரகாசி கை' என்ற பெயரில் வட மொழியில் எழுதியிருந்தார். இதையே தியாகராஜர் தியாகராஜர் மொழி பெயர்த்துள்ளார் 'சிவகீதா தாத்பரியபிரகாசிகை' அச்சானதாகத் தெரியவில்லை. ஆயின் அதன் தமிழ் மொழிபெயர்ப்பு தற்போது அச்சாகிறது.

இக்கீதையின் முதல் அத்தியாயம் சிவபத்தியோக மகிமையாகும். சிவகீதை யின் சிறப்பு இதில் விளக்கப்படுகிறது. பகவத் கீதையுடன் ஒப்பிடப்படுகிறது. புராணங்களில் சிவபுராணங்களின் சிறப்பும் கூறப்படுகிறது.

சிவகீதையில் உள்ள 16 அத்தியாயங்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. வேதவியாசர், சூதமுனிவர், முனிவர்கள், அகத்தியர் ஆகியோரைக் காண்கிறோம்.

சிவார்ப்பணத்தின் சிறப்பு, சிவபத்தியின் மகிமை, சிவனின் பெருமை ஆகியன இவ்வதிகாரத்தில் சுருக்கமாகக் குறிக்கப் படுகின்றன.

2. **அகத்தியர், இராமர் சம்வாதம்**

அகத்தியர் இராமரிடம் சென்று விரசையென்னும் தீக்ஷையை அவருக்குப் பண்ணினார். துக்கத்தில் இருந்த இராமருக்கு அகத்தியர் தேகத்தின் அழிவையும்

ஆத்மாவின் அழிவற்ற நிலையினையும் விளக்குகிறார். யாருக்கு யார் உறவு என்பதையும் கூறுகிறார். மூன்றுவித பிறப்பினையும் மாயையின் ஆற்றலையும் அழகாக இயம்புகிறார். இராமர் உபாய பிரக்ஷரூபமென்னும் அத்தியாயம் என்றும் இரண்டாம் அத்தியாயம் கூறப்படுகிறது.

**3. விரசாதீக்ஷை**

மூன்றாம் அத்தியாயத்தில் அகத்தியர், இராமரிடம் உபதேசிக்கிறார். இராவணனின் ஆற்றல் கூறப்படுகிறது. இராமரைச் சிவதேசோமயமாக இருக்குமாறு அகத்தியர் அறிவுறுத்துகிறார். எதிரியின் வலிமை, காலதேச சூழ்நிலைகள், சிவனின் அநுக்கிரகம் ஆகியவை இவ்வதிகாரத்தில் கூறப்படுகின்றன.

**4. இராமர் பண்ணின சிவோபாசனா விதியும் சாக்ஷாக்காரமும்**

இராமர் கோதாவரி நதியருகே சிவலிங்கத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, திருநீறணிந்து உருத்திராட்சமாலை தரித்துக் கொண்டு சிவநாமத்தைச் செபித்தார். கடுமையான விரதம் பூண்டார். இறைவனை அர்த்தநாரீசுரனாக மனதிலே பாவனைப் பண்ணியபடி சிவமயமாய் நான்கு மாதம் வரை இருந்தார். இறைவன் தேஜோ மயமாய் காட்சி தந்தார். இராமர் அஞ்சி செய்வதறியாது நின்றார். வில்லம்பைக் கீழே விட்டார். இதைக் கண்டு இலக்குமணன் வருந்தினார். பின் இராமர் சகத்திர நாமங்களைக் கூறியபடி இறைவனை வணங்க, இறைவன் குளிர்ந்த சந்திரன் போன்று ஐந்து திருமேனியுடையவராய் காட்சி தந்தார். சிவன் மட்டுமின்றிக் கைலாயத்துள் உள்ள அனைவரும் காட்சி தந்தனர். ஏடு சிதலம் என்பதாலும் ஒரு ஏடு இல்லாததாலும் இறுதிப் பகுதி இல்லை. ஐந்தாம் அதிகாரத்தின் தொடக்கமும் அறிய இயலவில்லை.

**5 அஸ்திர பிராத்தியென்னும் அதிகாரம்**

சிவபெருமான் மகாபாசுபதத்தை இராமருக்கு வழங்கி அதன் மகிமையை விவரிக்கிறார். பின் தேவர்களை அழைத்து அவர்களுடைய ஆயுதங்களையும் இராமருக்கு வழங்கக் கட்டளையிடுகிறார். தேவர்கள் வானரத்தன்மை (குரங்குக ளாக) எய்தி இராமருக்கு உதவுமாறு ஆணையிடுகிறார். தேவர்கள் ஆயுதங்களை வழங்கிய பின்பும் இராவணாதிகளைத் தம்மால் எவ்வாறு வெல்ல முடியும் என இராமர் இறைவனிடம் கேட்கிறார். அட்டுழியம் செய்து கொண்டிருப்பதால் இராவணாதிகளுக்கு அழிவுக்காலம் நெருங்கிவிட்டது என இறைவன் கூறுகிறார். முக்கிய நேரத்தில் மட்டுமே அஸ்திரம் பயன்படுத்த வேண்டும் என்பதையும் சிவன் இராமருக்கு அறிவுறுத்துகிறார். சகலமும் சிவமயம் என்பது இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது.

### 6. விபூதி யோகம்

சிவனுடைய வல்லமை குறித்து இராமர் கேட்க, சிவன் தம்முடைய வல்லமையை விவரிப்பதுடன் தம்முடைய இயல்புகளையும் விவரிக்கிறார். அங்கிங்கெனாதவன், சர்வவியாபி, இதய தெய்வம், ஓங்காரமானவன், அனந்தன், தூலமானவன், சூட்சுமமானவன், வித்தானவன், ஈசுரன், ஏகன், கர்த்தன், பகவான், மகேசுவரன், மகாதேவன் என்றெல்லாம் சிவன் வழங்கப்படுவதை இவ்வதிகாரத்தில் காண்கிறோம். பரமாத்வின் பண்புகளை விபூதி யோகத்தில் காண்கிறோம்.

### 7. விசுவரூப தெரிசனம்

இராமர் தமக்கேற்பட்ட சில ஐயங்களை வினவ, இறைவன் பதில் அளிக்கிறார். வித்தாகவும் - மரமாகவும் - உப்பாகவும் - நீராகவும் - ஒளியாகவும் சிவன் விளங்குகிறார். சிவன் இராமருக்கு விசுவரூப தரிசனம் தருகிறார். இறைவன் வாயைத் திறந்த அளவில் பிரபஞ்சம் யாவும் தெரிகின்றது. அதைக் கண்டு இராமர் அஞ்சுகிறார். நடந்தது, நடப்பது, நடக்கபோவது யாவும் தெரிகின்றன. கிருஷ்ணனின் வாயை திறந்து காட்டிய போது உலகம் யாவும் தெரிந்ததாகப் பாகவதத்தில் உள்ள பகுதியுடன் இது ஒப்பிடத்தக்கதாகும். ஏகனாகவும் அநேகனாகவும் சச்சிதானந்த சொரூபனாகவும் இறைவன் விளங்குவதை இராமர் கண்கூடாகக் காண்கிறார். பின் வழிபடுகிறார். விசுவரூப தெரிசனத்தை முடித்துக் கொள்ளுமாறு இராமர் வேண்ட, இறைவனும் அங்ஙனமே செய்கிறார். இறைவன் குருவாகவும் இராமர் சீடனாகவும் இவ்வதிகாரம் தொடங்கிக் காண்கிறோம்

### 8. வயிராக்கிய யோகம்

எட்டாவதாக உள்ள வயிராக்கிய யோகத்தில் தேகத்தின் தோற்றம், அழிவு போன்றவற்றை இராமர் வினவ, சிவன் விளக்குகிறார். நாலுவித தேகங்களைக் கூறி தேவர்களுக்கே உரிய ஐந்தாவதான மானசமென்னும் தேகமும் கூறுகிறார். முதலில் ஆண் பெண் கலவியில் சேரும் (சுக்கிலம் சுரோணிதம் கூடியது) சராயுசம் விவரிக்க ப்படுகிறது. பிறவித்துயர், யௌவனத்துயர் போன்றவை விளக்கப்படுகின்றன.

பிறப்பு, இறப்பு தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இராட்டினத்திரிகை என்ற உவமை இங்குக் கையாளப்படுகிறது. குழந்தை உருவாவது தொடங்கி வளர்ந்து இறப்பது வரை உள்ள மருத்துவ ரீதியான உடல்கூறு அமைப்பு வாசகருடைய திருவாசகத்திலும் திருமூலரின் திருமந்திரத்திலும் சித்த வைத்திய நூல்களிலும் காண்கிறோம். இவ்வதிகாரத்திலும் உடல்கூறு அமைப்பினைக் காண்கிறோம்.

*குடம்பை தனித்தொழிய புள்பறந் தற்றே*
*உடம்பொடு உயிரிடை நட்பு*

என்ற குறளின் உரைநடைப் பகுதி இவ்வதிகாரத்தில் பார்க்கிறோம்.

### 9. சரீர நிருபண யோகம்

சரீர நிருபண யோகத்தில் பிரமத்தின் இயல்பு, சத்து, சித்து, பஞ்சபூதம், ஆறுகோசம், ஞானேந்திரியங்கள் போன்றவை விளக்கப்படுகின்றன. மூவகையான உடம்பு, மனம், மலம், வாதம், பித்தம், சளி போன்ற தன்மை விளக்கப்பட்டு சரீரத்தின் மீது பற்று வைக்க வேண்டாம் என்று இவ்வதிகாரத்தின் முலம் சிவன் உபதேசிக்கிறார்.

### 10. சிவசொரூபம்

சிவ சொரூபம் என்ற பத்தாவது அதிகாரத்தில் இராமர் எழுப்பும் பல வினாக்களுக்கு இறைவன் விடையளிக்கிறார். இறைவன் எங்கும் எதிலும் இருப்பார். உலகம் யாவும் இறைவனிடமே ஒடுங்கும். இருப்பினும் சுகதுக்கம் உயிர்களுக்கேயன்றி பரமாத்வாவிற்கில்லை. எல்லா உயிர்களிலும் இறைவன் இருப்பினும் கண்ணாடி முன் நின்ற உருவம், கண்ணாடியில் உள்ள அழுக்கு போன்றவற்றால் உருவத்தில் இருந்து பிரதிபிம்பம் மாறுவதுபோல் இறைவன் விளங்குவான் என்று காண்கிறோம். ஆத்மாவின் இயல்புகள் விவரிக்கப்படுகின்றன.

### 11. உபாசனா மார்க்க யோகம்

பதினொன்றாவதாக உள்ள உபாசனா மார்க்க யோகத்தில் தூலதேகம், யாதனா தேகம், நரகம், சொர்க்கம் ஆகியவை விளக்கப்படுகின்றன. கருமமே அவரவர் பிறவிக்குக் காரணம். உபாசனை, கர்மம் என்ற இரண்டு வழியற்று மூன்றாம் கதி செல்பவர் பெறும் துயர் விளக்கப்படுகிறது. ஆனந்தத்தின்தன்மை, இயல்பு இவ்வதி காரத்தில் காண்கிறோம். ஞானியின் மேன்மை அதிகாரத்தின் இறுதியில் பார்க்கி றோம்.

### 12. உபாசனா விதி

பன்னிரண்டாவதாக உள்ள உபாசனா விதி அதிகாரத்தில் இராமர் கேட்கும் கேள்விகளுக்கு இறைவன் விடையளிக்கிறார். சம்பத்து, சஞ்சரகம், அத்தியாசம், ஆரோபம் என்ற நான்கு உபாசனைகள் விளக்கப்படுகின்றன.. யோகத்தின் முறை, சித்தில்லாதவன் நிலை, பரமபதம் ஆகியவை காண்கிறோம். பொல்லாத குதிரை சாரதிக்கு அடங்காதது போல் இந்திரியங்கள் சித்தில்லாதவனுக்கு அடங்கா. இதயக் கமலத்தில் இறைவனைத் தியானிக்க வேண்டும்.

இவ்வதிகாரத்தில் பரமசிவன் உருவ அமைதி காண்கிறோம். சுத்தபடிக வடிவராய், உமாதேகராய், புலித்தோல், நீலகண்டம், முன்றுகண், சடை, சூட்சும சந்திரரேகை, நாகம், யக்ஞோபவீதம், புலித்தோல் உத்தரியம், வரதம், அபயம், மான், மழுதரித்த நாலுபுயமும் கோடி சூரியபிரகாசமும் கோடி சந்திர சீதளமும் சந்திர சூரியாக்கினியென்னும் கண்களும் புன்சிரிப்பும் உள்ள செந்தாமரை மலர் போலும்

திருமுகமும் திவ்விய தேகமும் சருவாபரணமும் உடையவராய் சதாசிவன் இருப்பர் என்று காண்கிறோம். சதாசிவனின் இயல்பு விரிவாகக் கூறப்படுகிறது.

### 13. மோக்ஷ ஞானயோகம்

பதிமூன்றாவது அத்தியாயத்தில் மோக்ஷ ஞானயோக விவரிக்கப்படுகிறது. சாலோகம், சாமீபம், சாரூகம், சாயுச்சியம், கைவல்யம் என்ற ஐந்தின் தன்மை விளக்கப்பட்டு கைவல்யத்தின் சிறப்பு விதந்தோதப்படுகிறது. வேதாந்த சித்தினைக் குருமுகமாக கேட்கவேண்டும். வேதாந்தத்தை விளக்க பாம்பும் பழுதையும் உதாரணம் காட்டப்பட்டு மோட்சம் எது என்பது விளக்கப்படுகிறது.

### 14. பஞ்சகோச விவேகம்

பஞ்சகோச விவேகம் என்ற பதினாலாவது அத்தியாயத்தில் இராமர் பல சந்தேகங்களை வினவ சிவன் பதில் அளிக்கிறார். இதில் ஆத்மாவின் இயல்பு விளக்கப்படுகிறது. ஐம்பூதம், தேகம், பஞ்சகோசம் ஆகியவை காண்கிறோம். எதைச் செய்தாலும் சிவார்ப்பணமாகச் செய்தலின் சிறப்பு விதந்தோதப்படுகிறது.

### 15. சிவபத்தி யோகம்

சிவபத்தி யோகம் இவ்வதிகாரத்தில் விளக்கப்படுகிறது இறைவனுக்கு யார் பிரியன்? புனித தலங்களில் இறைவனை உபாசிப்பவர் என்று பார்க்கிறோம். காசி, தண்டகாருண்யம், ஸ்ரீசைலம், புண்டரீகபுரம் போன்ற தலங்கள் புனித தலங்கள். சிரசிலும் கண்டத்திலும் உருத்திராட்சங்களைத் தரித்துக் கொண்டு ஐந்தெழுத்து மந்திரம் செபிப்பவன் இறைவனுக்குப் பிரியன். ஸ்ரீருத்திரங்களைச் சொல்பவன், உபநிடத சூத்திர வேதாந்தத்தைச் செபிக்கிறவன், ஓம் என்ற அட்சரத்தை உச்சரிப்பவன் ஆகியோர் இறைவனுக்குப் பிரியர்கள். ஓம் என்ற சொல்லுக்கு நாலு மாத்திரையுண்டு. ஓங்காரத்தைச் செபிப்பவன் முத்தன் ஆவான். புஷ்பம், பழம், கிழங்கு, பத்திரம், செலம், இவைகளைப் பிரணவத்தினாலே இறைவனுக்குச் சமர்ப்பணம் பண்ணினால் அது ஒவ்வொன்றும் கோடிகுண அட்சயமாகும். கொல்லாமை, சத்தியம், திருடாமை, சௌசம் இந்திரிய நிர்க்கிரகம், வேதத்தியானம் பண்ணுகிறவன் பிரியன். பிரதோஷ காலத்தில் கோயிலுக்குப் போய் அர்ச்சிப்பவன் இறைவனை அடைவான். அஷ்டமியில், சதுர்தசியில், பௌர்ணமியில் அமாவாசை யில் அர்த்தராத்திரியில் விசேஷித்து கிருஷ்ணபக்ஷத்தில் பூசிக்கிறவன் இறைவனுக் குப் பிரியன். ஏகாதசியில் உபாசனம் பண்ணி, சோமவார இரவில். பூசிக்கிறவன் நல்ல பக்தன். பஞ்சாமிர்தத்திலே பஞ்சகவ்வியத்திலே புஷ்போதக மருசோதிக மிதுகளிலே அபிஷேகம் செய்தல் சிறப்பு. பால், நெய், தேன்,, கருப்பஞ்சாறு, பழுத்த மாம்பழம் ரசம், இளநீர் இவைகளில் ஒன்றில் ருத்திர மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு அபிஷேகம் செய்பவன் இறைவனுக்குப் பிரியன். நால்வகை முத்தியும் அதிகாரத்தின் இறுதியில் கூறப்படுகின்றன.

**அதிகாரி நிரூபம்**

சிவபூசைக்குத் தகுதியுடையவர்களைப் பதினாறவாது அத்தியாயத்திலே காண்கிறோம். அஞ்ஞானக்குருடன் செவிடன், ஊமை, சிவபூசையில்லாதவன், விபூதி உருத்திராட்சம் அணிவதில் பக்தியில்லாதவன், சிவவேடதாரிகள் ஆகியோர் நீங்கலாக மற்றவர்கள் அதிகாரிகள் என்று பார்க்கிறோம். புனிததலத்தில் தேகம் விடவும் புண்ணியம் செய்திருக்க வேண்டும். எந்தெந்த விக்கிரகங்களில் இறைவன் பிரசன்னம் ஆவார் என்று இராமர் கேட்க இறைவன் விரிவாக விளக்குகிறார். வெண்கலம், பஞ்சலோகம், கல் இவைகளில் கூடிய விக்கிரகம் வீட்டில் வைத்து பூசிக்கக் கூடாது. மீறினால் துயரமே மிகும். சிவனைப் பூஜிக்கும் எளிய முறையினை இறுதியில் காண்கிறோம். வில்வத்தின், இலைகள் அல்லது பழங்கொண்டு அர்ச்சிக்க நற்கதி பெறலாம். வில்வ மரத்தின் கீழே இருந்து எந்த மந்திரம் செபித்தாலும் பயன் கிடைக்கும். ஆத்ம பூசைக்குச் சரியான பூசை உலகில் இல்லை. சண்டாளரும் பூசித்துச் சாயுச்சியம் அடையலாம். கிழக்கு அல்லது வடக்கு முகமாய் இருந்து செபம், பூசை செய்ய வேண்டும். அட்சமாலை 108 உத்தமோத் துமம். நூறுமணி உத்தமம். 50 மத்திமம். 54-ம் அப்படியே. பிறகு ஆசனம் கூறப்படுகிறது. மந்திரம், செபம் போன்றவை பின்பு காண்கிறோம்

சிவகீதையைச் சூதமுனிவர் மற்ற ரிஷிகளுக்குச் சொல்லி முடிப்பது போல் கீதை முடிகிறது. ரிஷிகள் கீதையைச் சொன்ன சூதரைப் போற்றுகிறார்கள். ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் சிவகீதை எந்த நூலின் அடிப்படையில் எழுதப்பட்டது என்ற விபரம் காண்கிறோம். சிவகீதையின் ஆசிரியரான பரம சிவேந்திரர் தம் வித்யாகுருவான ஸ்ரீமன் நாராயண சுவாமிகளைப் பல இடங்களில் வணங்கியுள்ளார். சிவகீதையைத் தமிழில் மொழி பெயர்த்த தியாகராச சாஸ்திரி யார், ஸ்ரீமன் நாராயணபரமசிவேந்திர சுவாமியை இறுதி அதிகாரத்தில் வணங்கியுள் ளார். அதாவது குருவையும் குருவுக்கு குருவையும் ஒருங்கே நாராயண பரமசிவேந் திர சுவாமி என்று கூறி வழிபட்டுள்ளார்.

வேதாந்தத்தை விளக்கும் வேறோர் கீதை, சிதானந்தர் என்பவரால் செய்யப் பட்டது. இந்தக் கீதையின் சுருக்கத்தைக் காண்போம்.

தத்துவ சாரம் என்கிற கிரந்தத்தைச் சிதானந்தசாமி தமிழில் நூலாக்கிச் சச்சிதானந்த யோகிக்கு உபதேசித்தார். அதற்குச் சிதானந்த கீதை என்று பெயர்

செனன மரண ரூபமான சம்சாரத்தைத் தாண்டுவதற்கு உபாயம் இந்நூலில் கூறப்படுகிறது. எங்கும் எப்போதும் வியாபித்திருக்கும் பிரம்ம சைதன்னியம் ஒன்றுண்டு. அது சச்சிதானந்த சொரூபமாக இருக்கும். அந்தப் பிரம்மத்தினிடத்தில் வசனத்துக்குள் அடங்காத மாயையுண்டு. செலத்தில் பாசி போன்றும் ஆகாயத்தில் மேகப்படலம் போன்றும் மாயை இருக்கும்.

மாயைக்குச் சத்துவம், ராஜசம், தாமசம் என்ற மூன்று குணம் சமானமாய் இருக்கும். அந்தக்காரமாயை மூலப் பிரகிருதி எனவும் வழங்கப்படும். மாயை

பிரபஞ்ச சிருட்டிக்கு இச்சித்த வேளையில் சத்துவ குணம் அதிகரிக்கும். சத்துவத்திற்கு அவ்வியத்துவம் என்ற பெயருமுண்டு. அதிலே தோன்றும் பிரம்ம சைதன்யத்திற்கு ஈசுரன் என்று பேர் சொல்லப்படும். இவர் பிரபஞ்சத்துக்கு அபீஷ்டதானம். இவரே சிருட்டி, திதி, சங்காரம் என்ற முத்தொழிலுக்கும் கர்த்தா.

அவ்வியத்துவம் பேதிச்சுக் கொண்டு ரசோகுணம் பிரதானமாக மாயை மகத்துவம் வெளிப்படும். அவ்வியத்துவம் மறைந்து கிஞ்சித்துவம் என்ற ரசோகுண மாயை வெளிப்படும். ரசோகுண மாயைக்கு இரண்யகருப்பம் என்று பேர் சொல்லப்படும். இது பிரபஞ்சத்துக்கு ஆங்கார ஸ்தானமாக இருக்கும்.

மகத்துவ மாயை பேதிச்சு தமோகுண மாயை வெளிப்படும். இது அகங்கார மாயையாகும். இதில் உள்ள பிரம்ம சைதன்னியத்திற்கு விராட புருஷன் என்று பெயராகும். இவர் விருட்சமாய் விளங்குவார்.

அகங்கார கற்பத்தில் இருந்து ஐம்பூதங்கள் தோன்றி ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்ட தாமரையிலை போல் தோன்றும். மூலப்பிரகிருதி முதல் பிருதிவி வரை ஒன்றுக் கொன்று குறைந்து கொண்டு ஒன்பது பிரகாரங்கள் போல் தோன்றும். பிரபஞ்ச சிருட்டிக்குத் தேவையான அளவு திரிகுணாத்மங்களான பஞ்ச பூதங்களைக் கொண்டு ஈசுரன் படைப்பார். பஞ்ச பூதங்களால் ஆன பதினான்கு லோகம் சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பீசம் என நான்கு வகையில் தேவ, மனுஷ, யட்சர் முதலானவர் தோற்றுவிக்கப்படுவர். பஞ்ச வாயுக்கள் பிரமாண்டமெல்லாம் வியாபிக்கும். சரீரங்களிலும் இருக்கும்.

பிராணவாயு மேல் சுவாசமாய் இருக்கும். கீழ்சுவாசமாக அபான வாயு விளங்கும். வியான வாயு சர்வசரீரம் ஆகும். உதான வாயு கண்டத்தில் இருக்கும். சமான வாயு நாவி ஸ்தானத்தில் இருக்கும்.

பட்சணமெல்லாம் விழுங்கல், சுவைத்தல், பருகுதல், நக்கல் என நால் வகைப்படும். பிராணன், பாணன் என இரு தீபாக்கினி கூறப்படுகிறது. இந்திரியங்கள் தன்மைகளைக் காண்கிறோம். வன்னிய தேவதை இந்திரன், உபேந்திரன், அதிதேவதை, ஆதி தேவதை போன்றோர் தொழில்கள் விளக்கப்படுகின்றன.

சத்துவகுண அமிசையில் ஆகாசமுதலாகக் கொண்டு சூரியன், சந்திரன், விஷ்ணு, பிரம்மா, சம்பு ஆகியோர் தோன்றுவதும் அவர்கள் தொழில்களும் விவரிக்கப்படுகின்றன. அக்கினி, வாயு, வருணன், அசுவினி ஆகியோர் தோற்றம் பின் காண்கிறோம்.

ஈசுரன் எவ்வளவோ செய்தும் பிரம்மாண்டம் செடமாக இருந்ததால் தமோ குணமாயையின் அதிபரான விராட புருஷனை அழைத்து தூல சரீரங்களைப் படைக்கும்படி ஈசுரன் கூறினார். சாக்கிர பிரபஞ்சத்துக்கும் தூல சரீரங்களுக்கும் விராடபுருஷன் அபிமானியாய் இருந்தார். அப்போதும் பிரம்மாண்டம் செடமாக இருந்ததால் இரண்ய கருப்பரை அழைத்து மகத்துவம் என்கிற மாயையுடன் கூடி இருக்குமாறு அறிவுறுத்துகிறார்.

சூட்சும சரீரங்களுக்கும் சொப்பன அவத்தைக்கும் இவர் அபிமானியாய் இருந்தார். இருந்தும் பிரம்மாண்டம் செடமாக இருந்ததால் ஈசுரன் இரண்டு தேகங்களையும் சைதன்னிய முண்டாக்கி வைத்தார். காரணசரீரங்களுக்கும் சுழுத்தி யவத்தைக்கும் அபிமானியாய் இருந்தார். பல்வேறு சரீரங்கள், கன்மேந்திரி யங்கள், அவத்தைகள் ஆகியவை விளக்கப்படுகின்றன.

முத்தனாகும் பாங்கும் கூறப்படுகிறது. விதேக முத்தியின் இலட்சணம் கூறியபின் சிதானந்த கீதையைப் படிப்பதின் பயன் கூறப்படுகிறது.

வேதாந்தத்தை மிகவும் சுருக்கமாக இக்கீதை குறிப்பிடுகிறது. சைவர்கள் குறிப்பிடும் மாயாவாதம் அல்லது மாயை விவரிக்கப் படுகிறது. மாயையில் இருந்தே இறைவன் உட்பட யாவும் தோன்றுவதாக இதில் காண்கிறோம்.

தஞ்சையில் அடியேன் பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில் கீதை என்ற பெயரில் பல ஓலைச் சுவடிகளை அரசிற்காகச் சேகரித்துள்ளேன். பகவத் கீதை, ஈஸ்வர கீதை, பிரம்ம கீதை, கீதாசார தாலாட்டு, கீதை சுருக்கம் போன்றவை அவைகளில் சிலவாகும். இவை யாவும் தமிழில் கூடியவையாகும். கீதை சுருக்கம் தவிர ஏனையவை செய்யுள் நடையில் கூடியவை ஆகும். பல்வேறு கீதை நூல்களை ஆய்வு செய்தும் உள்ளேன்.

பகவத் கீதையை முன் மாதிரியாகக் கொண்டே எஞ்சிய கீதை நூல்கள் இயற்றப் பெற்றன எனலாம். பகவத் கீதைக்கு ஆதிசங்கரர் பாஷ்யம் செய்தது போல் சிவகீதைக்கு ஆதிசங்கரர் மரபில் வந்த ஒருவர் பாஷ்யம் செய்தது சிறந்த செயலாகும்.

பகவத் கீதைக்குப் பல மொழிகளிலும் பல பதிப்புகள் வந்துள்ளன. சிவகீதைக்குச் சில பதிப்புகளே முன்பு வந்துள்ளன. தற்போது சிவகீதை நூல் கிடைப்பது அரிதாகும். எனவே சிவகீதை தற்போது வெளிவந்தால் பலருக்கும் பயன்படும் என்று
கருதுகிறேன்.

சிவகீதையின் சுருக்கத்தைத் திருவாவடுதுறை ஆதீன குருமகான் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிகரிடம் அடியேன் குறிப்பிட்டபோது சைவ அன்பர்களுக்குப் பயன்படும்படி நூலாக வெளியிடுங்கள் என்று கூறி ஆசி வழங்கினார்கள்.

## முதல் அத்தியாயம்
# சிவபக்தியோக மகிமை

### சிவகீதையும் தியாகராஜ சாஸ்திரியும்

சகல லோக குருவாயும் சருவந்தியருமான சாம்பசிவனையும் சமஸ்த விக்கின நிவார காரண மகாகணபதியையும் சகல வித்தியா சொரூபியான மகாசரசு பதி தேவியையும், சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துச் சகல வேதாந்த சாரமாயும் சங்கி சாரதாரமான பிரம்மாதுவித ஞானத்தையுண்டாக்கி சுத்த கைவல்லிய மென்னும் பரமுத்தியைக் கொடுக்கிறதாயும், சகலரையும் சம்சாரத்திலே நின்றும் கரை யேற்றும் பொருட்டு இரகுநாதருக்குச் சிவனாலே உபதேசிக்கப்பட்ட பரம ரகசியமான சிவகீதா சாஸ்திரத்தைக் குருகடாக்ஷத்தினாலே சைவ வேதாந்த ஞான சம்பன்ன ரான தியாகராச சாஸ்திரியார் சிவ பக்தர்களுக்கு உபகார்த்தமாக வடமொழியைத் தமிழ் வாக்கியத்திலே அட்டவணையிட்டார்.

### சிவகீதை ஓர் உபநிடதம்

இந்தச் சிவகீதா சாஸ்திரம் சகல உபநிடதம். சகல வேதாந்த ஞானசாரம். மற்றொரு கீதைகளைப் போலே மேலெழுந்த வாரியாகத்தான் - சம்மோகம் பொது வாய்த்தான் - சாதாரணமாய்த்தான் - ஒரு அர்த்தத்தையும் சொல்லாது. சகலத்தை யும் சகல சம்மதமாய் உபநிடத பிரமாணமாகவே தத்துவ ரகசியங்களையும் விவரிச்சுச் சொல்லும்.

### சங்கராச்சாரியரும் கீதையும்

தன்னைத் தானே வியாக்கியானமாய், விசாலமாய், நிரூபணம் பண்ணு கையால், மற்றொரு பகவத்கீதை முதலானது போல் நானாற்தாருக்கும் இடம் கொடுக்கிறது தான் - நானாற் சந்தேகங்களை உண்பிக்கிறது தான் - நானாசிரியர்கள் பரம விஷயங்களின் அர்த்தம் தோற்றுவிக்கிறது தான்; எடுத்தார் கைப்பிள்ளை போலேயும், இழுத்தபடியெல்லாம் இழுக்கப்படாமையால் சகல ரகசியங்களையும் சொல்லத்தக்க கதையெல்லாந்தானே சாங்கமாய் சொல்லிக் கொண்டே வரும். ஆகையாலே சருவக்கிஞ் ஞானர்களாய், சங்கராச்சாரியார் முதலான பூர்வாசிரியர் கள் இதற்கு பாஷ்யத்தைப் பண்ணவேணு மென்கிறது தேவையில்லாமையால் பண்ணினவர்களல்ல அதெப்படியென்றால் முப்பத்தி இரண்டு உபநிடதத்திலே - ஈசம் கேனம், கடம், பிரசனம், முண்டகம். மண்டுக்கியம், தைத்திரியம், ஐத்ரேயம், சாந்தோக்கியம், பிரகதாரனியம் இந்தப் பத்து உபநிடதத்தே கடினமாகையால் இதுக்கே பாஷ்யம் சங்கராச்சாரியார் செய்தார். மற்ற இருபத்திரண்டுக்கும் செய்யவில்லை. அதனாலே அந்தப் பத்துமே முக்கியம். மற்ற இருபத்திரண்டு முக்கிய மல்ல வென்றுதான், மகா வாக்கியமான உபதேசமான உபநிஷத்தல்ல

வென்பதுதான், ஒக்குமோ வென்னில், எளிதை விடுவார்கள்; கடினத்தை வியாக்கியானம் பண்ணுவார்கள்.

**புராணங்கள்**

இப்படியே புராணங்களிலேயும் கடினமாகையால் பாகவதம், விஷ்ணு புராணம், சூத சங்கிதை, இப்படிப் பட்டதுக்கே வியாக்கியானம் பண்ணினார்கள் அல்லாமல், மற்ற புராணத்துக்கு வியாக்கியானம் பண்ணவில்லை. அதனாலே மற்றதுகள் புராணமல்லாமல் போச்சுதோ? பாரதத்திலேதான் பகவத்கீதைக்கும் வியாசக் கோட்டுக்கும் பாஷ்யம், டீகை பண்ணினார்கள் அல்லாமல், மற்றதுக்கும் பாஷ்யம் பண்ணினார்களே அப்படியானால் சிவகீதை வேதாந்த சாஸ்திரம் எப்படியாம்? சகலருக்கும். எளிதான அர்த்தமே சொல்லுகிறதாகில் பரம ரகசியமாகத் தத்துவத்தைச் சொல்லமாட்டாரதென்னத் தேவை இல்லை. இந்தச் சாஸ்திரத்திலே பதார்தங்களாகிய ரகசியமும் சாங்கியமாய்ச் சொல்லுகிறதிலே சந்தேகம் இல்லாமல் அப்போது எளிதென்பானென்னில் சகல உபநிடதத்து மூலமாகவும் சொல்லும். அந்த அர்த்தத்தைத்தானே வியாக்கியானம் போலே விவரிச்சு நிரூபிக்கும். இந்த அர்த்தம் அந்தந்த அத்தியாயத்திலே அர்த்தம் நிரூபிக்கும் அளவில் வெளியாம். இதுக்கு ஏது சொல்லுகிறோம்.

**பரமசிவனும் விஷ்ணுவும்**

இந்தச் சாஸ்திரத்தை உபதேசிக்கிறவர் சருவக்கிஞ்ஞரான சாக்ஷாத் பரம சிவன். கேட்கிறவர் ஒன்றான மகாவிஷ்ணுவின் பரிபூரண அவதாரமான இரகுநாதர். இதிலே சொல்லுகிறவர் சத்தியம். பிறத்தியாரைப் போதனைப் பண்ணுகிற சத்தியும் தட்டுத் தடையில்லாமல் கேட்கிறவருடைய சத்தியும் அப்படிப் பட்டதே. அந்த உபதேசம் எதா சாதாரணம்? எப்படி ஆம்? ஆகையாலே இந்தச் சாஸ்திரத்தைச் சிவன் இராமருக்குக் கேட்பித்த பின்பு,, இந்தச் சாஸ்திர அர்த்தத்தை நன்றாக அறிந்தீரோ? என்று சிவன் கேட்டது தான், அதற்கு இரகுநாதர் தம்மிடத்தில் ஞானத்தை அதன் நிறைகுறைகளை மற்றொரு சந்தேகங்களை; ஏதாகிலுங் காண்பிச்சதாய் அதற்குச் சிவன் மறுபடி ஒவ்வப்பண்ணினதுதான், அதனில் அருவருப்புப் பட்டது தான் இதுகளொரு பிரசங்கமுமில்லை. சிவன், பரிபூரணமாய் அனுக்கிரகிச்சதே. இராமர், அப்படியே தத்துவ ஞானத்தை நன்றாக அடைந்து கிருத கிருதியரானதே அல்லாமல், மற்றொரு பகவத் கீதாதிகளைப் போல் தொந்தரை இல்லை.

**அர்ச்சுணனும் கிருஷ்ணனும்**

பகவத் கீதையிலேயானால் கிருஷ்ணர் அர்ச்சுணருக்கு உபதேசம் முடிந்த வுடனே, அர்ச்சுணரே நன்றாகக் கேட்டீரோ? நன்றாய் அறிந்திரோ? என்று கிருஷ்ணன் கேட்டது தான், அஞ்ஞானப் பிராந்தி சந்தேகங்கள் அற்றதோவென்று வெகுவாய் கேட்டதும் அதற்கெல்லாம் செப்பமாக அர்ச்சுணன் சொன்ன உத்தாரமும், அர்ச்சுணர் "தேவரீர் உபதேசித்த கீதா தத்துவம் ஒன்றுந் தெரியவில்லை. திரும்ப எனக்கு அனுக்கிரகிக்க வேண்டும்" என்று அர்ச்சுணர் தொந்தரவிட்டதும், கிருஷ்ணர் திரும்ப

அப்படி உபதேசிக்கப்படாதென்று பட்டதோ கடையும் அர்ச்சுணரை வெகுவாக ஏசினதும் மறுபடி மறைவாய்த்தானே உபதேசம் செய்ததும் இப்படி அனேகம் புனை சுருட்டுகள் அப்படி இதிலொரு தொந்தரையுமில்லை. பட்டுக் கத்தரிச்சது போல் நிஷ்கர்ஷையாகவே சகல நிட்சயமும் காண்பிக்கிறது. இது சிவகீதைக்கு முந்தின அதிசயம்.

**பரமாத்மா**

இன்னும் பகவத் கீதைக்கு அர்ச்சுணர் கேட்கிறவர். கிருஷ்ணர் உபதேசிக்கிறவர். உபதேசிக்கப்படுகிற பரமாத்மாவும் நிச்சயம். அப்படிப்பட்ட அந்த மகாவிஷ்ணுவான இராமரே இந்த உபதேசம் செய்து கொள்ளுகிறவர். உபதேசம் செய்கிறவர் ஒன்றான பரப்பிரமமான பரமசிவன். இப்படிப்பட்ட இந்தச் சிவகீதை மற்றொரு கீதைகளுடனே ஒப்பிடப்படாது.

**கீதைகள்**

கூர்ம புராணத்தில், ஈசுர கீதை, சிவ உபதேசமாகிலும் சனகாதிகளான முனியேசுராளைக் குறித்து உபதேசஞ் செய்யுஞ் சாத்திரம். சூதசம்ஹிதையில் பிரம்ம கீதையும், ரிஷிகளும் உபதேசம் செய்த சாஸ்திரம். இப்படி அந்தக் கீதைகளை அவரவர்களுக்கு உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது. இதைப் போலே சிவன் சொல்லு கிறதாயும் விஷ்ணு கேட்கிறதாயும் வேறொரு கீதை இல்லை. இது இதற்கு இரண்டா வது அதிசயம்.

**புனிதமானவை**

இன்னும் கங்கை என்றும் கீதை என்றும் காயத்திரி என்றும் இந்த மூன்றும் பவித்திரமான வஸ்து. இந்த மூன்றிலேயும் கீதை அதிசயமானது. எவ்வாறென்னில் கீதை ஞானப் பிரதம ஞான சத்தியின் அம்சம். சிவனுடைய ஞான சொரூபம். கங்கை யானால் தரும சொர்க்காதி, புண்ணிய லோகங்களைக் கொடுக்கும். முத்தியைக் கொடாது. ஞான சொரூபமல்ல. செடம். பிரகிருதமான சமுத்திரத்தை யடைகிறது. கீதையானால் பிரம்மானந்த சமுத்திரத்தையடைகிறது. அந்தக் கங்கை இதற்கொப் பில்லை. காயத்திரி மகா மந்திரமும் ஞான வித்தையானாலும் நாலு வர்ணத்தையும் நாலாச்சிர (மும்) சில. சிறிது தினம், ராசதகுணமுஞ் சில. சிறிது தினம் தாமத குணமுஞ் சில. எந்தெந்த தினம் எந்தெந்த குணங்கள் அதிகமாக மிஞ்சி இருக்குமோ; அந்தந்தத் தினங்கள் அக்குணமுஞ் சில. கற்பங்கள் ரசோ குணத்திலே ராசதங்கள். தமசிலே - தாமசங்கள். சத்துவத்திலே - சாத்துவிதங்கள். இப்படியிருக்கையில் தாமச கற்பங்களிலே பிரம்மாவின் புத்தி, ருத்திரர் மகிமை, தமசினாலே மிச்சம். அந்தக் கற்பங்களும் அதனாலே தாமசங்கள். அந்தக் கற்பங்களிலே பிரம்மாவின் புத்தி, தமசினாலே கமம்பட்டு அந்தப் புத்தியுடனே, அந்த கற்பங்களிலே தாமசமான சில புராணங்களைச் சொல்லுகிற படியினாலே - சில புராணங்கள் தாமசங்கள் அதிலே சொல்லப்பட்ட மற்றதையும் இரட்சிக்க யோக்கியமல்ல. சாத்திராதிகள், பிராமணர்கள் சன்னியாசிகளுக்கு காயத்திரியினிடத்திலே அதிகாரமில்லை.

கீதையானால் சகலருக்கும் அதிகாரம். சகலரையும் ரக்ஷிக்க யோக்கியம். இது மூன்றாமதிசயம்.

**வைணவர்கள்**

இப்படிப்பட்ட இந்தச் சிவகீதையைத் தாமச சாத்திர மென்றும் சாத்துவித செனங்களுக்குக் கிராக்கியமல்ல வென்றும் வைஷ்ணவாள் சொல்லுவார்கள். அது அப்படியன்றோ? மச்ச புராணத்திலே இது நிரூபிச்சிருக்கிறது. சதுர்முக பிரம்மாவி னுடைய முன்னூற்றறுபது தினமே முன்னூற்றறுபது கற்பமென்றறிகிறது. அதிலே சிறிது தினங்கள் பிரம்மாவுக்குச் சத்துவ குணமுஞ் சிவ பத்தி - சிவோபாசனை - சிவ ஞானங்கள், தாமச பலன்கள் ஒழிய சாத்துவிக பலமான ஞானமுத்தியைக் கொடுக்கமாட்டாது. விஷ்ணு பத்தி உபாசனை - விஷ்ணு ஞானங்கள் சாத்துவிகப் புராணங்களிலே சொல்லுகையால், சாத்துவிகத் தருமம். அதுவே சாத்துவிகர்களுக்கு முத்தி கொடுக்கும் அல்லாமல், இந்தச் சிவ புராணங்களில் சிவகீதை முதலானது முத்தி சாத்திரமல்ல. இந்த ஞான முத்தி, ஏதுமல்ல. இதன் பலம் நல்ல முத்தியு மல்ல வென்று பூர்வ பட்சம்; இதுக்குச் சித்தாந்தம் சொல்லுகிறோம்.

**முதல் கர்த்தா**

இந்தத் தாமசத்துவம் புராணவஸ்தாவான - பிரம்மாவுக்கோ புராணங்க ளுக்கோ?. அல்லது சிவனுக்கோ முந்தின பட்சங்கூடாது. பிரம்மா புராணங்க ளுக்குத்தான். சுயங்கர்த்தாவான வஸ்தாவல்ல. சகலவித்தைகளுக்கும் பரமேஸ்வர ரே முதல் கர்த்தா. அவர் சிவனாகட்டும் விஷ்ணுவாகட்டும் ஒன்றான பரமாத்மா தானாகட்டும். அவர் தாமசரல்ல. அது சகல சாஸ்திர சித்தாந்தம். அவர் சிருட்டி தோறும் - பிரம்மாவுக்குச் வித்தைகளையும் முதல் தரம் கற்பிச்சுப் பிறகு பிரம்மா வுக்குமபதேசித்து அவரைக் கொண்டு சகலருக்கும் வித்தைகளை உண்டாக்குகிறார்.

**சிவபுராணம்**

இப்படி இருக்கையில், முதல் அப்படிப்பட்ட சருவேசுரன் சொன்ன புராணங்களிலே சிவபுராணம் மட்டும் தாமசம். மற்றது, சாத்துவிகம் என்றும் வகை சொல்லுகையிலே ஏது கூடாது. இந்தத் தாமசத்துவமே சொன்னது. அதுவே ஏது வென்னில் அப்போ அந்தத் தமசினாலே பிரம்மாவைப் போல் பரமாத்மாவுக்கும் புத்தித் தடை சொல்லி வேண்டி வர அவருக்கு, சருவஞ்ஞுத்தும் எடுபட்டுப் போம். அவருக்கு வேண்டாம். பிரம்மாவுக்கு தாமசத்துவமிருக்கட்டும் என்னில் முதல் பரிசுத்தமான வித்தைக்கு இடைநடுவே வாத்தியார் தோஷத்தினாலே பிசகுமாத்திர மல்லாமல் அவர் தோஷம் இதை அண்டாது இன்னும் வஸ்தானவன் பிராந்தித் துட்டனாகிலும் வாக்கியத்தன்றத்தினாலே பாதகமில்லாததில் பிரமாணமாகிறது. பிராந்தித்தோஷமில்லாதவன் வாக்கியமாகிலும் வாதித்தாற்தமாகில் பிரமாணமா காது. இந்தப்படி வஸ்தாவான பிரம்மா தாமசராகிலும் அவர் வாக்கியமான இந்தச் சிவபுராணங்களும் சிவமகிமையைச் சொல்லும். சுருதிபிரமாணங்கட்கு ஒத்தபடியார் பிரமாணமாய்க் கிராக்கிய யோக்கியமல்லாமல் தாமசமாய் அக்கிராக்கியமாகாது.

ஆகையால் வசத்தாவான பிரம்மாவுக்குத் தாமசத்துவமென்னும், முதற்பட்சங் கூடாது. தாமசமென்னும் இரண்டாம் பட்சமும் கூடாது. வசத்தாவினுட தோஷமும் வாச்சியார்த்தத்தின் தோஷமும் அடையாமல் புராணம் சுயமாகத்தானே தமோ தோஷமடையிறதாகில் சிறிது புராணங்கள் தாமசமும் சிறிது சாத்துவிகமென்றும் வகை கொள்ளக் கூடாது.

**விஷ்ணு புராணம்**

விஷ்ணு புராணங்களெல்லாம் சாத்துவிகம். சிவ புராணங்களெல்லாம் தாமசமென்று சொல்லுகிற போது விபரீதமாகவே திருப்பியுஞ் சொல்லலாம். ஒரு புறம் பத்ம புராணத்திலே பூர்வ பாகத்திலே விஷ்ணு மகிமையும், உத்தர பாகத்திலே சிவமகிமையும் சொல்லுகிறபடியால் இரண்டும் பிரமாணந்தான். இரண்டு பிரமாணம் தானாக வேண்டியும் வரும்.

**சிவபுராணமும் பிராமணரும்**

சிவ மகிமையைச் சொல்லும் புராணம், சிவ மகிமையைப் பிரதிபாவிக்கிற வேதங்கள் போல் சாத்துவிகமாம். தாமசமாகாது, காந்தத்திலே சிவன் சாத்துவிகா சுத்த வடிவு. சுத்த ஞானம் உபதேசிக்கிறவர். அவரைச் சொல்லும், பத்துச் சிவபுராணமும் மிகவும், சாத்துவீகம். அதுவே பிராமணருக்குக் கிராக்கியம். விஷ்ணு வுள்ளே தமசு. வெளிக்குச் சத்துவம்: தாமசவடிவு, கப்டு. நித்திரை, காமக்குரோதம், இதுகளுடையவர். இவரைச் சொல்லும் விஷ்ணு புராணங்கள், க்ஷத்திரியாருக்குக் கிராக்கியம். பிரம்மா ராக்ஷதர், அவர் புராணங்கள் ராக்ஷதம். அது வைசியருக்கு யோக்கியம். மற்ற சென்ற ஆக்கினை ஆதிபுராணங்கள் சுகுணாற்று மகமான சூரியர்க்கியைச் சொல்லும் புராணம். அது மீச்சிராதிகாரம்.

**சாத்வீகம்**

இப்படி விசேஷமாக விவரித்து சிவபுராணங்களுக்குக் காந்தத்திலே சாத்வீகத் தன்மை சொல்லுகையாலும் சிவபுராணங்கள் தாமசமென்னும் இரண்டாம் பட்சம் கூடாது. அப்படியே சிவன் தாமதரென்னும் மூன்றாம் பட்சமும் கூடாது. சிவன் தாமதரென்கிற விடத்திலே ஏது வென்ன? தாமசென்னும் அஞ்ஞானக்கமல்லோ? அதன் காரியமான நித்திரை. அலட்சியம் மோகமுதலானதோ அதிலே சிவனிடத் திலே அஞ்ஞானத்தான் அதன் தடைதான் சொல்லப் பிரமாணமுமில்லை. சொன்னா லும் சிவன் சருவஞ்ஞான சகலலோகர்க்கு குருவாயிக்கிறவர். சனகாதிகளுக்கு தக்ஷிணாமூர்த்தி வடிவாய் ஞானமுபதேசிக்கிறவர் என்னும் முறை இடுகிற சகலவேத வேதாந்த சாஸ்திர புராணங்கள் கட்டோடே எடுபட்டுப்போம்.

**தாமசம்**

நித்திரை மோகாதி தோஷங்களும் சகல புராணங்களிலேயும் விஷ்ணுவின் டத்திலேயும் அவர் அவதாரங்களிலேயும் முறையிடுகிறது. பிரசித்தமாகவே

இருக்கிறது. அதெல்லாம் லோகா அநுக்கிரகார்த்தமென்னும் மாயா விலாசமென்றும் பரிகரிக்க வேண்டினவழி, சிவனிடத்திலேயானால் அந்தச் சாங்கைக்கிடமேயில்லை. பரிகாரந் தேவையில்லை. அப்படி யானாலும் சங்கரர் கர்மம் கூறும். அதைப் பண்ணுகிற சிவன், அதனாலே தாமசரென்கிறது கூடாது. லோகத்திலே வேடர் முதலான பேர் நிட்காரணமாக சங்கராணம் பண்ணுகிறது போலே, சிவன் பண்ணுகிற சங்காரம் அனுசித விஷயமென்று கூடாது. ஒரு கிஞ்சிஞ்ஞனான ராசாவுமல்லோ. உத்தர் உத்தங்களை நன்றாக விசாரித்து நிக்கிரக்கிறான். சருவஞ்ஞரான சிவன் ஒன்றும் விசாரியாமல் அனுசிதமாகவே நிக்கிரகம் பண்ணுகிறார், என்கிறதும் பிரமாணமல்ல. மூர்க்கப் பேச்சாகிலும் சங்காரத்துவேஷ மூலம் அதற்கு தமசு மூலமென்றுஞ் சொல்லக்கூடாது. சங்கர ரக்ஷனையும் சங்கார ரஷிக்கத்தக்க பேர்களிடத்தில் ராகமூலமாகையால் அந்தச் சங்கரக்ஷணமும் சாத்துவிகம், விஷ்ணு தர்மம் என்கிறது, எடுபட்டுப்போம் லௌகீகமான சங்கர க்ஷணத்திலே - ராகம் - பட்ச பாதமும் மூலமாகிலும் பரப்பிரமத்தினிடத்திற் சங்கராட்சனை தன்மை பட்சபாத மூலமல்ல. சீவ கர்மா தீனமென் (கிற போது) லௌகீக சங்காரமே துவேஷ மூலமல்லாமல் பரமாத்மாவிடத்திலே சஞ்சாரம். அப்படியாகாமையாற் பரம சிவனிடத்திற் சங்கரானந்த தன்மையும் சிவசஞ்சார காலத்தில் அந்தக் கர்மா தீன மல்லாமல் துவேஷ மூலமாகாதபடியால் அதற்கு சக, காரியமான தாமசத்துவமும் தோஷமல்லவென்று பரிகாரமும் சரி ஆகையால் சிவனுக்குத் தாமசத்துவமும் சொல்லப்படாது.

**ஞான சாத்திரம்**

இப்படிப் பரம சாத்துவீகமாய் சிவ புராணங்களைத் தாமச மென்று மூர்க்கன் சொல்லுவதற்கு மூலமேது? அப்படிப் பரம சாத்துவீகமாய் மிகவும் மோட்ச பிரதானமான அந்தச் சிவ புராணங்களில் சிவ கீதா சாஸ்திரத்திலே சகல செனங்க ளுக்கும் பள்ளமடையாகப் பிரவிருத்தியும் ஆதரவு இல்லாமையிலே மூலந்தான் ஏதென்னில் அனாதியாய் வந்த கர்ம துர்வாசனையும் அதன் மூலமான அனாதி சிவத்துவேஷமும் அதை உறுதியாக்கிறதே. ததீசி, கௌதமர், பிருகு, கண்ணுவர், துர்வாசர், நந்திகேசுர பகவான், இந்தச் சன முனீசுரர்களுடைய சாபமும் இப்படிச் சகலருக்கும் சிவபத்தி - சிவஞானம் - சிவகளிடத்திலே ஆதரவில்லாமையிலே மூலம் ஆகையால் சிவ புராணங்கள் பிரமாண மூர்த்தன்னியங்கள். அதனிடத்திற் சிவ கீதா சாஸ்திரமும் மகா சாத்துவீகம். சுத்த ஞான சாத்திரம். சர்வோபநிஷத்சாரம். சகலருக்குக் கிராக்கியமென்று நின்ற இந்தச் சிவ கீதை பதினாறத்தியாயம்.

**கீதையில் உள்ள அத்தியாயங்கள்**

அதிலே முந்தின அத்தியாயம் சூதர் இருஷிகளுக்கு சம்வாதம் சிவபத்தி மகிமையினுரை. இரண்டாவதும் மூன்றாவதும் அகத்தியர், இராகவ சம்வாதம். அதிலே இரண்டாமத்தியாயம் இராமற்கு அகத்தியர் உபதேசம். மூன்றாவது விரசா தீட்சாப் பிரகாரம். நாலாமத்தியாயத்திலே இராமர் பண்ணின, சிவோபாசனாவிதியும் சிவ சாட்சாக்காரமும் ஆகும். அஞ்சாம் அத்தியாயத்தில் சிவானுக்கிரகமும் - சகல வாலாபமும் ஆகும். ஆறாம் அத்தியாயத்திலே விபூதியோகம். ஏழாமத்தியாயத்திலே

விசுவரூபதெரிசன பதினோறாவது பன்னிரெண்டாவது யோகம். எட்டாம் அத்தியாயத்திலே வயிராக்கியத் தியோக நிரூபணம். ஒன்பதாம் அத்தியாயத்திலே சரீர சொரூப நிரூபணம். பத்தாவது சீவாத்மா சொரூபஉபதேசம். உபாசனா மகாத்மிய யோகம். உபாசனாவிதி. பதிமூன்றாவது மோக்ஷ ஞான யோக நிரூபணம். பதினாலாவது ஞான ஏதுவான பஞ்ச விவேகமென்னும் நிருத்தியாசன நிரூபணம். பதினைஞ்சாவது ஞான சாதன சிவபத்தி யோகம். பதினாறாவது சிவபத்தி ஞானாதி காரி நிரூபணம்.

**சூதமுனி**

இந்தப்படி பதினாறு அத்தியாயங்களுக்கு அர்த்த கோர்வையிலே முதலத்தி யாயம், எப்படியென்னில் உரோமக ரிஷி புத்திரரான சூதர், நைமிசாரன்னியத்தில் இருக்கும் மகா முனியீசுபரர்களைக் குறித்துச் சிவகீதையென்னும் ஞான சாத்திரத்தை உபதேசிக்கும் பிரகாரம். வாருங்கோள் முனி ஈசுபரர்களே! சருவ லோகேசுரரான பரம சிவனுடைய அநுக்கிரகத்தினாலே சுத்த கைவல்லியம் என்னும் பரமுத்தியைக் கொடுப்பதாயும் சம்சார துக்கமென்னும் ரோகத்தைப் போக்கும் மருந்தாயும் இருக்கிற சிவஞானத்தை உங்களுக்கு உபதேசிக்கிறேன்.

**ஞான நூல்**

இந்த ஞானத்தினாலே சீவன் முத்தியை யடையலாம். அல்லாமல் மற்ற கருமானுஷ்டானத்தினாலேதான் - தானங்தபசினாலேதான், மோக்ஷத்தை அடைய மாட்டான் என்பது சகல வேதாந்த வாக்கியங்களுடைய சித்தாந்தம். அஞ்ஞானத் தைச் சொல்லுகிற சாஸ்திரங்கள் வெகுவானாலும் சிவகீதையைப் போல மற்றொரு ஞானசாத்திரமில்லை. இந்தச் சிவகீதை ரகசியத்தும் ரகசியம். ஆகிலும் இதை நினைத்த மாத்திரத்திலே சாசுவதமான முத்தியை உண்டாக்கிற, ஞானத்தைக் கொடுக்கும். இந்த சாஸ்திரம் நமக்கு லபித்தப்படி எப்படியென்னிற் சொல்லுகிறோம்.

**வேதவியாசர்**

முன்னே பார்வதியான சிவன், தண்டகாரண்யத்திலே இரகுநாதருக்கு உபதேசித்தார். அந்தப் பிரகாரமே சுப்பிரமணியர் சனத் குமாரருக்கு உபதேசித்தார். அந்தச் சனத்குமாரர், வேதவியாசருக்குச் சொன்னார். அந்த வேத, வியாசர், வேதிர்காச்சிரமத்திலே மிகவும் தயவுடனே எனக்கு அனுக்கிரகித்தார். இன்னும் இந்தச் சிவகீதா சாஸ்திரத்தை ஒருவருக்கும் அதிகாரம் விசாரியாமல் சொல்ல லாகாது. சொன்னால் அவனைத் தேவதைகள் கோபிப்பார்கள் சபிப்பார்கள். இந்தப்படி வேதவியாசர் அனுக்கிரகித்த பிரகாரங் கேட்டு மறுபடி நான் இப்படி கேட்டேன்.

**வியாசரும் சூதரும்**

வாரீர் வேத வியாச பகவானே! இந்த ஞானத்தைக் கேட்ட எவருக்காகிலும் சொன்னால் தேவதைகள் கோப தாபம் பண்ணவும் சபிக்கவும் காரணமென்ன?

அவர்களுக்கு இதனாலே தாழ்வேது? என்று கேட்டதற்கு அவர் உத்தாரம் சொன்ன பிரகாரம். கேளும் சூதரே! பிராமணர் கிரகத்தாச்சிரமத்துடனே அக்கினி கோத்திரம் - முனிற்பசுபெந்தம் சோம முதலான யாகாதிகளை அனுஷ்டிக்கிறவர்கள் அவர்கள். தேவதைகளுக்குச் சகலமுமிஷ்ட காமியங்களைப் கொடுக்கும் காமதேனுக்களாகி லும் பட்சியங்கள், போச்சியங்கள், பேய்கள், இதுகள் முதலான அன்னபானாதிகள் மற்றும் வேண்டிய பதார்த்தம் இதுகளெல்லாம் அக்கினியினிலே ஓமம் பண்ணுவத னாலே தேவர்களுக்குத் தெய்வலோகத்திலே, இச்சித்தப்படியே முடியும்

**காமதேனு**

ஆகையாலப்படிப்பட்ட பிராமணர், தேவர்களுக்குக் காமதேனுவாம். அப்படி கறக்கிற காமதேனுவைக் கல்லாக்கிக் கொண்டு போனது போல யாகாதி கர்மங்களை விட்டு ஞானபரனான பிராமணன் கர்மிய பலன் கொடாமையால் தேவதைகளுக்குத் துக்க ஏதுவாவன். அதனாலே தேவதைகள் மனுஷருடைய மனசிலே புகுந்து விக்கினம் பண்ணுவார்கள். அதனாலே அந்த ஞானத்துக்கு அப்படிப்பட்ட சிவபத்தி ஞானங்கள் வந்தாலும் இடை நடுவே தடைப்படும். அல்லவென்று அந்த ஞானம் சித்தித்தாலும் நிலை கொண்டு அசைவில்லாமல் இருக்க மாட்டாது.

**சிவார்ப்பணம்**

இப்படி தேவவியாசர் அனுக்கிரகித்த பிரகாரம் சூதர் சொல்லக் கேட்டு, நைமிசாரண்யத்திலே ரிஷிகள், இப்படி விக்கினம் பண்ணுவார்களாகில் அதைத் தள்ளிச் சிவாளுக்கு ஞானம் சம்பாதிக்க வல்லமைவர கவை எது? மோட்ச மென்னும் பேச்செடுக்கவே தேவை இல்லை என்றல்லோ வரவேண்டி வரும். அந்தப் படியே தானோ அல்ல வென்று அதைத் தள்ளுகிறதற்கு உபாயமுண்டோ? இல்லை யோ? சூதரே! எதார்த்தமாகச் சொல்லும், என்று கேட்கும் முனி ஈசுபரர்களே! கோடி சென்மங்களிலே தேடப்பட்ட புண்ணியங்களினாலே சிவனிடத்திலே பத்தி பிறக்கும். இட்சாபுர்த்தினங்கள் முதலான கர்மங்களைக் கர்மியார்த்தமாகப் பண்ணாமல் சிவார்ப்பண புத்தியினாலே அனுஷ்டித்தவனைச் சிவன் நன்றாகவே அநுக்கிரகிப்பார். அந்தச் சிவா அநுக்கிரகத்திலே தேவர்கள் விக்கினம் பண்ணாமல் அண்டப் பயந்து ஓடிப் போவார்கள். அதனாலே சிவமகிமையைக் கேட்க அவனிச்சிப்பன். அந்தப்படி கேட்டு விசாரிக்கிறவனுக்கு ஞானம் வரும். அந்த ஞானத்தினாலே முத்தியடைவன். வெகு பேச்சினாற் பிரயோசன மென்ன?

**சிவபத்தி**

யாதொருவனுக்குச் சிவனிடத்திலே திடமான பத்தியுண்டோ அவன் அனேக கோபாவங்களுடனே கூடினவன் ஆனாலும் முத்தனாவன். அனாதரவு, கவடு, பரியாசம், மாயை, இதுகளைச் சாக்கிட்டாகிலும் சிவபத்தி உள்ளவனானால் அந்தியா சனாகிலும் முத்தனாவான். இப்படி சிவபத்தி எந்த முகமாகிலும் அவசியம் வரவேணும். இந்தப் பத்தி இருக்கையிலும் யாதொரு மனுசனானவன், சம்சார

பெந்தத்திலே நின்று முத்தனாக மாட்டானோ? அவனைப் பார்க்கிலும் வேறொரு மூடன் ஆர்? நியமமாகச் சிவனிடத்திலே பத்தியைத்தான் - துரோகத்தைதான் யாதாமொருவன் பண்ணுவானோ அவனுக்கும் பிரசன்னராய் சிவன் அபிஷேகங்களைக் கொடுப்பார். உள்ளங்கை கொள்ளுகிற மாத்திரம் சலந்தான் ஏதாகிலும் ஒரு பாத்திரந்தான் நியமமாகச் சமைக்கிறவனுக்குச் சிவன் மூன்று லோகத்தையும் கட்டளையிடுவார். அதற்கு மாட்டாதவன் நியமமாக, நமஸ்கரிக்கதான் பிரதட்சணந்தான் எவன் பண்ணுவானோ அவனுக்குச் சிவன் பிரசன்னமாவர். அதிலேயும் அசத்தனானவன் தன்மனசிலே சிவனை நின்றாகிலும் இருந்தாகிலும் சிந்திக்கிறவனுக்குச் சிவன் அபிஷேகங்களைக் கொடுப்பார்.

**பேய்த்தேர்**

வில்வ காட்டகத்துச் சந்தனமும் காட்டிற் புஷ்பங்களும் அந்தப் பழங்களும் யாதொரு சிவனுக்குப் பிருதியாயிருக்குமோ அவருடைய சேர்வை பண்ணுகிறதுக்குக் கடினமேது? காட்டிற் காய், இலை முதலான வஸ்துகளிடத்திலே விலையே இல்லை. அப்படி பத்தர்களுக்கு எளியவரான அந்த மகாதேவரை விட்டு பேய்த் தேரிலே தாகமடக்கிறவனே சரி. பின்னே ஏதேன்றால் அனேகங் கோடி செனங்களிலே பாவங்கள் பண்ணின பரம மூடாத்மாக்களுக்கு இந்த அர்த்தம் தோன்றாது. கால தேத தானம், இதுகள் இயமம் இல்லாதே எக்காலம்? எத்தேசம்? எவ்விடமாம்? ஆச்சுவோ அவ்விடத்தே தன் ஆத்மாவைச் சிவனாகத் தியானம் பண்ணுகிறவன் சிவ சாயுச்சியமடைவன். ரிஷி ஈஸ்பரர்களே இன்னும் ஒரு ஆச்சரியம் கேளுங்கள்.

**பரமேசுரர்**

உலோகத்திலே மிகவும் அற்பமான ஆயிசு, அய்சூரியம், சமை இம்மாத்திரம் பதமுள்ள சுள்ளக்கனான ஒரு ராசாவுமல்லோ தன் கீழ்ப்பட்டவனானராசவென்று சொல்லுவனாகில் அவனைப் பரிவார்த்துடனே ஆக்கினை பண்ணுகிறான் பரமேசுரர் ஆனால், சகல லோகங்களுக்கும் கர்த்தாவாயும் அளவில்லாத அய்சூரியமுள்ளவராயும், சகலமாகிய சாமர்த்தியமுள்ளவராயும் அத்தியந்த வெகுமனுஷனையும் நானே சிவனென்று சொல்லுகிறவனை எவனையும் தம்முடனே மிகவும் அய்க்கியமாகவே கூட்டிக் கொள்ளுகிறார். அப்படிப்பட்ட அந்தச் சிவனுடைய ஞானத்தை அனாயசமாக அடையும் உபாயத்தைச் சொல்லுகிறோம். கேளுங்கள்.

**அகத்தியர்**

தர்மம், அதர்மம், கர்மம், மோட்சம், இந்த நாலும் கரை காணலாம் பாசுபதமென்னும் விரதத்தைச் செய்து விச்சா தீக்ஷையைப் பண்ணிக் கொண்டு, பரம ருத்திராக்ஷங்களையும் தரித்துக் கொண்டு, வேத சாரமென்னும் சிவனாம சாஸ்திரத்தைச் செபியுங்கள். அதனாலே மனுஷத் தன்மையைவிட்டு சிவாகார மடைவீர்கள். அதற்கு மேல் சகல லோகங்களுக்கும் சுகம் பண்ணுகிற சாக்ஷாத் சங்கரனே உங்களுக்கு காக்ஷி கொடுப்பார். சாக்ஷாத்கார மோட்சத்தையுங் கொடுக்கப் போறார்.

முன் தண்டகாரண்யத்திலே கும்பத்திற் பிறந்த அகத்திய மகாமுனி ஈசுரர், இரகுநாத ருக்கு எந்த அர்த்தம் உபதேசித்தார். அதை உங்களுக்கு விவரிச்சு உபதேசம் பண்ணுகிறோம். பத்தி யோகத்துடனே கேளுங்கள் என்று நைமிசாரண்யத்தில் இருக்கும் இருசிகளுக்குச் சூதர் சொன்னார்.

**முதல் அத்தியாய முடிவுரை**

இப்படி பத்மமென்னும் மகாபுராணத்தின் உத்தர பாகத்தில் சிவகீதை யென் னும் உபநிடதத்தில் சொல்லப்பட்ட பிரம வித்தையான யோக சாத்திரத்தில் சூத ரிஷி சம்வாதத்திலே "சிவபத்தி யோக மகிமை நிரூபணம் என்னும் முதல் அத்தியாயம் முற்றும்.

ஸ்ரீமன் நாரயணசுவாமி பாதபத்மங்களை அடியேன் சதாகாலமும் சிரசிலே வைத்திருக்கிறேன்.

## இரண்டாம் அத்தியாயம்

# இராமருக்கு அகத்தியர் உபதேசம்

**தொடக்கவுரை**

ரிஷிஈசுரர்கள், சூதரைக் கேட்கும் பிரகாரம். "வாருஞ் சூதரே: அகத்தியர், இரகுநாதரண்டைக்கு ஏது நிமித்தியம் வந்தார்? 'விரசையென்னுந் தீக்ஷை' அவர் இராமருக்கு பண்ணின பிரகாரம் எப்படி? அதன் பிறகு இராமர் அதனாலே என்ன சித்தியையடைந்தார்? அது நமக்குச் சொல்லவேணும்" என்று கேட்கும் ரிஷி ஈசுரர்களுக்குச் சூதர் உத்தாரஞ் சொல்லுகிறார். கேளும்.

**இராமரின் துன்பம்**

கேளும் ரிஷிகளே! செனகராசன் பெண்ணான சீதையை இராவணன் கொண்டு போன விரகதுக்கத்தினாலே நித்திரை ஆகாரங்களை விட்டு அகங்காரமற்று இரவு பகலும் மெத்தப் பரிதாபத்தினாலே பிராணத்தியாகம் பண்ண இச்சிக்குமளவிலே அந்த அவிற்பிராயமறிந்து லோபா முத்திரைக்குப் பதியான அகத்தியர், ராமர் அண்டைக்கு வந்து அவர் மனசைத் தேத்த வேண்டி, சம்சாரத்தின் தன்மையைப் போதித்தார்.

**ஆத்மாவும் தேகமும்**

"கேளீர் இராமரே! ஏன் துக்கிக்கிறீர்? சொல்லும். இராமரே எவனுக்கு எவள் ஸ்ரீ? எவளுக்கு எவன் புருஷன்? ஆத்மாவுக்கோ அல்லது தேகத்துக்கோ? நன்றாக விசாரியும்." தேகமானது சடம். பஞ்ச பூதங்களின் விகாரம். சுவர்; மாத்திரம். அது

ஒன்றும் அறியாது. ஆத்மாவே ஒன்றிலேயும் பற்றில்லாதது. பரிபூரணமானது. சத்து, சித்து, ஆனந்தம். இதுவே வடிவாயுடையது. பிறக்கிறதுமில்லை. இறக்கிறதுமில்லை துக்கமடையாது. சூரியனாவைன் சகல லோகத்துக்கும் சட்சு தன்மையுடனே இருந்தும் அந்தச் சட்சுவின் தோஷங்களினாலே ஒருக்காலும் விகாரமடையாதவன் போல் சகல பூதங்களுக்கும் அந்தராத்மாவாயும், அதன் கர்மமான துக்காதிகளாலே பற்றப்படான். தேகமும் மலப்பிண்டம். சீவனாலே விடப்பட்டு காட்டம்போல் சடமாய் நெருப்பிலே தேகிக்கப் படுகிறது. அல்லவென்றாலும் நாய், நரி, பருந்துகளாலே பொசிக்கப் படுகிறது. அப்படியாகிலும் ஓரறிவு முடையதல்ல.

**பெண்ணும் பேரழகும்**

அப்படிப்பட்ட தேகத்தினுடைய விரகத்தினாலே என்ன சோகம்? இந்த ஸ்ரீயானவள் பெருமையும் தேக கர்மமாகிலும் அதெப்படியென்னில் இவள் பொன்னிறம் அருக்கிதழ் பொற்கற்பூர நிறந்தான் பெருமையும் உயர்ச்சியும் உருளுதலுமுடைய தனபாரத்தினாலே வணங்கின இடையையுடையவள். பருத்த அல்குலும் கனமான சகனமும் செந்தாமரை மலர் போல் பாதமும் பூரணச் சந்திரனைப் போல் முகமும் கோவைப் பழம் போல் சிவந்த அதரமும், நீலோற்பல புஷ்பம் போல இரண்டு கண்களும், கத்துகுயில் போற் கண்டத் தொணியும், மதயானைபோல் நடையும் உடைய இவள் சாக்ஷாத் ரதி. இவன் மன்மதனாலே பீடிக்கப்பட்டவனாய்க் கொண்டு மனுஷன் மயங்குகிற பிராந்திக்குப் பரிகாரமான விவேகத்தைச் சொல்லுகிறேன். இராமா கேளும்.

**சீவனும் சடமும்**

இந்தச் சீவாத்மாவானவன் பெண், ஆண், அலியுமல்ல. நிராகாரணனாய், நித்தியப் பரிபூரணனாய், சாஷியாய், இந்தத் தேகத்திலே இருக்கிறவன். ஆகிலும் இந்தச் சீவன், யாதொருத்தி மிருதுவான வடிவும் அழகும் எவ்வனமும் இதுகளு டையவளாகத் தோன்றுகிறாளோ அது சடமான மலப்பிண்டாகிறுதியாகிலும் அதை ஒன்றைப் பாராது கேளாது, முகராது, தொடாது, இரசியாது. இராமரே நன்றாய் உற்ற பார்வையாய்ப் பாரும். தோல், இரத்தம், மாமிசம், இது முதலான தாதுக்களே இவள் மயம். இந்தத் தேக விருத்தியானது, உமக்குப் பஞ்ச பிராணங்களில் அதிகமா, எப்படி பிரீதி விஷயமாம்? யாதொரு காரணத்தினாலே? இப்படிப்பட்ட தேகங்கள் பஞ்ச பூதங்களில் நின்றும் பிறக்கிறதும் அதிலே இறக்கிறதுமா இருக்கிறது. அந்தச் சரீரங்களிடத்திலே பரிபூரணனான ஆத்மாவானவன் ஒருவனாய் எக்காலமும் பற்றாமலிருக்கிறான்.

**யாருக்கு யார் உறவு?**

இப்படி இருக்கையில், எவள் எவனுக்கு ஸ்ரீ? எவன் தான் எவளுக்குப் புருஷன்?" சகலமும் ஆத்மாவினிடத்திலே பிறக்கையால் - அன்னியோன்ய சகோதரமே சரி. அந்தச் சரீரங்கள் பிறக்கப் பிறந்தது போல் இறக்க இறந்ததுபோல் அந்த உபாதிகளாலே அடையப் பட்டது போல் தோன்றினாலும் கட்டப்பட்ட

அனேகமான கிரகங்களிலே உட்பட்ட ஆகாசம் அந்தக் கிரகங்கள் வெந்து போனாலும் ஆணியடையாது போல் இந்த ஆத்மாவும் தேகங்கள் நாசமடையச் செய்யும். தான் நசியாது. இந்த ஆத்மா ஒருவனைக் கொல்லுகிறவனாயும் ஒருவனாலே கொல்லப்படுகிறவனாயும் இப்படித் தன்னிடத்திலே தான் கொல்லுந் தன்மையும் புத்தியான தன்னிடத்திலே கொல்லப்படுந் தன்மையும் இப்படி அறியிற் இந்த இருவரும் அறிந்தவர்களல்ல. மூடர்களே. சரி - தேகங் கொல்லுது. தேகங் கொல்லப்படுகிறது. ஆத்மா கொல்லுகிறதுமில்லை. கொல்லப்படுகிறதுமில்லை. ஆகையால், இராமரே விருதாவாய் ஏன் துக்கிக்கிறீர்? துக்கத்துக்கு இடமில்லை. இப்படிப்பட்ட தன்னுடைய சொரூபத்தை அறிந்து துக்கத்தை விட்டு சுகமாயிரும்" இப்படி அகத்தியர் வாக்கியத்தைக் கேட்டு மறுபடியும் இராமர் கேட்கிறார்.

**பிரத்தியட்சம்**

"வாரும் அகத்தியரே! இந்தத் தேகத்துக்கும் துக்கமில்லை. ஆத்மாவுக்கும் துக்கமில்லை என்கிறது; அனுபவத்துக் கொவ்வாது பிரத்தியட்சத்துக்குப் பிரமாண மேன்? சீதையினுடைய விரகதுக்கமென்னுஞ் சுடர் என்னை எரிபந்தமாய் எரிக்குது. இந்த அர்த்தம் நீர் இல்லை என்கிறது; பிடிபடவில்லை. என் அகத்திலே விசுவாசம் எப்படி வரவேணும்? ஆகையால் இந்தச் சரீரத்திலே சுக துக்கங்களைப் பொசித்துக் கொண்டு இருக்கிறவன் எவன்? எதனாலே இந்தச் சீவன் பிரதாபிக்கப்படுகிறான்? சொல்லும் " என்று இராமர் கேட்க அகத்தியர் சொல்லுகிறார்.

**மயேசுரர்**

இராமரே கேளும். சிவனுடைய மாயை ஒருவராலேயும் செயிக்கப்படாது. அந்த மாயையினாலே பிரபஞ்சம் மயங்கப்படுகிறது. அந்த மாயையாவது பிரகிருதி. மாயையுடையவர் மகேசுரர் என்றறியும். அவருடைய அவயங்கள் போலிருக்கும் அம்சங்களினாலே சகலமாகியப் பிரபஞ்சமும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. சத்திய ராய், ஞான சொரூபராய், பரிச்சின்னமத்தவராய், வியாபகருமான இந்த ஆத்மா, மயேசுரர் பிராணிகளுடய, இந்த இருதையத்திலே அவருடைய அம்சம் சீவனென் பிக்கிறது. காட்டத்துடனே கூடின நெருப்பிலே நின்றும் பொறிகள் போல அனாதி யான கர்மத்துடனே சம்மந்தத்தினாலே பரமேசுரருடைய அம்சங்கள் அனாதியான வாசனையுடனே கூடிக் கொண்டு க்ஷத்திரியனெனப் பேர் பெற்று மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்று நாலு விதமான அந்தக்கரணத்திலே பிரதிபிம்பமுடைய வர்களாய்க் கொண்டு, சீவதன்மையை அடைகிறார்கள். அவர்களே கர்ம பலன்க ளைப் பொசிக்கிறவர்கள். இந்த யாதனா சரீரங்களிலே விஷயங்களாலே உண்டாகிற சுகத்தைதான் - துக்கத்தைத்தான் பொசிப்பார்கள்.

**மூன்று வித பிறப்பு**

அந்தச் சரீரம் தாவரமென்றும் சங்கமமென்றும் இருவகை.. அதிலே மரம், கொடி மலை, இது முதலான தேகங்கள் தாவரங்கள் கர்பத்திலே உண்டாகிறது. சராயுசமும், முட்டையிலே நின்றும் உண்டாவதென்னும் அண்டசமும், வேர்வையி

லே நின்று உண்டாவதென்னும் கொசு, பேன் முதலான சுவேதச மென்னும், சங்கம சரீரம் மூன்று விதம். இதிலே சரீரங்களின் பொருட்டுச் சிறிது சீவர்கள் யோனி யையடைகிறார்கள். சிறிது பேர் தாபர தன்மையை அடைகிறார்கள். அவரவர்கள் பண்ணின கர்ம பேதங்கள் அதுகளுக்கு ஏதுவான சுகமுடையவனான, துக்கமுள்ள வனென்று அபிமான படுகிறவனே சீவன். இவன் சுபாவத்தினாலே ஒன்றிலேயும் பற்றில்லாதவனாயும் பரஞ்சோதி சொரூபனாயும், சிவனுடைய மாயையினாலே மூடப்பட்டவவனாய் காமம், குரோதம், மோகம், லோகம், மதம் மாற்சரியமென்னும் அகங்கார கர்மங்களான அறிநிஷஜ வர்க்கங்களினாலே அந்தச் சீவனே, சாக்கிரம், சொப்பனம் என்னும் இவ்விரண்டவத்தை யிலேயும் உபத்திரவப் படுகிறான். சுழுத்தி யவத்தையிலே காம முதலானதுகள் இல்லாமையாலே ஆனந்த ரூபனாய் சிவத்தன் மையை அடைவன். அந்தச் சீவனே மாயையினால் மறுபடி மூடப்பட்டவனாய், சுகதுக்கங்களுக்குக் காரணமும் போதித்தான்.

**மாயை**

இந்தப் பிரபஞ்சம், சிவனிடத்திலே கிளிஞ்சலிலே வெள்ளி தோன்றினது போல், மாயையினாலே தோன்றுகிறது. ஆகையினாலே விவேக சித்து அறிவும் இதிலே சுக துக்கங்களைச் சுபாவமாகப் பொசிக்கிறவனொருவருமில்லை. ஆகையால் நிரூபம் அப்படிப்பட்ட விவேகத்தினாலே துக்கத்தை விடும். விருதாவாய் ஏன் பரிதாபப்படுகிறீர்?" என்று இந்தப்படி கூற "அகத்தியரே நம்மிடம் முன்னே நீர் சொன்னதெல்லாம் எதார்த்தமே சரி. ஆனாலும் பிரார்த்த கர்ம மிகவும் பிரபலம். அதுவிடவில்லை. அஞ்ஞானத்தைப் போக்கடிச்ச பிராமணனையும் தொடராது. சேவிக்கப்பட்ட மத்திய மத்தனாக்கிறது போல், இந்தப் பிரார்த்த கன்மம் போகமும் விவேகியானவனையும் விடாது. ஆகையால் பல பேச்சும் பேசியுமென்ன? பிரார்த்த கர்மமே துணையாய்க் கொண்டு மன்மதனானவன் என்னை இரவும் பகலும் மிகவும் வாதிக்கிறான். அவனாகாரமும் கண்ணுக்குப் பிடிபடவில்லை. அவன் நிக்கிரகப்படவு மில்லை. அப்படிப் பட்டவனுடைய உபத்திரவத்தினாலே என்னுடைய சீவாத்மா வானவன் இந்தத் தூல சரீரத்தை விட இச்சிக்கிறான். ஆகையால் சீதையை அடையும் பொருட்டு எனக்கு உபாயத்தைப் பண்ணும்" என்ற அகத்தியரைக் குறித்து இராமா கேட்கிற பிரகாரம்.

**இரண்டாமத்தியாய முடிவுரை**

இப்படிப் பத்மமென்னும் மகாபுராணத்திற் சிவகீதை யென்னும் உபநிடதத்திலே பிரம வித்தையான யோகசாஸ்திரத்தில் அகத்தியர் இராம சம்வாத த்திலே இராமர் உபாய பிரஷமென்னும் இரண்டாம் அத்தியாயம் முற்றும்.

குருவே நமா.

# மூன்றாம் அத்தியாயம்

# விரசாதீக்ஷை

### இராவணனும் இராமனும்

அகத்தியர் சொல்லும் பிரகாரம். லோகத்திலே மனுஷன், காம குரோதங்களுக் குட்பட்டவன். இதமான வாக்கியம் உளங் கொள்ளான். மரிக்க இச்சித்தவனுக்கு மருந்து போல இதமாகி இருக்கப்பட்ட வாக்கியம், தாம் மூடாத்துமாவாய் இருக்கிற வனுக்கு ருசியாது. மகாமாய்கையான இராக்ஷதனாலே அபகரிக்கப் பட்டவளாய், சமுத்திரத்தின் நடுவே கொண்டு போய் வைக்கப் பட்டவளான சீதை, இராமரே! உம்முட அண்டைக்கு எப்படிவரப் போறாள்? இன்னும் சகலமான தேவர்களைத் தன் வாசலிலே குரங்குக் கூட்டம் போலக் கூடி எக்காலமும் வாதிக்கிறான். அவர்களு டைய ஸ்ரீகளும் வெண்சாமரை போட்டுக் கொண்டு அவனுக்குப் பணிவிடை செய்கிறார்கள். சிவனுடைய வரப்பிரசாதத்தினாலே கருவிச்சவனாய், அழிவு அலைச்சலொன்று மில்லாதவனாய், மூன்று லோகத்தை யாளுகிறவன் அந்த ராக்ஷசன். அவனுடைய செயலும் வேரில் இருந்து கிளைத் தெழும்பும் தேகப்படி தினங்கூடும். யாதொருவனுக்கு வெகுபிரகாரமாய் யுத்தத்திலே சகல தேவதைக ளையும் செயித்தவன், இந்திரசித்தென்கிறவன் பிள்ளை;. தேவர்களையும் செயித்தவன். கும்பகர்ணன் என்றும் பேர் பெற்றவனொருவன். திவ்வியமான அக்ஷரங்களுடையவனாய் நெடுங்காலம் இருக்கிறவனாய் விபீஷணனென்னும் இன்னுமொருவன். இந்த இருவரும் அவனுக்குத் தம்பிமார். தேவர்கள், தைத்தியர் களாலே சாதிக்கப்படாததாய் இலங்கையென்று பேர் பெற்றுச் சமுத்திரத்தின் நடுவில் தூர்கத்தானம் அனேகம். கோடி கோடியான சதுரங்க சேனை பரிவாரமும் இப்படிப்பட்ட மகா பராக்கிரமமுள்ள அந்த இராவணனை நீ ஒருவனாய்ச் செயிக்க இச்சிக்கிறது போல நமக்குத் தோன்றுகிறது. அப்படிப்பட்ட இராவணனைக் காம மோகத்தினாலே செயிக்க வேணுமென்னும் புத்தி உமக்கு ஒவ்வாது. இப்படி அகத்தியர் சொல்லக் கேட்டு, திரும்ப இராமர் சொல்லுகிறார்.

### அரச தருமம்

"அகத்தியரே! நான் க்ஷத்திரியன். என்னுடைய ஸ்ரீயை ராவணன் அக்கிரமத்தி னாலே பிடித்துப் போனான். நான் அவனைக் கொல்லாமல் போனால் - பிழைத்து தான் பலனேது? ஆகையால் நீர் நமக்குப் பண்ணின தத்துவ போதனை ஒவ்வாது. காம, குரோத, அகங்காரம், இதுகள் முதலானது என் சரீரத்தை எரிச்சு, சீவனைக் கொல்லத்திரியுது. சத்துருவானனவன் ஸ்ரீயைப் பிடித்துப் போய்ப் பங்கப்படுத்தச்சே, அவனைக் கொல்லாமல், தத்துவ ஞானத்தை, இச்சிக்கிறவனைப் பார்க்கிலும் இந்த லோகத்திலே புருஷோத்தமன் வேறொருவனில்லை. ஆகையால் சமுத்திரத்தைக் கடந்து அவனைக் கொல்லுமுபாயம் அகத்தியரே சொல்லும். உம்மைத் தவிர எனக்கு வேறொரு குருவுமில்லை" என்று ராமர் கேட்க அகத்தியர் உத்தாரம் சொல்லுகிறார்.

**சிவதேசோமயம்**

இப்படியாகில் அளவில்லாதவராய் அம்பிகாபதியான பரமசிவனை நன்றாக வே சரணமடையும். அந்தப் பகவானே உமக்குப் பிரசன்னரானால் சகலமான இஷ்டங்களைக் கொடுப்பார், அவர் அனுக்கிரகம் தவிர பிரமாவினாலேதான், விஷ்ணுவினாலே தான், இந்திராதி தேவதைகளாலேதான், செயிக்கப்படாத அந்த இராவணன் உமக்குக் கொல்லப்படத்தக்கவனல்ல. ஆகையினாலே விரசாதீட்சா கிரமத்தினாலே நாம் உமக்குத் தீட்சை பண்ணுகிறோம். அதனாலே மனுஷத் தன்மையை விட்டுச் சிவதேசோமயமாயிரும். அதனாலே இராவணனை யுத்தத்திலே கொண்டு சகல கர்மங்களையு மடைந்து சகல போகத்தையும் பொசித்து முடிவிலே சிவராயுச்சியத்தை யடைவீர். இதற்கு மேல் சூதர் சொல்லுகிறார். இப்படி அகத்தியர் சொன்ன பின்பு அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, துக்கத்தை விட்டு சந்தோஷமான சித்தத்துடனே இராமர் சொல்லும் பிரகாரம்

**தீட்சை கேட்கும் இராமர்**

"வாரும் அகத்தியரே! நான் இப்போ கிருதார்த் தனானென சகலமான மனோகரமுங் கைகூடித்து. சமுத்திரங்களைப் பாணம் பண்ணின தேவரீர் எனக்கு பிரசன்னரானீர். இனிமேல் நமக்கு அசாத்தியமில்லை. ஆகையால் எனக்கு விரசா தீட்சை பண்ணும் பிரகாரம் உபதேசிக்க வேணும்" என்று கேட்ட இராமருக்கு அகத்தியர் விஸ்தரிச்சுச் சொல்லுகிறார்.

**பாசுபத விரதம்**

சுக்கில பட்சத்துச் சதுர்த்தசியிலேதான், அஷ்டமியிலே தான் சோமவாரத்து டனே கூடிய ஏகாதசியிலேதான் திருவாதிரை நட்சத்திரத்திலே யாகிலும் அந்த விரதத்தை ஆரம்பம் பண்ண வேணும். யாதொரு சாசுவதரான பரமேசுரனை இந்திர னென்றும், வருணனென்றும், ருத்திரனென்றும், கறம்பரானவர்கள் சொல்லுவார் களோ? யோகிகள் பிரம்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் அக்கினி, வாயு, முதலான தேவர் களுக்கும் காரண கர்த்தரான சதாசிவனென்பார்களோ? அப்படிப்பட்ட சிவனைத் தியானித்து, அவருடனே அய்க்கியத்தைப் பாவிச்சுக் கொண்டு அந்த உலோகாக்கினி யனாலே வாக்கியமான அக்கினியைச் சோதித்து, அதிலே சிவாக்கினியைக் கலப்பி த்து, தன் சரீரத்தில் அஞ்சு பூதங்களையும் ஒன்றாகவே காரணேசுவரர் அஞ்சு; மண்டலம் அஞ்சு, அடையாளம் அஞ்சு, குணம் அஞ்சு, விசையம் அஞ்சு, இது முதலான யோக சாத்திரத்திற் சொல்லப்பட்ட யோகப் பிரகாரத்தினாலே பிருதிவி யிலே அஞ்சு, அப்புவிலே நாலு, தேயுவிலே மூன்று, வாயுவிலே இரண்டு, ஆகாச த்திலே ஒன்று. இப்படி பிரிக்கப்பட்ட பிரணாயத்தின் மித்திரா பேதங்களான உகாந்த ங்களாலே அந்த அஞ்சு பூதங்களையும் சோஷித்து, தேகித்து, பிண்டிகரித்து, அதன் பிறகு துவாதே சாந்திர சத்தி மண்டலத்திலும் பெருகும். அமிர்த பிரவாக்கியத் தினாலே தன் தேகத்தை அமிர்த மயமாகச் சீவன் சரீரத்திலே சாக்ஷாத் சிவரூபமாய்த் தன்னைப் பாவித்து, பிறகு இந்தப் பாசுபத விரதத்தை நான் அனுஷ்டிக்கிறேனென்று நியமமாய் விடியக்காலத்திலே சங்கற்பித்து, நன்றாகத்

தாசனம் பண்ணிச் சுகியா உபவாசத்துடனே நல்ல வெள்ளை வஸ்திரம், வெள்ளையுபவீதம், வெண்பூமாலை, வெண்சந்தனம், இதுகள் தரித்துக் கொண்டு, தன்னுடைய சூத்திர பிரகாரமாக அக்கினியைப் பிரதியாபித்து வேதோத்தமான விரசாமந்திரங்களினாலே அந்த அக்கினியிலே ஏகசித்தனாய், சமத்துநெய்சேஷக னலி ஓமம் பண்ணி அந்தக் கர்மத்தை முடித்து, அந்த அக்கினியை மந்திரத்துடனே தன் இருதையத்திலே ஆரோபித்துக் கொண்டு, அந்தச் சிவாக்கினியில் க்ஷமத்தை சகல மந்திரங்களினாலே தன் தேகத்திலே சாங்கமாக ஒத்தளித்து அந்த க்ஷமத் தினாலே நன்றாகச் சரீரத்தை நிர்ப......த திரிபின் தரிக்கவும் இந்த விக்ஷமம் அக்கினிக்கிவீரியம். இதை தரித்தவன் ...... இதிலே சயனம் பண்ணுகிறவன் மகா பாதகங்கள் அதி பாதகங்கள், உற்பாதங்கள் மற்றுமுண்டான பாபங்களிலே நின்றும் விடப்பட்டு, சித்த சுத்தியுடனே ஞான மடைந்து சிவ சாயுச்சியமடைவன். [..... புள்ளியிட்ட இடங்கள் சிதலங்கள்.]

**சிவநாம சாஸ்திரம்**

ஆகையால் கேளும் இராமரே! நீரும் இப்படி தீட்சை பெற்று இந்த விரதத்தை அனுஷ்டித்து இன்னும் வேத சாரமென்னும் பேர் பெற்ற சிவநாம சாஸ்திரத்தையும் உமக்கு தருகிறோம் என்று சொல்லி அகத்தியர் இராமருக்கு அந்தப் பிரகார மெல்லாம் அப்படி செய்வித்து, அந்தச் சாஸ்திர நாமமும் உபதேசித்து இதைச் சர்வ காலமும் செபியும். உமக்கு சாக்ஷாத் சிவன் பிரதக்ஷமாகவே காக்ஷி கொடுத்து, அனுக்கிரகித்து, மகா பாசுபத அஸ்திரத்தைக் கட்டளைப் பண்ணப் போறார். அந்த அஸ்திரத்துக்கு மேல் அஸ்திரமுமில்லை. அந்த அஸ்திர பலத்தினாலே உமக்கு உமக்கு இராவணன் முதலான இராக்ஷதரை சம்காரம் முடிய வேனும் அல்லாமல், வேறொரு உபாயமில்லை. செகத்தையும் சங்கரிக்கிறதாகிலும் அந்தச் சிவனுடைய அஸ்திரம், அந்த அஸ்திர மகிமையினாலேயாகிலும். நீர் இனி மேல் சமுத்திரத்தை சோஷிக்கப் பண்ணப்போறீர். ஆகையால் அந்த அஸ்திரம் லபிக்கும் பொருட்டு சகல லோகங்களுக்குச் சங்கரனான சிவனை நன்றாகச் சரணடையும் என்று இராமருக்கு அகத்தியர் அனுக்கிரகித்த பிரகாரம்.

**மூன்றாம் அத்தியாய முடிவுரை**

இப்படி பத்மமென்னும் மகாபுராணத்திலே சிவகீதையென்னும் உபநிடதத்தில் பிரம வித்தையான யோக சாத்திரத்தில் அகத்தியர் இராகவசம்வாதத்திலே விரசா தீட்சை முற்றும்.

.

மூன்றாமத்தியாயம் முற்றும்.
பரமானந்தம்.

## நான்காம் அத்தியாயம்

# சிவோபாசனாவிதியும் சாட்சாக்காரமும்

### இராமர் கடைபிடித்த விரதம்

இப்படி இராமர், அகத்தியர் உபதேசித்த படிக்கு அவர் அனுஷ்டித்த பிரகாரம் சூதர், ரிஷிகளுக்கு அனுக்கிரகிக்கிறார். அதன் பிறகு அந்த ராமகிரியிலே மிகவும் பவித்திரமான கோதாவரி தீர்த்தத்திலே அப்படி தீட்சை பெற்றுச் சிவலிங்கத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, விபூதியினாலே உத்தூளணைந்தரிபுண்டார், ருத்திராக்ஷச மாலை இதுகளைத் தரித்துக் கொண்டு, மூன்று காலமும் கோதாவரி தீர்த்தத்திலே மேற்படி தானம் பண்ணி, நித்திய கர்மங்களை முடித்து வனத்தில் புஷ்பங்களினாலே சிவனை அர்ச்சித்துக் கொண்டு, விபூதியைத் தானே கவசமாகத் தரித்து கொண்டு, பத்மாசனத்திலே சயனம் பண்ணிக் கொண்டு, வியாபிக்கிற சர்மாசனத்திலே கொண்டு, இரவும் பகலும் மேகாக்கிற சித்தராய், சிவசகத்திர நாமத்தையும், செபித்துக்கொண்டு, ஒரு மாசம் பழம், ஒரு மாசம் உதிர்ந்த பழுப்பிலை, ஒரு மாசம் செலம், ஒரு மாசம் வாயுவே ஆகாரம், உடையவராய்க் கொண்டு சம்தாமாதிகளுடனே இருதைய கமலத்திலே, அர்த்தநாரீசுரர் வடிவாய் சதுர்ப்புயவராய், மூன்று கண்களை யுடையவராய் மின்போலுஞ் சடையைத் தரித்தவராய், கோடி சூரியப் பிரகாசராய், கோடி சந்திர குளிர்மையுடையவராயும், சர்வாபரணங்களையும் நாயகரே உபவீத்தராயும், வியாக்கிரமாசனம் பாதத்தையும் நாலு அஸ்தத்திலே வரதம், அபயம், சூலம், டமருகங்களையும் தரித்தவராய், சந்திர ரேகையும், பஞ்ச வஸ்திரத்திரமுடையவராயும் நித்தியா(னந்த)ராயும் பரிசுத்தராயும், விகாரங்களற்றவராயும், அழிவில்லாதவராயும் இப்படிப் பட்ட பரமசிவனைத் தியானி த்துக் கொண்டு சகத்திர நாமத்தை செபித்துக் கொண்டு, சாங்கமாய் நாலு மாசம் சிவனை உபாசம் (பண்ணி) சிவனை உபாசித்தார்.

### தேஜஸ்

அதன் பிறகு பிற்காலத்தில் மேகங்கள் கோட்டம் போல் பயங்கரமாயும் திருப்பாற்கடலைக் கடையுமளவில் மந்தர பர்வதம் சுன்னற் நாதம் போலவும் மகா தேவருடையபாணிக்கினியினாலே எரியப்படா நிற்கிற திரிபுர கோட்டம் போலவும், ஒரு மகா நாதம் உண்டாச்சுது. அதைக் கேட்டு இராமர் பயந்து ஆகாசத்தைப் பார்க் கிறதுக்கு முன்னாகவே ஒரு மகா தேஜஸ் ஒளியாய் இராமர் கண்டு அந்தத் தேஜஸினாலே மிகவும் பயந்து. திக்குத் திசை கங்குகரை காணாமல் கண்ணை மூடிக் கொண்டு உடனே மகாமோகத்தை யடைந்து உடனே இது அசுரர்களுடைய மாயாப் பிரயோகமென்று நிச்சயித்து உடனே எழுந்திருந்து தம்முடைய வில்லேறிட்டுக் குலவியா அஸ்திரங்கள் - மந்திரங்களினாலே அபிமந்திரிச்சு - வாரனம், அக்கினேயம், சௌமியம், சௌரம், பாற்வதம், விஷ்ணுசக்கரம், காலச்சக்கரம், ரௌத்திர பிரமம், பாசுபதம், கௌபோம் வச்சிரம், வாயு வியம் இப்படி பட்டதுகளையும் மற்றுமுண்டான சாஸ்திரங்கள், அஸ்திரங்களைப் பிரயோகிச்சப்

பின்பு, அந்த அஸ்திரஞ் சத்திரங்கள் மகா மேகம் விட்ட ஆலங்கட்டிகள் சமுத்திரத் தில் அலை போல அந்தச் சிவ தேசிலே சுவரிப் போச்சுது.

**இலக்குமணன் நிலை**

அதன் பிறகு க்ஷணத்திலே அவர் - கையில் இருந்த வில்லும் அம்புறாத் தோனியும் முன்கையிற் சூட்டின உடும்பு தோற் சோடு நழுவி விழுந்தது. அதைப் பார்த்து இலட்சுமணர் இரங்கிக் களைச்சுப் பூமியிலே விழுந்தார்.

**பரமேசுரர் பலம்**

அதன் பிறகு, இராமர் ஒன்றுக்கும் வல்லபமில்லாதவராய்ப் பூமியிலே சாஷ் டாங்கமாய், விழுந்து தண்டம் பண்ணி பயத்தினாலே கண்ணை மூடிக் கொண்டு, சாக்ஷாத் சங்கரனைச் சரணமடைந்து உரக்க சகத்திர நாம தோத்திரத்தையும் உச்சரி த்துக் கொண்டு, திரும்பத் திரும்பப் பூமியிலே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். திரும்பியும் முன்போல வந்த மகா சத்தம் பத்துத் திக்கையும் விளங்கத் தக்கதாக எழும்பிற்று. பூமியலைந்து மலைகள் நடுங்கிச்சு. கடல்கள் புரண்டது. அதன் பிறகு ஒரு க்ஷணத்திலே சந்திரனைப் பார்க்கிலும் குளிர்ச்சியாய், ஒரு காந்தி நிலவைப் போல எழும்பியதைக் கண்டு, கண் திறந்து இராமர் உயர் ஆகாசத்தைப் பார்க்கிறதுக்கு முன்னாகவே ஒரு ரிஷபத்தைக் கண்டார். அதெப்படி என்னில் திரும்பிப் பாற்கடலைக் கடையும் போது அதினின்று எழும்பிய அமிர்த மொத்தை போல மிகவும் நிர்மலமாயும் ருத்திரானந்தமாயும் குருகின கண்டமும் பச்சைத் தலைநிறமான இரண்டு கொம்பும், குருக்கின் காதும், நடுவே கருப்பாய்ச் சுற்றிலும் வெளுப்பாய் இரு பக்கமுஞ் சிகப்பாய்க் கண்ட இரண்டு கண்களும் கண்டத்திலே அலையா நின்ற அலைதாடியும் நவரெத்தினக் கல்லையையும் இரண்டு காதிலும் அடர் நின்ற வெண் சாமரைக் கழுத்திற் தொங்காநின்ற கிண்கிணி நாதத்தினாலே பத்துத் திசையும் கோஷப்பியா நிற்கிறதாய் இப்படியிருக்கும். ரிஷபத்தின் மேலே இருக்கிறவராயும் சுத்தப் படிகம் போலே நிர்மல மலராய்ப் பிரகாசமாயும் கோடி சந்திரன் போல குளிச்சியுடைய (வராயும்) ................. டமும்நாயக ரோசப் பாவிதமும் நாகாபரணமும் நவரெத்தின மாலைகளையும் மின்னிறமான சடாச்சூடச்சடையும் தரித்தவராயும் நீல கண்டத்திலே .................... கலையைத் தரித்தவராயும், சூலம், வச்சிரம், வாள், மழு, அபயம், நாகம், பாசம் ............... பிரளயக் காலாக்கினி, லோத மென்னும் பத்தாயுதங்களையும் தரித்த பத்து கரங்களும் மூன்று கண்களுடைய அஞ்சு திருமுகமும் இந்தப்படி திவ்வியமான திருமேனியுள்ளவராயும் யௌவன முடையவராயும் மகா புருஷராயும், சச்சிதானந்தமூர்த்தி, காரண பரமசிவனையும் அவருக்கிடது பக்கத்திலே அந்த ரிஷபத்தின் மேலேயே இருக்கிறவரையும் பூரணச் சந்திரனைப் போல திருமுகமும் பவளம் போன்ற புன்சிரிப்புடைய அதரமும் நீலோத்பல புஷ்ப நிறமான திருமேனியும் பச்சைக் கல்லுக்குச் சமானமான தேகாந்தி உடையவாளயும், முத்துகளாலே, இழைக்கப்பட்ட திருவாபரணங்களுடனே கங்கை, யமுனை முதலான நதிகளுடனே மூர்த்திகரமாய்க் கூடிகருத்த மேனியை யுடையவராய் சுவேதரசுவதார மந்திரங்களாலே சிவனைத் துதியா நிற்கிற சமுத்திர ராசனையும் அனந்த முதலானவர்களாய் கையிலாச கிரி போலிருக்கிறவர்களாய்க்

கைவல்ய உபநிடதத்தைச் செபிக்கிறவர்களாயும் சிரோ மாணிக்கங்களையும் உடையவர்களாக மகா நாகங்களையும், முன் பக்கத்திலே பிரம்பு கையிற் பிடித்திருக்கும் நந்தி கேசுரரையும் தெற்கே மூஷிக வாகனராய் மகா மலைமேல் இருக்கிற மகா கணபதியையும் வடக்கே மயில்வாகன மேலேறி சண்முகரான சுப்பிரமணியரையும் பக்கங்களிலே பயங்கரமான வடிவுடைய மகா கால சண்டேசுரர்களையும் யிவர்க ........... பிரளய காலத்தில் அக்கினி போல எரிக்கிற காலக்கினி ...................ரரையும் அவர்களுக்கு முன்னதாக மூன்று காலும் இரண்டு கையும் குடிலாகாராமாய்க் கூத்தாடும் பிருங்கியையும் மிகவும் அனேகங் கால், கை, முகம், மூக்கு, காது, கண்கள், முதலான கோராகங்களுடையவரான உருத்திர கணங்கள், பிரமத கணங்கள், பூத கணங்களையும் தங்கள் தங்கள், வசம் பாஷை கணங்களுக்குமுடைய சத்தமா ருத்திரர்களையும் பஞ்சாட்சர மந்திர செபிரர்கள் என்கிற சித்தி வித்தியாதர யட்சராணங்களையும், திவ்விய மந்திரங்களைக் கானம் பண்ணுகிற கின்னர சமூகங்களையும் திரியம்பக மந்திரங்களைச் செபியா நிற்கிற பிராமணர் கூட்டத்தையும் வீணை வாத்தியம் பாட்டு ஆட்டுடனே கூடின.

ஒரு ஏடு இல்லாததால் நான்காம் அத்தியாயத்தின் இறுதிப் பகுதியும் ஐந்தாம் அத்தியாயத்தின் தொடக்கப் பகுதியும் இல்லை

## ஐந்தாம் அத்தியாயம்

# சிவானுக்கிரகமும் சகல வாலாபமும்

**விடைப்பாகர்**

பூட்டப்பட்டதாயும், திவ்விய கஸ்தூரி பரிமளக் குழம்பினாலே பூசிக்கப்பட்டதாயும், கர்ப்பூர அகலத் தீபங்களுடைய வாசனையினாலே இருக்கப்பட்ட வண்டுகளுடையதாயும், வீணைகள் குழல்கள், முதலான வாத்தியங்களிலே இச்சையுடைய கின்னர ஸ்ரீசமுகங்களினாலே நிறைந்திருப்பதாயும் முத்துக்களாலே கோக்கப்பட்ட மேற் கட்டிகள் மேலசையா நின்ற ரிஷபத்து வாசங்களுடையதாயும், மட்டற்ற யானைகளைச் சுற்றிலுமுடைதாயும், திவ்வியமான பட்டு மெத்தை, தலையனையையுடையதாயும், பாரிசாத மாலைகளாலே சோடிக்கப் பட்டதாயும், இருக்கிற மகாசிரோட்டத்தை உடையவரைப் பார்த்து, அந்த ரிஷபத்தில் நின்றும் இறங்கி தேவியுடனே சிவன் அந்த இரதத்திலே பட்டு மெத்தை மேலே எழுந்தருளினார். அப்போது சுற்றிப் பணிவிடை செய்கிற தேவதாதிகள் வீசு(கின்ற) சாமரைகள் திவ்வியமான புஷ்ப விசிறிகளின் காற்றினாலே நீலோகிதரான சிவன் மிகவும் சந்தோஷித்தார். அப்போது அனேகமான திவ்வியனாஷ்திரிகளுடைய கைகளில் இரத்தினக் கங்கணங்களின் தோனிகளினாலேயும், மனோகரமான கால் வெண்டையங்களோசையினாலேயும், வீணைகள் குழல்கள் முதலான வாத்திய கோஷங்களினாலேயும், சங்கீத நாதங்களாலேயும் ஆன குயில்கள் சத்தங்களாலேயும், வெள்ளைப்புறா முதலான அனேகம் பறவைகளுடைய கோலாகலங்களினாலேயும் மூன்று லோகமும் பூரிக்கப்பட்டது. இன்னும் சிவனுக்குப் பூஷ்ணமான மகா

நாகங்களைக் கண்டு மயில்கள் அனேகமான தோகைகளை எடுத்துக் கொண்டு கூத்தாடிற்று.

**சிவன் அருள்**

இந்தப்படி இந்தத் திருதரைக் கண்டு நமஸ்கரிக்கும் இரகுநாதரை எழுப்பி, சிவன் மிகவும் சந்தோஷித்தார். தம்முடைய இரதத்தின் மேலேயேற்றி, கமண்டலச் செலங்களாலே தாம் சுத்தாசமனம் பண்ணி இராமரையும் சுத்தாசமனஞ் செய்வித்து, பிறகு தம்முடைய தொடையில் இராமரை வைத்துப் பிரத்தியேகமான வில்லையும் அதிசயமான அம்புறாத் தோனியையும் மகாபாசுபதமென்று பேர் பெற்ற மகா அஸ்திரத்தையும் கட்டளைப் பண்ணி சிவன் இராமரை ஆக்கிஞாபிச்சார்.

**சிவ தனுசு**

இந்த அஸ்திரம் சகல செகத்தையுஞ் சங்கரிக்கிறதாகிலும் மிகவும் பயங்கரம். இந்த அஸ்திரத்தைத் திருப்பத் தக்கதாய் பிரிதி அஸ்திரம் மூன்று லோகத்திலு மில்லை. பிராண ஆபத்திலே இந்த அஸ்திரமானது பிரயோகிக்கத் தக்கதல்லாமல் சாதாரணங்களான யுத்தங்களிலே இது பிரயோகிக்கத் தக்கதல்ல. அல்ல வென்று பிரயோகிச்சால் சகல செகத்தையும் தொம்சம் பண்ணிப் போகும். இப்படி இராமருக் குச் சொல்லிச் சமீபத்தில் இருக்குஞ் சகல தேவர்களையும் பிறகு ஆக்கிஞாபிச்சார்.

**தேவாஸ்திரங்கள்**

வாருங்கள் தேவரே! இந்த இரகுநாதருக்கு உங்கள் உங்கள் அஸ்திரங்களைக் கொடுங்கள். அந்த அஸ்திரியங்களாலே இராவணனைச் சம்கரிப்பார். நாம் அந்த இராவணனுக்குச் சகல தேவர்களாலேயும் கொல்லப்படாதவனாமென்று வரங் கட்ட ளைப் பண்ணியிருக்கிறோம் ஆகையால் வானரத் தன்மையையடைந்து யுத்தத்திலே மடிந்தவர்களாகக் கொண்டு ராமருக்குச் சகாயத்தைப் பண்ணுங்கோள். நீங்களும் சேரத்தானமாகப் போறீர்கள்.

இந்தப்படி சிவனுடைய ஆக்கினையைத் தேவர்கள் சிரசாய் வகிச்சு அஞ்சலி பெந்தத்துடனே சிவனுடைய பாதார விந்தங்களை நமஸ்கரித்து இராமருக்கு அவரவர்கள் அஸ்திரங்களைக் கொடுத்தார்கள். விஷ்ணு நாராயண அஸ்திரத்தை யும், இந்திரன் இந்திராஸ்திரத்தையும், பிரம்மா பிரமதண்ட அஸ்திரத்தையும், அக்கினி அக்கினியாஸ்திரத்தையும் எமனும் மோகாஸ்திரத்தையும், வருணாஸ்திரத் தை வருணனும், வாயுவஸ்திரத்தை வாயுவும், சௌமிய யஸ்தரத்தை குபேரனும், யஷ்திராயஸ்த்திரத்தை ஈசானரும், சவுராஸ்திரத்தை சூரியரும், சௌமியாஸ்திரத் தை சோமரும், பார்பதாஸ்திரத்தை விசுவ தேவர்களும், வரவஷ்த்திரத்தை அஷ்ட்டவசுக்களும் இந்தப்படி சகல தேவர்களும், தங்கள் தங்கள் அஷ்திரங் கொடுத்த பின்பு தசரத குமரரான இராமர், சிவனை நமஸ்கரித்து அஞ்சலிப் பெந்தனம் பண்ணி பத்தியுடனே வணங்கிக் கொண்டு சிவனைக் குறித்து விண்ணப்பஞ் செய்தார்.

### இராமரின் பயம்

வாருமையா சுவாமி! இந்தச் சமுத்திரத்தை மனுஷனானவன் முதலிலே கடக்க மாட்டான். அதிலே ஒருவராலும் அண்டப் படாததாய் தேவர்களாலேயும் சாதிக்கப்படாததாயும் இலங்கையென்றும் பேர் பெற்ற தீவு. அதிலே மிகவும் பலவா ன்களாயும் அத்தியான பரானாயும் அக்கினி கோத்திரிகளாலும் அனேகமான மாயையை உடையவர்களாயும் புத்திமான்களாயும் சிவபத்தர்களாயும் சிதேந்திரிக ளாயும், அனேகங் கோடான கோடி ராட்சதர் இருக்கிறார்கள். நானொருவன் இந்த இலட்சுமணனைத் தவிர வேறொரு துணையுமில்லை. நான் எப்படி அவர்களை சண்டையிலே செயிக்கப் போறேன்." என்று கேட்ட இராமரைக் குறித்துச் சிவன் உத்தாரஞ் சொல்லுகிற பிரகாரம்.

### அதர்மமும் அழிவும்

கேளும் இராமரே! “இராவண சங்காரத்திலேயும் ராட்சதர்களைக் கொல்லுகிறதிலேயும் நீர் ஆலோசனைப் படத் தேவையில்லை. அவனுக்குக் காலம் சமீபிச்சு இருக்கிறது. தேவர், பிராமணரைப் பீடிக்கிறதிலே மிகவும் அசத்தர்களாக இருக்கிறார்கள். இப்படி அவர்கள் அதர்மமாகையால் அவர்கள் ஆயிசும் பாக்கியமும் வஸ்துவும் இராசஸ்ரீகளைக் கெடுக்க இச்சித்தவன் சத்துருவானவன்.. அதர்மமானா கில் அது செயிக்கிறவனுடைய பாக்கியமாகிலும், சகல, வேத சாஸ்திரங்களை அதிகரித்தவனாகிலும் தர்மவானாகிலும் வினாச காலம் வருமளவில் தர்மமார்க்கத் தில் நின்றும் பிறட்டனாவன். யாதொருவன் தேவர்களை ரிஷிகளைப் பிராமணர் களைப் பீடிக்கிறானோ அவனுக்கு வினாசம் முன்வரும். கிட்கிந்தாப் பட்டணத்திலே தேவர்கள் அம்சங்களாய் மிகவும் பலவான்களாய் ஒருவராலேயும் செயிக்கப் படாதவர்களாய் அனேகம் வானரங்களானவர்கள் பிறந்திருக்கிறார்கள். அவர்கள் உனக்குச் சகாயம் பண்ணுவார்கள். யுத்தத்திலே ............. பவன்யெளி ................ யதாக அந்த ....... இராவணன் இவனைக் கொல்லுகிறது எளிது .................... பரஷ்டனான சத்துருக்களைக் கொண்டு அனேக மரங்கள், மட்டைகள் கொண்டு (கடலிலே) சேதுவைக் கட்டி அதன் மார்க்கமாய் சேனைகள் நடக்கட்டும். அந்தப்படி இலங்கை யைச் சேர்ந்து யுத்தம் பண்ணி, இராவணனைக் கொன்று அபீக்ஷமான சீதையை அழைப்பிச்சுக் கொள்ளும். இன்னும் கேளும் இராமரே.

### அஸ்திரப் பிரயோகம்

எவ்விடத்திலே வெறுஞ் சாஸ்திரங்களாலே செயம் முடியுமோ அவ்விடத் திலே அஸ்திரங்களைத் தொடுக்கலாகாது. அஸ்திரங்கள் இல்லாதவர்கள் இடத்திலே தான் - அஸ்திரங்கள் மட்டான பேர்களிடத்திலே தான் - ஓடிப் போறவர்களிடத்திலே தான் - திவ்வியா ஸ்திரங்களைப் பிரயோகிக்கிறவன் தானே நசிச்சுப் போவான். ஆகாவிட்டாலும் பேச்சினால் பலமென்ன? தத்துவம் சொல்லுகிறோம். கேளும்.

**சகலமும் சிவமயம்**

நாமே இந்தச் செகத்தைச் சிருட்டித்தவர்; ரக்ஷிக்கிறவர்: சங்கரிக்கிறவர். நாமொருவரே இந்தச் செகத்துக்கு மிருத்துவும், மிருத்துவுக்கு மிருத்துவும் சராசரமான சகல செகத்தையும் நாமே கபளீகரிக்கிறவர். நம்முடைய வாயிலே சகல ராட்சதரும் அகப்பட்டிருக்கிறார்கள். நீர் நிமித்த மாத்திரமாகக் கடவீர். யுத்தத்திலே கீர்த்தியையும் அடையக் கடவீர். இந்தப்படி இராமருக்குச் சிவன் அனுக்கிரகிச்சார்.

**ஐந்தாமத்தியாய முடிவு**

இப்படி பத்மமென்னும் மகா புராணத்தில் சிவகீதை யென்னும் உபநிடதத்தில் பிரம வித்தையான யோக சாஸ்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே இராமருக்குச் சிவனிடத்திலும் நின்றும் அஸ்திர பிராத்தியென்னும் அஞ்சா மத்தியாயம் முற்றும்.

குருகடாட்சம் முன்னிற்க வேணும்.
சிவசகாயம்

..

## ஆறாம் அத்தியாயம்

# விபூதி யோகம்

**உமாபதியின் வல்லமை குறித்து இராமர் கேள்வி**

சிவனைக் குறித்து இராமர் கேட்கிற பிரகாரம் வாருமைய்யா! சத்குண பரிபூர ணரான சிவனே! எனக்குத் தேவரீர் சொன்ன வாக்கியத்தினாலே நிறபரிசன்னாகார முடையவராய் ஒரு புருஷராயிருந்து கொண்டு, தேவியுடனே கூடினவராய்ப் பிரமக் கணங்களுடனே கூடி இங்கே திருவிளையாட்டாய் நிற்கிறீர். இப்படிப்பட்ட தேவரீர் எப்படி பஞ்ச பூதங்கள் எப்படித்தான் சராசரமான செகத்துமாவீர்? அபிரிதமான இந்தச் செகத்துக்குப் பரிமிதமான உம்முட சொரூபமென்கிறது ஒவ்வாது. கௌரிபதியான சுவாமியே! தேவரீர் அநுக்கிரகம் என்னிடத்தில் உண்டாகில் இதை வெளியாகச் சொல்ல வேணும்' என்ற, இராமரைக் குறித்து சிவன் அருளிச் செய்கிற பிரகாரம்.

**பஞ்ச பூதங்கள்**

மகாபாகரான ராமரே கேளும்! கேட்க வேண்டிய பொருளைக் கேட்டீர். இதைத் தேவர்கள் முதலாய் அறிய மாட்டார்கள். அதை உம்முடைய பத்தியினாலேயும், பிரமசாரிய முதலான தபசினாலேயும் உமக்குச் சொல்லுகிறோம். கேளும். அனாயசமாகவே இந்த சம்சார சாகரத்தின் கரை காண்கிறீர். இந்தப் பஞ்ச மகா பூதங்கள் பதினாலு லோகம். சமுத்திரங்கள், மலைகள், தேவதைகள், இராட்சதர்கள், ரிஷிகள், சராசரங்கள், மற்றுமுண்டான பதார்த்தங்கள் இன்னுங் கந்தருவர்கள் நாகர்கள், பிரமத கெணங்கள், இவர்கள் முதலான சகலரும் நம்முடைய

விபூதிகளாலும் தில்லைகள் இந்தத் தரத்திலே உமக்கொரு கதை சொல்லுகிறோம். கேளும்

**ஞானம் அபகரிப்பு**

முன்னே பிரம்மா முதலான சகலமான தேவர்களும் நம்முட விசுவரூபத்தைப் பார்க்க இச்சித்தவர்களாய்க் கொண்டு, நமக்கு அபீக்ஷமாகி இருக்கிற மந்தர பருவதத்திலே போய் அஞ்சலி பெந்தனம் பண்ணிக் கொண்டு, பிரமாதிகள் நம்முட முன்னே நின்றார்கள். நாம் அப்போ விணோதா ரதமாய் மாயையினாலே அவர்கள் ஞானத்தை அபகரிச்சோம். அப்படி மறைக்கப்பட்ட ஞான முன்னவர்களாய்த் தேவதைகள் நீ யார் தேவன்? என்று கேட்டவர்களுக்கு ஆதரவ சிர சென்னும் உபநிஷத்திலே சொன்னபடி உத்தாரஞ் சொன்ன பிரகாரம். கேளுங்கள்.

**இறைவன் இயல்பு**

தேவதைகளே நான் அனாதி முன் அனாதி. காலத்திலே நானொருவனாயே இருந்தேன். இப்போதும் இருக்கிறேன். மேலுக்கும் இருக்கப் போகிறேன். நம்மைப் பார்க்கிலும் பின்னே வேறொரு வஸ்துதானில்லை. நானே நித்தியன். நானே அநித்தியன். பாபமென்னும் அகமில்லாதவனும், பிராமணருக்கும், பிரம்மாவுக்கும் பதி. தெற்கு வடக்கும் கிழக்கு மேற்கும் கீழ் மேல் திக்குகள் இத்திக்குகள் நானே. காய்த்திரி, காயத்திரி திஷ்ட்டிப்பு சக்தி அனுட்டுபூ பத்தி இது முதலான சந்தசும் நானே.

**அங்கிங்கெனாதவன்**

மூன்று வேதாகம கருமம் நானே. சத்தியமாய் அளவில்லாமல் இருக்கிற வரும் எங்குமிருக்கிறவரும் சாந்தரூ மூன்றக்கினியும் கோவுங் குருவும் கவுரியும் கவுகரமும் ஆகாசம் செகத்துக்குப் பிரபுவும் சேட்டனும் சகல தேவர்களிடத்திலே சிரேட்டனும் வரிஷ்டனும் அப்புகளுக்குப் பதியும் அப்புகளும் பகவானும் ஈசன் தேயுசும் யாக வேதியும் ரிக்கு வேதமும், யசுர் வேதமும்; சாம வேதமும், ஆத்ம பூவான மருமாவும், அதர்வண மந்திரமும், ஆங்கிரசங்களும், இதிகாசங்கள், புராணங்கள், கற்பம், சூத்திரம், நாராசம் பிரதைகள், திவ்வியோபநிஷத்துக்கள், சுலோகங்கள், சூத்திரங்கள் அனுவியாக்கியானங்கள், வியாக்கியானங்கள், வித்தைகள், விஷமகூதம், சூஷிதிகேத்தம், அருத்தம், இகலோகம், பரலோகம், அஷ்டசாம ஜம சரூவ பூதங்கள், சாந்தி, தாந்தி, ஆகாசத்தை வியாபிச்சவன் சகல வேதங்களிடத்தில் ரகசியமான குய்யம் இரண்டாமவ னில்லாதவனும் உற்பதியினில்லாதவனும் புஷிக்கமும் பவுத்திரரும் மத்தியமும் உள்ளும் புறம்பும் முன்னும் பின்னும் அழிவில்லாதவனும் இருளும் ஒளியும் நிழலும் பஞ்ச தன்மாத்திரைகளும், இந்திரியங்கள், புத்தி, அகங்காரம், விசையங்களும், நானே.

**சர்வ வியாபி**

இன்னும் பிரம்மா, விஷ்ணு, மயேசுரர், உமை, கந்தர், வினாயகர், இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பூலோகம், புவலோகம், சொர்க்கலோகம், செனலோகம், தபலோகம், சத்தியலோகம், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், இப்படி பஞ்ச கிருதமான பஞ்ச பூதங்களும் சூரியர், சந்திரர், நட்சத்திரங்கள் மற்று முண்டான கிரகங்கள் பிராணன், காலம், மிருத்தியு, அமிர்தம் ஆனது ஆகியது. ஆகப் போவது, இப்படிப்பட்ட சருவப் பிரபஞ்சமும் சருவாத்மகரும், ஆதியும் மத்தியமும், அந்தமும், அதர்வண சிரசென்னும் உபநிடதத்திலே சொல்லப் பட்ட சிரசும் பொசிக்கப்பட்டதும் சமைக்கப்பட்டதும் பண்ணப்பட்டதும், பண்ணப்படா ததும், பரமும், அபரமும், சகலத்துக்கும் மேற்பட்ட பாராயணமும் செகத்துக்கு இதமும் திவ்வியமாய் விகார மற்றதாயும் சூக்ஷமமாயும் அழிவில்லாதாராயும் பிரசாபத்தியாயும் பௌத்திரமும் சௌமியமும் கிரகிக்கப்படாத வஸ்துவும் முந்தின வஸ்துவும் இதுவும் நானே.

**இதய தெய்வம்**

இன்னும் சகலத்தையும் உபசங்காரம் பண்ணுகிறவரும் மகாக்கிருசரும் செகத்துக்கு இருப்பிடமானவரும் சகலருடைய இருதையங்களிலே தேவதையும் சீவாத்மாவா யிருக்கிறவரும் நானே.

**ஓங்காரமானவன்**

இன்னும் யாதொரு ஓங்காரத்துக்கு வடக்கே சிரசு தெற்கே இரண்டு பாதம் யாதொரு சதுசகலத்துக்கும் மேலானது மூன்று மாத்திரையுடைய சாட்க்ஷாத் அந்த ஓங்காரமும் நானே. இன்னும் கீழானதை மேலாக் கிளப்புகிறேன். கீழானதைக் கீழேத் தள்ளுகிறேன். ஆகையால் ஏகமாய், நித்தியமாய், எக்காலமும் இருக்கிறது மாய் இருக்கிற ஓங்காரம் நானே.

**அனந்தன்**

இன்னும் திக்குகள், யக்ஷகள், சாமங்கள்; யாக்கிரமங்களிலே பிராமணர் பொருட்டு யாதொரு பிரமாவானவன் வணங்கச் செய்கிறான். அதனாலே பிரணவ மென்றும் பேர் பெற்றவன். இன்னும் மாமிசப்பிண்டத்தை மெதசென்றும் சிரேஷ்ட மானது போல சகல லோகங்களையும் வியாபிக்குகையாலும் சருவவியாபியென்று பேர் பெற்றவன் நான். அப்படியே பிரம்மாவும் அரியும் மற்றுமுண்டான தேவர்களும் நம்முட ஆதி அந்தங்களைக் காண மாட்டாதே இருக்கிறார்கள். ஆகையால் அனந்தரென்றும் பேர் பெற்றவன் நான்.

**தூலமானவன்**

கற்பத்திற் செனனம். சிறை மிருத்தியும் இவனும் சம்சாரத்திற் பயமாகிற சமுத்திரம் நின்று பத்தனைக் கரை யேற்றுகையால் தூலமென்று பேர் பெற்றவன் நான்.

**சூட்சுமமானவன்**

நாலு விதமான சரீரங்களிலே சீவனாக அதிக சூட்சுமமாகிய இருதைய தகத்திலே இருக்குகையால் சூட்சுமனென்று பேர் பெற்றவன் நான்.

**வித்தானவன்**

மகத்தான அந்தக்காரத்திலே அமிழ்ந்து இருக்கிற பக்தாள் பொருட்டு மின் போல நிர்மலமான சொரூபத்தைப் பிரகாசிப் பிக்குகையால் வித்தென்று நமக்குப் பேர்.

**ஈசுரன்**

நாமொருவனாகவே சகல லோகங்களையும் உண்டாக்கு.கிறோம். இருக்கப் பண்ணுகிறோம். விடுக்கிறோம். பிடிக்கிறோம். ஆகையால் ஈசுரனென்று நமக்குப் பேர்.

**ஏகன்**

இரண்டாமவனில் துரியமான யாதொரு பிரம்மம் சகல பூதங்களையும் தன்னிடத்திலே உபசங்கரிச்சுக் கொண்டு நானே இருக்கிறேன். ஏகனாய், ருத்திரராய் நானே\யிருக்கிறேன்.

**கர்த்தா**

இன்னும் ஈசானிகளான அனேகச் சத்திகளாலே சகல லோகங்களையும் ஆளுகையாலும் இந்தச் செகத்துக்கு ஈசான ரூபமாய், சொற்பிரகாசமாய், சட்சுமமாய், ஈசுரனுமாய், ஈசான இந்திரர் அய்சுவரியரான சகலருக்கும் எக்காலமும் கர்த்தாவுமாய், சகல வித்தைகளுக்கும் ஈசருமாய் இருக்குகையால் கர்த்தாவென்று பேர் பெற்றவன் நான்.

**பகவான்**

இன்னமுஞ் சகல பதார்த்தங்களையும் பார்க்குகையாலும் ஆத்ம ஞானத்தை வெளிப்பண்ணுகையாலும், யோகத்தை அடைவிற்பிக்குகையாலும் பகவானென்று நமக்குப் பேர்.

**மகேஸ்வரன்**

இன்னும் சகலமான லோகங்களையும் பிறப்பிக்குகையாலும் பீடிக்குகையாலும் விடுகையாலும் வசிப்பிக்குகையாலும் நானே மகேசுவரன்.

**மகாதேவன்**

மகத்தான ஆத்ம ஞான யோகம் அயிசுவரியத்தினாலேயே சகல பிரபஞ்சத்தையும் விட்டு அழுந்தி இருக்குகையால் நானே மகாதேவனென்று பேருடையவன். இன்னும் சகலமான திக்குகளிலே இருக்கிறவன். கற்பத்திலே பிறந்தவன்; பிறக்கப் போகிறவன்; நான்முகமுடையவனாய் (ந)ந்தீச்சுரசுடனே உண்டாகிறவனாயும் இருக்கிற தேவனும் நானே. எங்கு கால்? எங்கு கை? எங்கு முகம்? எங்கு கண்ணுடையவனாய் இந்தப் பூமி ஆகாயங் கட்டளை பிறப்பிக்கிறவனாயும், வாக்குகளாலேயும் இறகுகளினாலேயும் சத்தியாக நிற்கிற ஒருவனான தேவனும் நானே.

**முத்தி அடைபவர்**

இருதயத்தின் நடுவே விளங்குகிறவராயும் பிரபஞ்ச ரூபரையும் வேண்டத்தக்கவராயும் வாலி நுனிமயிற்போற் சூட்சுமமான வடிவுள்ளவராயும் எல்லாரிடத்திலேயும் இருக்கிறவரான பரமேசுரனை அறிகிற பேர்களே அளவில்லாத முத்தியையடைவார்கள். மற்றவர்கள் அடைய மாட்டார்கள். நானே செகத்துக்குக் காரணம். செகத்துக்கு யோனியான மாயையை சிருஷ்டிக்கிறவன். பஞ்ச பூதாத்மமான சகலப் பிரபஞ்சத்தையும் பூர்ணமாய் வியாபிச்சு இருக்கிறவன். புருஷராய், பிரகாச சொரூபராய், துதிக்கத்தகுமவராய், ஈசான ரூபமான நம்மை விசாரிச்சவனே முத்தியடைவன். யாதொருவரிடத்திலே குரோதமும் காமமும் பொறாமையும் அடையாமல் இருக்குமோ அப்படிப்பட்ட பிராணன்களினாலேயும் மனசிலேயும் ராகமென்கிற சஞ்சார மூலமானதை விவேக புத்தியினாலே சோதித்து நம்மிடத்திலேயே மனசை நிறுத்தி நம்மை நன்றாகத் தியானிக்கிறவர்களுக்கே முத்தியல்லாமல் மற்றவருக்கில்லை.

**சாயுச்சியம்**

எந்த வஸ்துவினிடத்திலும் மனசுடனே வாக்குகள் அடைய மாட்டாமற் திரும்புதோ அப்படிப்பட்ட பிரமத்திநான். நத்த.... அனந்த வனொன்றுக்கு மஞ்சான். இந்தப்படி நாம் உபதேசித்த மோட்சபிரமானங் கொடுக்கும் வாக்கியங்களைக் கேட்டு, முதல் நாம் சொன்ன திருநந்தீசுரளைச் சேவித்துக் கொண்டு, நம் முடதியானத்திலே தாத்பரியமுள்ளவராய் அத்தனை பேருந் தங்கள் தங்கள் தொந்தத்திலே சாயுச்சியமடைந்தார்கள்.

**பரமாத்மாவின் பண்புகள்**

ஆகையால் இந்த வெளியிலே காண்பிக்கிற பதார்த்தமெல்லாம் நம்முடைய விபூதியே. என்னிடத்திலே சகலமும் பிறக்கிறதும் இறக்கிறதும், இலயிக்கிறதும், இரண்டாம் வஸ்துவில்லாத பிரமம் நானே. அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்து பரிசு தரும் பழையவரும் புருஷரும் ஈசரும் இரண்யமயரான சிவ சொரூபமும் நானே. கை காலில்லாமல் நடக்கிறவன்; பிடிக்கிறவன்; கண்ணில்லாமல் பார்க்கிறவன்; காதில்லாமல் கேட்கிறவன், சகலத்தையும் பிரியபட்ட ரூபமுடைய அறிவுள்ளவனும் நானே. நம்மை அறிகிறவனொருவனுமில்லை. நம்முடைய சத்தி இப்படியென்று நிச்சயிக்கப்படாது. அப்படிப்பட்ட சித்தாகிலும் நான் சகல வேதங்களி லேயும் அறியத்தக்கவனும் அதுகளை யுண்டாக்கினவனும் அதுகளை யறிகிறவனும் நானே, நமக்குப் புண்ணியம் பாவம், சென்ன மரணம், தேகம் இந்திரியம், புத்தி, பூமி, அப்பு, நெருப்பு, வாய்வு, ஆகாசம் இதுகளிலே நமக்கு ஒன்றுதானுமில்லை. இருதையக் குகையிலே இருப்பதாய் நிஷ்களம் அத்துவைதம் சகலத்துக்கும் சாட்சியும் சத்து அசத்துக்குப் பிரமமும் பரிசுத்தமான பரமாத்மாவாகிலும் நம்மு டைய சொரூபம்.

**ஆறாம் அத்தியாயத்தின் முடிவுரை**

இந்தப்படி நம்மைத் தத்துவமாக அறிகிறவனே சுத்த முத்தியான கைவல்லிய த்தையடைவன்.

“மகா புத்தியான இராமரே கேளும். மற்றொருத்தன் அப்படி முத்தியடையான்"

இந்தப்படிக்கு இரகுநாதருக்குத் தம்முடைய விபூதி உபதேசஞ் சிவன் அருளிச் செய்த பிரகாரம்.

இந்தப் பாத்மமென்னும் மகாபுராணத்திற்குச் சிவகீதை யென்னும் உபநிடதத்தில் பிரம்ம வித்தையான யோகசாஸ்திர சம்வாதத்திலே விபூதி யோக மென்னும் ஆறாமத்தியாயம் முற்றும். சற்குரு கடாக்ஷம் உண்டாக வேணும்.

## ஏழாம் அத்தியாயம்

# விசுவரூப தரிசனம்

**இராமரின் சமுசயம்**

இரகுநாதர் சிவனைக் கேட்ட பிரகாரம். சற்குண பரிபூரணரான சிவனே கேளும்! நான் தேவரீரைக் கேட்ட சந்தேகம், அப்படியே மனசிலே இருக்கிறது. அதற்குதான் தேவரீர் இடத்திலே நின்றும் எனக்கும் புலப்படாதே போச்சுது.

பரிச்சின்னம் அற்பமான பரிமானமுடைய உம்முடதேகத்திலே பஞ்சப் பூதங்களுக்கு இருப்பு, பிறப்பு, இறப்பு, எந்தப்படிதான்? விரிவுள்ள அதிகார சம்பத்துடைய பிரமாதி சகல தேவர்களும் நீர் எப்படியாவீர்? எப்படி தானே பதினாலு லோகமும் நீராகுவீர்? உம்மிடத தினின்றும் கேட்டாலும் இந்தச் சந்தேக மென்னை விடவில்லை. இப்படி ஆவிகவாகப்படுகிற என்னுடைய மனசில் சமுக்யத்தைத் தேவரீர் நன்றாகவே நீக்க வேணும் என்று கேட்ட இராமரைக் குறித்துச் சிவன் உபதேசஞ் செய்கிற பிரகாரம்.

**வித்தும் மரமும்**

கேளும் இராமரே! அதி சூக்ஷமமான ஆலம் விரையிலே சாகோப சாய்கை யானதும் மகாவிருக்ஷம் எக்காலமும் இருக்கவே இருக்குது. அப்படியாகாவிட்டால் அந்த விரையிலே அந்த மரம் எங்கிருந்து வருகிறது. அதைச் சொல்லும். அப்படிப் போல நாம் நம்முடைய தேத்திலே பூதங்களுக்கும், புவனங்களுக்கும், பிராணிகளுக்கும் போக்குவரத்தென்றறியும்.

**உப்பும் நீரும்**

இன்னும் கேளும். மகா பெரியதான லவணக்கட்டியானது செலத்திலே போட்டால் லயிக்குது. பாகபெத்ததினாலே திரும்பிக் காண்பிக்கிறது. முன்போலக் கட்டியாய் வருகுது.

**ஒளியும் இறைவனும்**

இன்னுந் தினந்தினம் சூரிய மண்டலத்திலே நின்று ஒளியானதும் பிறக்கிறதும் அப்படிப் போல என்னிடத்தில் நின்றும் சகல செகத்தும் பிறக்கிறது. என்னிடத்தில் லயிக்கிறது என்றறியும் என்று சிவன் சொல்லக் கேட்டு திரும்ப இராமர் கேட்கிறார்.

**இராமரின் சஞ்சலம்**

கேளுமய்யா மகா பாகரான சிவனே! தேவரீர்! சொல்லுகிறது நிச்சயம். எனக்கானால் திக்குபிரமை பிடித்த மூடனைப் போல் பிராந்தி தொடருது. நான் செய்யத் தக்கதென்ன? அது நீங்கிப் போகிற உபாயத்தை அனுக்கிரகிக்கவும் என்று கேட்டு, இராமர் பிராத்திக்க சிவன் உத்தாரஞ், சொல்லுகிற பிரகாரம்.

**தரிசனம் தந்த தயாபரன்**

இரகுநாதரே சராசரமான சகல செகத்தும் என்னிடத்திலே எப்படி இருக்குதோ அப்படியே, உமக்குக் காட்டுகிறேன். பாரும். பின்னை ஏதென்னில் நீரதைப் பார்க்க மாட்டீர். திவ்வியமான சட்சை உமக்கு நாம் கட்டளைப் பண்ணுகிறோம். தசரதர் குமாரரே, யித்தை விட்டு நம்முடைய சாசுவதமான தேசோ மண்டலத்தைப் பாரும்.

சரும சக்ஷுசுவினாலே நம்முடைய அந்தப் பிரகாசத்தை நான்தான் சுரனந்தான் நம்முடைய அனுக்கிரகமன்றியிலே பார்க்கமாட்டான்

இப்படிச் சொல்லி மகேசுரரான சிவன், அந்த இராமருக்குத் திவ்வியமான சட்சுவைக் கட்டளைப் பண்ணி, அதன் பிறகு நம்முடைய வாயை மதாபாதாளம் போல் ஆவென்று திறந்து காட்டும் போது, அனந்த கோடி மின்னல் போலக் காந்தியுடையதும் அதி திவ்வியமாயும் அத்தியந்த பயங்கரமாயும் மிகுந்த பயம் கக்கிறதாயும் இருக்கிற சிவனுடைய ஆவென்ற வாயைக் கண்ட மாத்திரத்திலே மிகவும் பயந்து, சாஷ்டாங்கமாகப் பூமியிலே விழுந்து, திரும்பித் தெண்டமிட்டு எழுந்திருந்து மகா சூரரான இராமர் அந்த வாயைப் பார்க்குமளவில் அதன் நடுவிலே அனந்தானந்தங் கோடி பிரமாண்டங்களாகச் சொல்லிய மானங்களாய்க் கொண்டு, தேர்வடங்கள் போலே காண்பிக்க துவக்கியதும் மகா மேரு மந்திரம் கைலாசம், இமவான விந்திய மலைகள் முதலான மகா பருவதங்கள், உப்பு, கருப்பஞ்சாறுகள், கள்ளு, நெய், தயிர், பால், சுத்தோத கமயங்களான ஏழு சமுத்திரமும் சூரியர், சந்திரர் நட்சத்திரங்கள், கிரகங்கள், பிருதிவி, அப்பு முதலான பஞ்ச மகா பூதங்கள், அனந்தானந்தங்கோடி பிரம்மா, விஷ்ணு, ருத்திரர் முதலான தேவர்கள், தைத்திரியர்கள், அசுரர்கள், நாகர்கள், பக்தர்கள், யட்சர்கள், சித்தி வித்தியா தரர், சாரணர்கள், சாத்தியர், கந்தருவர்கள், கின்னரர்கள், அஷ்ட வசுக்கள், பூதங்கள், பிரேதங்கள், பசாசங்கள், ராட்சதர்கள் மனுஷர், சகல பசுசாதிகள் இதுகளோடே கூடிய பதினாலு லோகமும் ஒரு பிரமாண்டம். இந்தச் சடமாய் ஏக காலத்தில் அனந்தானந் தங் கோடி பிரமாண்டங்கள், அதிலே பிரத்தேகமாய் ஒவ்வொரு பிரமாண்டங்களிலே முன்பின் நடந்த சட்டங்களாய் இருக்கிற தேவாசுரருடைய யுத்தங்கள், அங்கங்கே, விஷ்ணுவினுடைய தசாவதாரங்கள், அவர்களுடைய சரித்திரங்கள், தேவாசுரருடைய செயவுபசெயங்களையும், மகேசுரர் பண்ணின. திரிபுர சங்காரங்களையும், இது முதலான லீலாவதாரங்கள் அதுகளுடைய சரித்திரங்கள் அப்படியே பிறக்கிறவர் களையும் பிறக்க போகிறவர்களையும் நசிக்கப் போறவர்களையும், இந்தப்படி ஒப்பில்லாததாய், அறியாததாய், காணாததாய், கேளாததாய், பிற பஞ்சாகரமுடைய சிவனுடைய வடிவைக்கண்டு இராமர் மிகவும் பயந்து, திரும்பத் திரும்ப நமஸ்கரித்து மனந்தெளிந்து ஞானோதயமுடையவராய்க் கொண்டு பிறகு சகல உபநிடதத்துக் கும் சாரமான பொருளுள்ள தோத்திரங்களாலே சங்கரனான சிவனை இராமர் துதிக்கிற பிரகாரம்.

**இராமன் வேண்டுதல்**

“வாருமைய்யா மகாதேவரே! பத்தர்களுடைய வினையைப் போக்கடிக்கிற வரே! பாவங்களை அறுக்கிறவரே! விசுவத்துக்கு ஈசரே! விசுவத்திலும் உய்ந்தவரே! விசுவத்தினாலே நமஸ்கரித்தவரே! கங்கதாரரே! பிறையைத் தரித்தவரே! இப்படிப் பட்ட சிவனே பிரசன்னராகுமைய்யா? அனாதனான என்னை இந்தச் சம்சார பயத் திலே நின்றும் காருமைய்யா”

**மாயை**

இந்தச் செகத்துத் தேவரீரிடத்திலே நின்றும் பிறந்ததாகில் உம்மிடத்திலேயே பூமியில் மரங்கள், மட்டைகள், கொடிகள், போல இருக்கிறது, லயிக்கிறது, பிரம்மா, இந்திரன், விஷ்ணு, அக்கினி, வாயு முதலான தேவகணங்கள், கந்தருவாள், யட்சராள் அசுராள், சித்தராள், இவர்கள் கூட்டங்களைக் கங்கை முதலான நதிகள், சமுத்திரங்க ளும் சூலபாணியான தேவரீர் வாய் வளையிலே இருக்கிறது. சந்திரசேகரரே! இது தேவரீர் மாயையிலே கற்பிக்கப்பட்டது. உம்மிடத்திலேயே காண்பிக்கப்படும் தன்மையையடைகிறது. இந்தச் செனங்கள் அஞ்ஞானத்தினாலே இதையெல்லாங் கிளிஞ்சலிலே வெள்ளி போல, பழுதையிலே பாம்பு போல சத்தியமாகப் பார்க்கிறார்கள்.

உம்முடைய தேஜசுகளினாலே சகல செகத்தையும் நிரப்பி அக்கினி, சந்திரன், சூரியன் இவர்களையும் பிரகாசிப்பிக்கிறீர்.

தேவர்களுக்கும் தேவரே! உம்முடைய பிரகாசந் தவிர இந்தப் பிரபஞ்சம் ஒரு க்ஷணமாயிலுங் காண்பிக்கப்படவில்லை.

இன்னும் அற்பமான ஆச்சரியமகத்தான பொருளைத் தரிக்கமாட்டாது. ஓரணுவானது விந்திய பருவத்தைச்சமதாவல்ல உம்முடைய வாய் வளையிலே இந்தக் செகத்தெல்லாமிருக்கிறது. இதை உம்முடைய மாயாவிலாசமென்றே நிச்சயிக்கிறேன்.

**பழுதையும் பாம்பும்**

பழுதையிலே பயங்கரமாகத் தோன்றுகிற பாம்பானது அதிலே பிறக்கிறது மில்லை. இருக்கிறதுமில்லை. இறக்கிறது மில்லை. பின்னே ஏதென்றால் மாயா மாத்திர வடிவே யன்றோ? அப்படியே நீலகண்டரான சுவாமியே.

**சித்தானந்த சொரூபர்**

இந்தச் செகத்தெல்லாம் உம்மிடத்திலே தோன்றுகிறது. மாயா சொரூபமே சரி. உற்ற பார்வையால் நன்றாக விசாரிக்கும் போது இந்தச் சகல செகத்துக்கும் உம்முடைய சரீரம் ஆதாரமாகத் தோன்றுகிறதல்லோ! அதுவும் என்னுடைய அபித்தியா கற்பிதமென்கிறதே. நிச்சயம் ஏதென்னில் பரிபூரணராய் சித்தானந்த சொரூபராய் தேவரீர் இருக்கிறீர்.

**திரிபுராந்தகர்**

இன்னும் இஷ்டங்கள், பூர்த்தங்கள், பூசை முதலான கிரிகைகளுக்கு நீரே பொத்தாவும், நீரே பலன் கொடுக்கிறவரும் என்கிற வசனங்களும் மித்தையே சரி.

திரிபுர சங்காரம் பண்ணின சுவாமியே! தேவரீரைப் பார்க்கிலும் வேறொரு வஸ்து ஒன்றுதானுமில்லை.

**கிரியை**

அஞ்ஞான மூடர்களாய்க் கொண்டு கர்மபாரான ரிஷிகள் பூசை, உபசாரம், பலி ,முதலான கிரியைகளினாலே சிவன் சந்தோஷிப்பாரென்பார்கள்; அதுவுமித்தை. ஏதென்னில் அனாதரராயிருக்கிற பரமேசுரருக்குப் போகத்தில் இச்சை ஒவ்வாது ஏதாகிலும் ஒரு பத்திரந்தான் சுமுக மாத்திரமாயிருக்கிற செலந்தான் சமர்பிச்சத் தைக் கொண்டு திரைலோக்கிய சம்பத்தையும் பத்தர்களுக்குக் கட்டளைப் பண்ணு கிறீர் என்கிறதும் (பூச்சிய) பூசகத் தன்மையுண்டாக்கிற அவத்தியா கற்பனையென்றே எண்ணுகிறேன்.

**ஏகன் அனேகன்**

சகலமான திக்குகளை விக்குகளை மற்றும் உண்டான பிரபஞ்சத்தைப் பூரணராய் புருஷரான தேவரீர் ஒருவரே வியாபிக்கிறீர். அது நசிச்சாலும் கடம் நட்டமாம்போது அதனுள்ளாகாசம் போல உமக்கிழிவில்லை. இன்னும் ஆகாசத்திலி ருக்கும் ஒரு சூரிய பிம்பம் கொஞ்சங்களான அனேக செல பாண்டங்களிலே அனேகமான பிரதி பிம்பத் தன்மையடைகிறது போல அனேகமான அந்தக்கரணங்க ளிலே சித்து ரூபரான தேவரீர் ஒருவரே அனேகாத்மகாரங்களை அடைகிறீர்.

**சச்சிதானந்த சொரூபம்**

இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருட்டி, திதி, சம்காரம், இதுகளைத் தேவரீர் பண்ணுகிறது ஒரு பிரயோசனத்தின் பொருட்டல்ல. நித்தியப் பரிபூரணரான உமக்குச் சாத்தியமாயொரு பிரயோசனமும் கிருத கிருத்தியரான உமக்கு வேறொரு காரியமு மில்லையே. இல்லையாகிலும் அனாதிகளான பிராணிகளுடைய அதிஷ்டங்களி னாலே சொப்பனம் போல இந்தச் சாக்கிரப் பிரபஞ்சத்தையும் பண்ணுகிறீர். அதெப்படி யென்றால் தூலதேகந்தான், சூட்சும தேகந்தான், இப்படிப்பட்ட செடாகிங்கி சத்தினு டைய ஒரு லேசமும் உமக்கில்லை. அப்படிப்பட்ட உமக்கு இந்தச் சுக துக்காதிப் பிரபஞ்சத்துக்குச் சத்துரு தன்மையும், பொத்துரு தன்மையும் சுருதி களமிடத்திலே ஆரோபித்துச் சொல்லுகிறது. அதுவும் பரமாத்மாவல்ல. சச்சிதானந்த சொரூபமே தேவரீருக்குப் பிரமாத்தம். சச்சிதானந்தமென்னும் சமுத்திரத்திலே விளையாடா நின்ற அம்சமா இருக்கிற தேவரீர் பொருட்டு நமஸ்காரம்! அப்படியே கால கண்ட முடையவராயும் காலனுக்கு அந்தகராயும் சகலமான பாவங்களைப் போக்கிற வராயு மித்தைகளான சித்த விருத்திக்குப் போறார் வாயுமிருக்கிற தேவரீர் பொருட்டு அனந்த நமஸ்காரமைய்யா.

**விஸ்வரூப தெரிசனம் மறைதல்**

இந்தப்படி சிவனை நமஸ்கரித்து அஞ்சலிப் பெந்தத்துடனே முன்னாக நின்று கொண்டு ஆச்சரியத்துடனே பரமேசுரரைக் குறித்து இரகுநாதர் ஒரு விண்ணப்பஞ் செய்கிறார்.

விசுவாத்ம காரண சுவாமி! செகத்துக்கெல்லாம் தேவரீர் ஒருவரே ஆத்மா! செகத்துத் தேவரீருக்குச் சரீரம். இப்படிப்பட்ட தேவரீருடைய விசுவரூபத்தைத் தேவரீர் அனுக்கிரகத்தினாலே நன்றாகவே பார்த்தறிந்தேன். சகல சந்தேகமும் விட்டு நீங்கி போச்சுது. கிருதாத்தனானேன் இப்போதும் இந்த விசுவரூபத்தைத் தேவரீர் உம்மித்திலே அடக்க வேண்டும் என்று இராமர் பிராத்தனையைக் கேட்டு, பரமசிவன் "மகாவாகுவான இராமரே பாரும்! நம்மைத் தவிர வேறொருவரில்லை" என்று சொல்லிச் சகல தேவதைகளைச் சகல லோகங்களையும் தம்மிடத்திலே அடக்கினார்.

**சதாசிவம்**

இராமருங் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே சந்தோஷத்தினாலே திருப்பிப் பார்க்கிறதுக்கு முன்னே தான் முன்னையைப் போலே மலையுச்சி மேல் வியாக்கிற **"சற்மாம் பாமும்ஷநெமும"** * திரிபுண்டரமும், நாகாபரணமும் வியாக்கிற சற்மாசன த்திலே இருக்கிறவராயும் அஞ்சு முகமும், பதினைஞ்சு கண்ணும், நீல கண்டமும், நாக யக்ஞோப வீதமும், மின்னைப் போலுஞ் சடாசூடமும், வரதம், அபயம், மான், மழுவுந்தரித்த நாலு அஸ்தமும் இப்படிப்பட்ட வடிவுடைய ஒருவரான பரமேசுரனையே நமஸ்கரித்து அவர் ஆக்கினையினாலே முன்னாக இருந்து கொண்ட, இராமரைப் பார்த்து தேவ தேவரான பரமசிவன் இராமரைக் குறித்து ஒரு வாக்கியம் சொன்னார். [* பொருள் விளங்கவில்லை.]

**குருவும் சீடனும்**

இராமரே உமக்கு எவ்விடத்து சந்தேகமோ அந்தந்த அர்த்தத்தை நன்றாகக் கேளும். சொல்லுகிறோம். நம்மைத் தவிர உமக்கு வேறொரு குருவில்லை. இப்படி சிவன் இராமரைப் பார்த்துச் சொன்னார்.

**ஏழாமத்தியாய முடிவுரை**

இந்தப் படி பத்மமென்னும் புராணத்தில் சிவகீதையென்னு முடநிடதத்தில் பிரம வித்தையான யோக சாத்திரத்தில் சிவராகவ சங்காரத்திலே விசுவரூப தரிசனமென்னும் ஏழாமத்தியாயம் முற்றும்.

## எட்டாம் அத்தியாயம்

# வயிராக்கிய யோகம்

**பஞ்ச பூதம் குறித்து இராமன் வினா**

இராமர் கேட்கிற பிரகாரம், “பஞ்ச பூதங்களாலே உண்டான இந்த தேகத்தின் உற்பத்தி, திதி, லயங்களையும், இதன் சொரூபத்தையும் சத்குண பரிபூரணரான மகா தேவரே எனக்கு நன்றாகவே தெரிய சொல்ல வேணும்" என்று கேட்ட இராமருக்குச் சிவனுபதேசம் செய்கிற பிரகாரம்

**பஞ்ச பூத தேகம்**

அஞ்சு பூதங்களாலே உண்டாகுகையால் இந்தத் தேகம் பஞ்ச பௌதீகம் எனப்படும். அந்த அஞ்சு பூதங்களிலேயும் பிருதிவி பிரதானம். மற்ற நாலு பூதங்களும் அதற்குச் சகாயங்களாயிருக்கும். அப்படிப்பட்ட அந்த தேகம் சராயுச மென்றும் அண்டகோச மென்றும், சுவேதசமென்றும் உப்பீசமென்றும் நாலுவிதம். மானசமென்னும், அஞ்சாவதும் ஒரு தேகமுண்டு. அது தேவர்களுக்கே அல்லாமல் மற்றவர்களுக்கு இல்லை.

**சராயுசம்**

அந்த நாலு வகுப்பிலேயும் பிரதானம் சராயுசத்தை முதலில் சொல்லுகிறோம். தாய் தகப்பன் சுக்கிலச் சுரோணிதங்களாலே பிறக்கிறது சராயுசம். அதெப்படி யென்றால், ஸ்ரீகளுடைய கர்ப்பாசயத்திலே புருஷனுடைய வீரியமானது, ருது காலத்தில் பிரவேசித்து ஸ்ரீகளுடை ரச்சு கண் கூடுகிறது சராயுசமென்பிக்கும். ரச்சு மிகுந்தால் பெண்ணாம். சுக்கில மிகுந்தால் ஆணாம். அந்தச் சுக்கிலச் சுரோணிதம் சமமான அளவில் நபுஞ்சகணா மாச்சுக் காண்பிக்சுது. முதல் நாலாம் நாளிலே ருதுத்தானம் பண்ணின முதல் பதினாறு நாள் ருதுகால மென்று சொல்லப்படும். அதிலே ஒற்றை நாளிலே சங்கமானால் பெண். இரட்டை நாளிலே சங்கமானால் ஆண். அதிலேயும் பதினாறாம் நாளிலே கற்பமாகில் அந்தக் கற்பஞ் சகல பூமி ஆளத்தக்க சக்கரவத்தியான இராசாவாவன். ருது ஸ்தானம் பண்ணின ஸ்ரீயானவள் யாதொரு புருஷ முகத்தை வாஞ்சையாகப் பார்க்கிறாளோ அந்தக் கற்பம் அந்த வடிவுடையதாம். ஆகையால் ஸ்ரீயானவள் தன் பத்தாவினுடைய முகத்தைப் பார்க்க வேண்டியது. அந்தக் கற்பத்தை மூடுகிறதாய் மிகவும் சூட்சுமான சற்வாவாணம் சராயு. அதிலே தாய், தகப்பன் சுக்கிலம், சுரோணிதங்கள், கூடுகிறதாகிலும், அந்தக் கற்பமதில் நின்று உணர்குகையால் சராயுசமென்று சொல்லப்படும்.

**அண்டசம்**

பறவை, பாம்பு முதலானது முட்டைகளிலே பிறக்கு கையால் அண்டசங்க ளென்று பேர் பெறும்.

**சுவேதசம்**

வேர்வை யிறுக்க மிதிலுண்டாகிற பேன், கொசு முதலானதுகள் சுவேதசங்களென்று பேர் பெறும்.

**உப்பிசம்**

மரங்கள், கொடிகள், புதர், முதலானதுகள் பூமியைப் பிளந்தெழும். ஆகையால் உப்பீசங்களென்று பேர் பெறும்.

**மானசர்**

தேவதைகள், ரிஷிகள், அசுரர் முதலானவர்கள் மானசரென்று சொல்லப்படு வார்.

**தாய் வயிற்றில் முதல் மாத சிசு**

அதிலே பூர்வ சென்மத்தில் கர்மவசத்தினாலே ஸ்ரீகளுடைய குய்யத்தானத் திலே விடப்பட்ட சுக்கிலமானது ரச்சோடே கூடிக் கொண்டு முதல் மாசத்தில் முந்தி நெகிழ்ச்சியுடையதாயும் குமிழியாயுங் கலந்து கட்டியாயும் மொத்தையாயும் நாள் வட்டத்திலேயாம்.

**இரண்டாம் மாத சிசு**

இரண்டாம் மாதத்தில் மிகவும் கெட்டி மொத்தையாம்.

**மூன்றாம் மாத சிசு**

கை, கால் முதலான அங்கங்கள் மூன்றாம் மாசத்தில் உண்டாம்.

**நான்காம் மாத சிசு**

அந்தப் பின்டத்தினிடத்திலே நாலாம் மாசத்திலே சீவன் தோன்றுவன். அதற்குமேல் தாய் வயிற்றிலே அசையும். ஆணாகில் வயிற்று வடப்பக்கத்திலேயும், பெண்ணாகில் வயிற்றுத் தென் பக்கத்திலேயும், நபுஞ்சகனானால் நடு வயிற்றிலே யுமிருக்கும்.

ஆகையால் புருஷ கற்பமாகில் தாய் வலது பக்கமாகத் தூங்குவாள். மாற்றுக்கும் மற்றப்பக்கம். இப்படி யங்கங்களுடைய பிரத்தியங்களுடைய அம்சமு மிகவும் சூட்சுமங்களாகத் தானே பிறந்ததுக்கு மேல் உண்டாகிற பல், மீசை, முதலானதுகள் தவிர ஒருமிக்கவே உண்டாகும். இப்படி நல்ல கற்பத்துக்கு சுவாபம் இதற்கு விபரிதமாகிறதெல்லாம் விகாரமென்பிக்கும். அப்படியே புருஷர்களுடைய சுபாவ தர்மங்கள் குரோத முதலானது பயமுதலானது ஸ்ரீகளுடைய சுபாவ தர்மங்கள், இதுகளும் நாலாம் மாசத்திலேயுண்டாம். நபுஞ்சகனிடத்திலே இரண்டு தர்மங்களும் ரகுநாதரே மீச்சிரமமாகப் பிறக்கும்.

இந்தக் கற்பத்தின் இருதையம் விஷயங்களை இச்சிக்கும். அது தாயினுடைய சம்மந்தமாகையால் தாய்க்கு அபீக்ஷமானதைக் கொடாதே போனால் கற்ப விருத்தி யின் பொருட்டு செய்ய வேணும். இப்படி இரண்டு இருதையமுள்ள படியினாலே அந்தத் தாயை உள்ளாதமுள்ளவளென்று சொல்லுவார்கள். அப்படி அவளுக்கு அபீக்ஷமானதைக் கொடாதே போனால் கற்பத்துக்கு அங்கவைகவிய முதலானது உண்டாம். தாய்க்கு, யாதொரு பதார்த்தம் இஷ்டமானது லபியாதோ அந்தச் சிசுவுக்கு அந்தப் பதார்த்தம் பிறகு அருமையாம்.

**ஐந்தாம் மாத சிசு**

அதன் பிறகு சித்தம் ஒளியுமற்ற மாமிசங்களுடைய புஷ்டியும் அஞ்சாமாசத்தி லுண்டாம்.

**ஆறாம் மாத சிசு**

ஆறாம் மாசத்திலே எலும்பு, மச்சை, நகங்கள், தலைமயிர், குடல், மயிர், பிறவும் பலன் மேல் நிறமதி தின விருத்தியும் உண்டாம்.

**ஏழாம் மாத சிசு**

ஏழாம் மாசத்திலே அங்கங்கள் பரி பூர்த்தி அடையும் கால்களைக் கோத்த கைகளாலே காதிரண்டையும் மூடிக் கொண்டு கற்பவாசத்திலே நின்று மேங்கினவனாய் ............... (புள்ளியிட்ட இடம் சுவடி சிதலம்)

**எட்டாம் மாத்' சிசு**

அதன் பிறகு எட்டாமாசத்திலே வாக்குங் கேட்கையு முண்டாம். சிசு பிழைக்கி றதிலே நிமித்தமான இருதைய தேகத்திற்குப் பிறந்த சமான பச்சையாய் சிவப்பா இருக்கிற தேஜஸும் ஒச்சும கர்ப்பத்திலே சஞ்சலமாய்த் தாயை அடையும். ஆகை யாலே ஏச்சாலே விடப்பட்ட படியால், எட்டாமாசத்திற் பிறந்த பிண்டி பிழையாது. ஓரற்பா காலம் பிண்டாகாரபடி யாக்கப்பட்ட அவயங்களுள்ளவன் போலப் பிறந்தாப் பிறந்தாலும் நிற்பலமாயிருக்கும்.

**ஒன்பதாம் மாத சிசு**

அதற்கு மேலொன்பது மாசமுதலாய் பிறக்கிற காலம் அப்போ தன் முகத்தி னாலே கோர்க்கப்பட்டதாயும் நாபி முதற் கொண்டு தாயினுடைய சாயையான நாடி யையடைந்து அந்தத் தாய் அன்னாசங்களாலே அந்தவனியாய்ப் போஷிக்கப்படுவள். அதன் பிறகு எலும்பென்கிற யிந்திரத்தினாலே யிரைப்பட்டு வயிற்றுவழியிலே விழுந்து மச்சினாலேயும் ரத்தத்தினாலேயும் பூசப்பட்ட சருவாங்கமுள்ளவனாய் சராயுசமென்னும் ......... (புள்ளியிட்ட இடம் சுவடி சிதலம்)

**பல்வேறு பிறவிகள்**

கற்பத்தில் அடைப்பட்டு ஞானமடைந்து மிகவுந் துக்கத்துடனே ஆகட்டு மென்று பச்சாதாபத்துடனே தன்னாத்மாவைக் குறித்து துக்கிக்கிர பிரகாரம் கட்கடனான அனேகமான யோனி சகத்திரங்களிலே சென்மிச்சேன். அனேக விதமான நானாஸ்ரீகளுடைய முலைப்பால்களையுண்டேன். அந்த முலைப் பால் சமுத்திரத்துக் குத் தயிர் சமுத்திரம் புரைகுத்தவும் பத்தாது.

**பிறவித்துயர்**

அந்தந்தச் சென்மங்களிலே சயிக்கப்படாததாய் அனேகமான தேகத்தின் கர்மங் களையும் அறுக்கிற ரம்பங்கள் போலே யாதனைகளை அனுபவிச்சேன். மாவைப் போல, வறுத்த மணலைப் போல கர்ப்ப சந்தர்ப்பச் சுவாலைகள் பற்றி யெரிக்குது. அப்படியே தாய் வயற்றக்கினியிலே சுடப்பட்ட பயித்திய தாதுவின் ரஷத்திவலை களும் கர்ப்பப்பையின் நெருப்பு மிகவும் எரிப்பிக்குது. அப்படியே தாய் வயிற்றில் கிருமிகளுடைய மூஞ்சிகள் இலவ முள்ளுகள் போல பக்கத்தின் எலும்பென்னும் மாம்பழங்களாலே முதலே அறுக்கப்படு மாத்திரத்தில் வேகிற தன்னை மிகவும் குத்துகிறது. அப்படியே துர்க்கந்தத்தினாலே பூசிதமாய் கருப்பையினாலே மூடப்பட்ட வனாயும் புறப்பட்டு மிகவுந் துக்கிச்சுக் கொண்டு தலைகீழுங், கால், மேலாகவும் அந்தரத்திலே நின்றும் விடப்பட்டவனாக மல்லாந்து கொண்டு தாய் வயிற்றுள் நின்றும் விழுகிறான். ஒன்றுமில்லாதவனாய் மாமிச மொத்தைப் போல் பிண்டமாய றிவற்றுக் தெண்டபாணிகளான அந்த சென்மங்களாலே நாய், நரி, பூனை, புலி, கரடிகளிலே நின்றும் இரக்ஷிக்கப்படுவன். அப்போ விழுங்க வந்த .ராக்ஷதனைத் தகப்பன் போலவும் மடத்தாக்கினியைத் தாய் போலவும் சீழைப் பால் போலவும் அஞ்ஞானத்தினாலே எண்ணுகிறான்.

இந்தச் சிசு அவத்தை மகாகஷ்டம். இதைச் சுடவேண்டாவோ? அந்த அவத்தையிலே சுழிமுனை நாடி கொலையாலே கம்மப்படுகையால் வெளியாய்ப் பேசப்படாது. ஆகையாலே கற்பமும் அயழமாட்டாது.

### யௌவனத் துயர்

இப்படி திவசத்தைக் கடந்து எவ்வனமடைந்து மன்மத சுரத்தினாலே எரிக்கப்பட்டவனாய் அகாரனமாய்த் ஆடுவன், பாடுவன், பிதற்றுவன், மரங்களேறு வன், நல்ல உபசாரந்தரான பேர்களை ஏக்கப்படுத்துவன். காமகுரோதங்களாலே கம்மப்பட்டுக் குருடன் போல ஒன்றும் பாரான். எலும்பிற் சசி நாடிகளாற் கூடப்பட்ட ஸ்ரீகளுடைய மன்மதாலயத்திலே மல்லாந்து விழுந்து பிளந்தவளை வயிறு போலி ருக்கிறதிலே காமார்த்தனாய் முந்தி விழுந்து தன்னாலே தானெரிக்கப்படுகிறான். பார்க்குமளவில் எலும்பு இரத்த மாமிச நாடி தோல்களிலும் பெண்வடிவிலே என்ன மாயம் இருக்கிறது? விருதா இந்த மாயையினாலே மூடனாய் இந்தச் செகத்தைத் தத்துவமாகப் பார்க்கிறதில்லை. அந்த ஸ்ரீயினுடைய பிராணவாயுத் தேகத்தைத் தத்துவமாகப் பார்க்கிறதில்லை. அந்த ஸ்ரீகளுடை பிராணவாயுத் தேகத்தை விட்டுப் பொச்சாடர்க்கினியினாலே எரிக்கப்பட்ட கற்பத்திலே நானடைந்த துக்கத்தைப் பார்க்கிலும் கும்பீவர்கள் என்னும் நாகந்தாவிளை அப்படியே சீழ்த்தம், கொலை, இதைப்பானம் பண்ணுகையும் வாதமே ஆகாரமாக பொசிக்குகையும் விஷையிப் புழுக்களாலே துளைக்கப்படுகிற வாதையும் கற்ப வாசத்திலே அனுபவிச்சேன். துக்கமும் இந்தக் கருப்பையிற் புகுந்து நான் அனுபவிச்ச மகா துக்கத்தைச் நரகங்களையும் அனுபவிச்சேன். துக்கமும் அதிகரிக்கமாட்டாது. இந்தப்படி நானா யோனிகளிடத்தில் தான் அனுபவிச்ச சாதனையைத் திரும்பித் திரும்ப நினைச்சுக் மேற்சேர் பயத்தை நினைத்து எப்படி எப்படியென்று விசாரித்துக் கொண்டு இருப்பன், பின்பு நாலு தினத்திலே பிறகு பார்ப்பன். இப்படி எவ்வனத்தைக் கடந்த பின்பு மகா துர்க்கத்துக்குத் தானமான சிறையடைந்து கோழையன் மார்பைக் கம்மப்போ சித்த அன்னம் செறியாமல் பற்களைசைய விழிகள் மந்திக்க கற்பத்துவாசைப்பு, இதுகளைப் பொசிக்க வாயுவினாலே கை, கால், கழுத்து, பிடரி, இடுப்புக் கடுப்பி னாலே மிகவும் பலமற்று அனேகங்களான ரோகங்களாலே பீடிக்கப்பட்டவனாய்ப் பந்து சணங்களாலே பீடிக்கப்பட்டுக் கொண்டு சவுசமில்லாமல், மலங்களாலே சருவாங்கம் பூசப்பட்டவனாய்ப் பூமியைத் தழுவிக் கொண்டு, கிடையாத அன்ன பானாதிகளைத் தியானித்துக் கொண்டு கேவலஞ் சுவர் போலிருக்கிற போது அந்தந்த இந்திரிய வியாபாரங்கள் அந்தந்த கிரியைகளில்லாமையால் பாலர்களாலேயும் அடி படுவன்.

### வார்த்திகம்

இந்தப்படி வார்த்திகத்தையடைந்து அடையும் போது வரும் துக்கத்தைச் சொல்லவும் ஒப்பிடவும் முடியாது. அத்தியந்தமான ரோகங்களாலேயும் மிகவும் பீடிக்கப் படுபவர்களாயும், மரணத்துக்கும் பயப்படுகிறார்களல்லோ! அப்படிப் பயந்து கொண்டு பந்து சணங்களாலே கட்டிக் கொள்ளப் பட்டவனாயும் காக்கப் பட்டவனா லும் சமுத்திரத்தின் நடுவே இருக்கும் பாம்பு கருடனாலே போல ஆஸ்தியே! ஆதனமே! ஆக்களே! என்று மிகவும் அலறிக் கொண்டு சர்ப்பத்தினாலே தவளைப் போல் மிருத்துவினாலே எப்படிபட்டவனுங் கொண்டு போகப் படுகிறான்.

**காலதூதன்**

மாமயானங்கள் அறுக்கப்படச்சே மரம் சந்திகள் தளரச்சே மரிச்சுப் போறவனுடைய துக்கத்தை மூமூச்சுகளான பேர்கள் நன்றாக நினைக்க வேண்டியது. அப்படியே கண்கள் இழுபட, காது கேளாமல் போக, வாய் தடுமாறி கேடுபட, மிருத்துவும் பாசத்தினாலே கட்டி இழுத்துக் கொண்டு போமளவில், அவனை விடுவிக்க தக்கதாகத்தான் ஒரு வல்லவனும் காண்பிக்க வில்லை. அப்போ இருளினாலே மூடப்பட்டவனாய்க் கொண்டு மோகத்தையும் விசாரத்தையும் அடைந்து பந்து செணங்களாலே எச்சரிக்கப்பட்டவனாய் அப்போது தன்னுடைய செணங்களைத் தைரியத்துடனே பார்த்துக் கொண்டு மிருத்துவினாலே கால பாசத்தினாலே பந்துக்களுடைய சினேக பாசத்தினாலேயும் கட்டியிழுக்கப்படுகின்ற தன்னைச் சுற்றும் பார்த்துத் துக்கப்படுவன். அப்படியே விக்கலாலே வாதிக்கப்படும் அவனுடைய மேல் மூச்சினாலே சோழிக்கப்படும். அவன் மிருத்தியுவினாலே இழுக்கப்படுகிற சீவாத்மாவுக்குச் சரண மில்லையல்லோ.

இப்படி சம்சார எந்திர மேற்றப்பட்ட எம தூதர்களுக்கு வசனாய் என்ன செய்யப்போறேன்? எங்கே போகப் போறேன்? எவனைப் பிடிக்கிறேன்? எத்தைப் பிடிக்கிறேன்? என்று துக்கித்துக் கொண்டு கால பாசத்தினாற் கழுத்திலே பூட்டப் பட்டவனாய் பண்ண வேணுமென்னும் விசாரமற்று மூடனாய் மெத்தென தேகத்திலே நின்றும் பிராணன்களை விட்டு யாதனா சரீரத்துடனே கூடி எம தூதர்களாலே ஆக்கிரமிக்கப்பட்டவனாய் இந்த லோகத்தை விட்டு நரகத்தை யடைந்து எந்த எந்த எமவாதனைகளை அனுபவிக்கிறானோ அந்தந்தத் துக்கத்தைச் சொல்ல எவன் வல்லவன்? அப்படி சீவன் போன பின்பு அந்தச் சரீரம் முன் கஸ்தூரி, குங்குமம், கற்பூரம், சந்தங்களாலேயும் பூசப்பட்டு, பூஷனங்களாலேயும், நவரத்தினங் களாலேயும் அலங்கரிக்கப்பட்ட தேகம் ஒரு கணத்திலே பார்க்கத் தகாததும் தொடத் தகாததுமாய், உடனே வீட்டினின்றும் வெளியே போடப்படுது. க்ஷணமாகிலும் வைக்கப்படவில்லை. உடனே காட்டங்களாலே எரிக்கப்பட்டுச் சாம்பலாகப் படுகிறது. தப்பினால் நாய், நரி காக்கைகளாலே, பருந்துகளாலே பொசிக்கப் படுகிறது.

**பறவையும் கூடும்**

திரும்பக் கோடி சென்மங்களுக்காகினாலும் ஆங்கானக் கிடையான தாய், தகப்பன், குரு, செணம், உறவு, உற்றார் என்கிற இந்தச் செகத்துமாயை போலிருக்கிறதிலே என்ன விசுவாசம்? தன் கன்மத்துடனே தான் ஒருவனே போகிறான். மற்றக் கூட்டம் வழியினைப் பார்த்து மரத்து நிழலிலே கூடின மனுச மாத்திரமாகிலும் அதெப்படி யன்றோ பறவைகளானது அந்திதோறுமிருப்பான் மரத்திற் விடியுந்தோறும் அன்னியோன்னியமடைஞ்சு அந்த மரத்தை விட்டு போவது போல் இந்தச் சென்ம பாசனமென்னும் இந்தச் சமுத்திரத்திலே கூடுகிறதும், பிரிகிறதும் இப்படி மரணத்துக்கு ஏது சென்மம்? சென்மத்துக்கு ஏது மரணம். இராட்டிணத்திரிகை போலிருக்கும். இதிலே மனுஷன் ஓயாமல் சுழல்கிறான்.

**பிறவித்துயர் துடைப்போன்**

இப்படிக் கற்பத்திலே புருஷனுடைய வீரியப் பதன முதலாய் பிரியந்தம் ஏது சொல்லப் படுதோ இந்தச் சம்சாரமென்னும் காரோகத்துக்கு நம்மைத் தவிர மற்றொரு மருந்தில்லை. நாமே இந்த வினையை நீக்குகிறவர். இந்தப்படி இராமருக்குச் செனன மரண மரணங்களை சிவன் வாக்கியத்தின் பொருட்டுச் உபதேசித்தார்.

**எட்டாம் அத்தியாயத்தின் இறுதி**

இந்தப்படி பத்மமென்னும் மகாபுராணத்தில் சிவகீதை யென்னும் உபநிடதத் தில் பிரம்ம வித்தையான யோக சாஸ்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே வைராக்கிய யோகமென்னும் எட்டாம் அத்தியாயம் முற்றும்.

## ஒன்பதாம் அத்தியாயம்

# சரீர நிருபண யோகம்

**பரிசுத்தமான பிரமம்**

இன்னும் சிவன் உபதேசிக்கும் பிரகாரம். ஓ இராமரே! தேக சொரூபத்தை நன்றாகச் சொல்லுகிறோம். சாவதானமாய்க் கேளும். இந்தப் பிரபஞ்சமானது நம்மிடத்திலே நின்றும் பிறக்கிறது நம்மாலே ரட்சிக்கப்படுவது. அது லயிக்கும் அதிஷ்டானமும் நாமே. கிளிஞ்சலிலே வெள்ளி போல் ஆனால் நித்திய நிர்மல பரிபூரண சச்சிதானந்த மூர்த்தி ஒன்றிலேயும் பற்றாதவர் ஆங்கார மற்றவர், அனாதியாய்ப் பரிசுத்தமான பிரமம். அனாதியான அவித்தையுடனே கூடுகையால் செகற் காரணத் தன்மையடைகிறோம்.

**சத்தும் அசத்தும்**

நம்முட அந்த அவித்தையானது சத்தென்றுஞ் சொல்லப் படாது. சத்தாவது மூன்று காலத்திலேயும் ஒரு தேசத்திலேயும் ஒருவனாலேயும் ஒன்றாலேயும் ஒருவாதையும் படுத்தப்படாது. ஆத்மாவைப் போல் அவச்சிதமாக இருக்க வேணும் ஆத்மாவுக்கு ஓரிடத்திலேயும் வாதையில்லை. அதிஷ்டானம், அவித்தையும், அப்படியாகில் வாதியாமற் போக வேணும். முத்தியிலே அவித்தை வாதிக்கப் படுகிறது. ஆகையால் அவித்தை சத்தென்று சொல்லப் படாது. அப்படியே அசத்தென் றுஞ் சொல்லப்படாது. எக்காலமும் இல்தாததாலே அசத்து முயற் கொம்பு ஆகாசத்தாமரைப் பூ வந்தியா புத்திரன் இதுகள் எப்பொழுது மில்லாமையால், அசத்து அவித்தையும் அதைப் போல அசத்தாவில் அதைப் போலப் பிரத்தியட்ச அச்சமாகாமல் போக வேண்டி வரும். அது கூடாது போல கோபாலம் நான் அஞ்ஞானன் நான். ஒன்றும் அறியோன் என்று சகலரும் பிரத்தியட்சமாகவே

அஞ்ஞானத்தை ஆகையால் அசத்தென்று சொல்லக்கூடாது. இப்படி வாதை உண்டா குகையால் அசத்தென்றும் பிரத்தியட்சமாகுகையால் அசத்தென்று சொல்லப்படாத படியினாலே சத்தும், அசத்தும் ஆகாமல் இரண்டுக்கும் பிரமமாய்ச் சொல்லுகையால் சத்துக்கும் அசத்துக்கும் பின்னமான அணிவாகசியை என்பிக்கும்.

**முக்குணம்**

இப்படிப்பட்ட இந்த அவித்தை சத்துவ ராட்சச தமசென்னும் மூன்று குணமும் காரணத்தினுடனே சரியொத்த காரியமென்றும் பரிணாம முடையது. அதிலே சத்துவகுணம் வெண்மை, மனுஷனுடைய சுகத்துக்கும் ஞானத்துக்கும் இருப்பிடம். ராக்ஷதம் சிவப்பு. சஞ்சலந் துக்கத்துக்கு இருப்பிடம். கருப்பு. செடம். சுக துக்காதி களுக்குப் புறம்பு. இந்தப்படி மூன்று குணவடிவாய் அந்த அவித்தை சத்தி நம்மிடத்திலே கற்பிதமாய் அனாதியாக இருக்கும்.

**பஞ்ச பூதம்**

கிளிஞ்சலிலே வெள்ளி வெள்ளி போலவும், பழுதையிலே பாம்பு போலவும் அதிட்டமானமான நம்மிடத்திலே நானாகாரத் தன்மை அடைகிறது. ஆகாச முதலான அஞ்சு பூதமும் அந்த மாயைகளாலே நம்மிடத்திலே உண்டாகிறது. அதுகளாலே உண்டாகுகையால் இந்தத் தேகம் பஞ்ச பூதிகமென்பிக்கும்.

**ஆறுகோசம்**

அதிலே தாய், தகப்பன், பொசித்த அன்னத்தினின்றும் சீவனுக்குச் சரீரம் ஆறுகோசமுள்ளதாகப் பிறக்கும். அதிலே தகப்பனிடத்திலே நின்றும் சரனாயுக்கள், மச்சை, எலும்பு, இந்த மூன்றும் உண்டாம். தோல், இறைச்சி, உதிரம் என்னும் இம்மூன்றும் தாயிடத்திலே உண்டாம். அதிலே ஆறுவிதமாய் விரவங்கள் சீவனுக்கு உண்டாம். ராச்சங்கள், ஆத்மசங்கள், சத்துவசங்கள், சமவிரவியங்கள், சுவாத்மசங் கள், மிருதுக்கள் இப்படி ஆறுவகை. இரத்தம், மெதசு, மச்சை பீலி....... சகுயத்து குதம் இருதையம் நாவி இதுகள் முதலான சாவங்கள் தாயினிடத்திலே நின்று உண்டாகி றது மீசை, உடல், மயிர், தலைமயிர், சனாயுஷரை, நாடிகள், நகங்கள் பற்கள், சுக்கிலம் முதலான பாவங்கள் தகப்பனிடத்துண்டாம்.

**இராச்சங்கள்**

தேகத்தின் புஷ்டி, அதிநிறம், வளர்த்தி, திருத்தி, பலம், இருப்பு, லோப மில்லாமை, உற்காசம் இதுகள் முதலானது ராச்சங்கள்.

**ஆத்மசங்கள்**

இச்சை, துவேஷம், சுகந்துக்கம், கர்மா கர்மங்கள், செனன மரணங்கள், பிரையத்தனம், ஞானம், ஆயிசு இதுகள் ஆத்மசங்கள்.

**ஞானேந்திரியங்கள்**

ஞானேந்திரியங்கள் காது, பரிசம், கண், நாக்கு, மூக்கு, இந்த அஞ்சு. இதுகளுக்கு விஷயங்கள் சுத்த, பரிச, ரூப, ரச, கெந்தம் இந்த அஞ்சு வாக்கு, கை, கால், குதம், 'குய்யம். அந்த அஞ்சுங்கனம் இந்திரியம். இதுகளுக்குக் கிரியைகள் சொல். ஏற்றல் நடக்கு, விசர்க்கமாதி.

**அந்தக்கரணம்**

இந்த அஞ்சும் மனசு, புத்தி, ஆங்காரம், சித்தம் என்று அந்தக்கரணம் நாலு விதம். சுகந்துக்கம் இந்த இரண்டு மனதின் விஷயம். நினைப்பு, பயம், ஆலோசனை இதுகள் மனதின் கிரியை. நிச்சயம், புத்தி நான் எனதென்னும் ஆங்காரம், நினைப்பு, சித்தம், பயம், சத்து வாக்கியமாவது அந்தக்கரணம். சத்துவ ராட்சச தாம்சமென்னும் குணங்கள் மூன்று விதம். அதிலே சத்துவத்திலே நின்றும் உண்டென்கிற ஆத்திகம் பரிசுத்தி தர்மவாசனை. இதுகள் முதலான சாத்துவிக பாவங்கள் உண்டாச்சிலே நின்றுண்டாம். இராட்சசங்களான பாவங்கள், காமக்குரோத, லோப மோக மதமாச்சரிய முதலான பாவங்களுண்டாம்.

நித்திரை, ஆலசியம், பிரமாதம், வஞ்சனை முதலானது தாமச பாவங்களுடைய இந்திரியங்கள். தெளிவு, ஆரோக்கியம், ஆலசியம் பெறாமை இதுகள் முதலான சாத்துவ பாவங்கள். சத்துவத்திலே நின்றுண்டாம். தேகம் பஞ்சபூத ஆத்மகமாகையினாலே அதன் குணங்களைக் கிரகிக்கும். சத்தம், தாது, நாதம், விசித்திரத்தன்மை, சூட்சுமத்தன்மை, தைரிய பலம், இதுகள் ஆகாசத்திலுண்டாம். பரிசம், பசிசனை, உயரப்போடல், கீழவிடல், முடக்கல், நடத்தல், நீட்டல் இந்த அஞ்சு கர்மம் சூட்சுமமா இருக்கும். கையினாலே அதன் குணங்களைக் கிரகிக்கும். சத்தம் பிராணம், அபானம், உதானம் வியானம், சமானம், நாகம், கிறுகாம சர்மம், தேவதத்தம், தனஞ்செயம், இப்படிப் பத்து வாயு விகாரங்களையும் லகுத் தன்மையையும் தேகம் வாயுவுவினிடத்திலே நின்றும் கிரகிக்கும். அந்தப் பத்திலேயும் பிராணன் முக்கியம். நாபிக்கு மேலாய் கண்டத்துக் கீழாய் இருக்கும்

இன்னும் மூக்கு, நாபி, இருதைய கமலம், இதுகளேயுந் திரியுஞ் சத்தங்கள் உச்சரிக்க மேல் மூச்சு, கீழ்மூச்சுகளுக்குக் காரணமாக இருக்கும். அபானம், குதத்திலேயும் குய்யத்திலேயும் கடிகளிலேயும் கெண்டைச் சதையிலேயும், நாபிவிருஷளந் துடை முழங்கால் இதுகளிலே இருக்கும்.

மல மூத்திரஞ் சுக்கிலமிதுகள் விடுகைக்குக் காரணம் வியானன், கண் காது, குதி, கெண்டைச்சதை, மூக்கு, இதுகளிருக்கும்.

பிராணன் அபானங்களைப் பிடிக்க விடயிது முதலானது அதன் கர்மம்.

சமானன் சகல தேகத்தையும் அக்கினி இதனுடனேகூடி வியாபிச்சு எழுவத் தீராயிரம் நாடி வழிகளிலே திரிந்து கொண்டு அன்னபானரசங்களைத் தேகமெங்கும்

நிரவித்தே கபிஷ்டியைப் பண்ணுகிறது. உதடு, அன்னம், கை, கால், அங்க சந்திக ளிலே இருக்கும் தேகத்தை விடுகிறதும் உபயா கிளப்புகை முதலானது, அதன் கர்மம். தோல் முதலான தாதுகளிலே நாக முதலான வாயுவிருக்கும். நாகத்துக்கு வாந்தி முதலான கர்மம். தனஞ் செயத்துக்கு சோக முதலானது கர்மம். தேகத்தின் நெடும்மயக்க முதலான கர்மம், தேகத்திலே நின்றும், ருசிரூபம், மின்னல், பாகம், பிரகாசம், குரோதம், சூடுகை, சூட்சுமம், ஒச்சதேஜசு, சவுரியம், புத்தி சிறு காத்துக்கு இமைத்தல் முதலானது கர்மம். கர்மத்துக்குப் பசி தாக முதலானது கர்மம். அதுகளைச், சரிரங் கிரகிக்கும்.

செலத்திலே நின்றும் நாக்கு, ரசங்குளிற்சி, தேகத்தின்னே தரும் மயக்கம் முதலானது காமம், கிளர்ச்சி, வேர்வை, மூத்திரம், மிருதுவும் இதுகளுண்டாம். பூமியிலே நின்றும் மூக்கு கெந்தம், காடின்னயம், பாரம், இந்தக் குணங்களைத் தேகங் கிரகிக்கும். தோல், உதிரம், இறைச்சி, மெத்சு  அஷ்திமச்சை. சுக்கிலம் இதுகள் ஏழு தாது. மனுஷன் பொசித்த அன்னம் உதார்க்கினி யினாலே மூன்று வகையாகும்.

அதிலே முந்தின தூலபாகம் மலம். மத்திம பாகம் மயிர், இறைச்சி. சூட்சும பாகம், மனசாம். ஆகையால் மனசு அன்னமயம், அப்புகளுடைய தூல பாகம். மூத்திரம் மத்திம பாகம், உதிரம் சூட்சும பாகம், பிராணம். ஆகையால் பிராணம் சேவாத்மகம். தேஜசின் தூல பாசம் எலும்பு. மத்திம மச்சை சூக்குமம், வாக்கு.

ஆகையால் தேஜசு, அப்பு, அன்னம், இந்த மூன்று சொரூபமாகிலும் தேகத்தின் உதிரத்திலே நின்றும், மாமிசம், மாமிசத்திலும் மெதசு  மெதசிலும் அஷ்தி அஷ்தியிலும், மச்சை. மச்சையிலும் சுக்கிலம் உண்டாம். நாடிகளும். மாமிசத்திலும் மேலுண்டாகிறது. வாதம், பித்தம், கோழை இந்த மூன்றும் தாது வென்னப்படும்.

தேகத்திலே செலம், பித்தம், சளி, மாத்திரம் ஒன்பது அஞ்சலி கொள்ளு மட்டும். இரத்தம் எட்டு அஞ்சலி மட்டும். விசைஷ ஏழஞ்சலி கொள்ளு மட்டும். சிலேட்டுமம், ஆறஞ்சலி, பித்தம் அஞ்சஞ்சலி, மூத்திரம் நாலஞ்சலி. விசைஷ மூன்றஞ்சலி. மெத்சு இரண்டஞ்சலி. மச்சை ஓரஞ்சலி. சுக்கிலம் அரை அஞ்சலி. அதுவே பலம் என்று சொல்லப்படுகிறது.

தேகத்திலே முன்னுற்றறுபது எலும்பு செலசங்கள்... லங்கள் 5 ஜாகங்கள், ஆத்ரானங்கள், நவல்கள், இந்தப்படி எலும்பு அஞ்சு... பிரகாரம் இந்த எலும்பின் சந்துகள் இருநூற்று அறுபத்தறுபது ரவோவங்கள், பிறசரங்கள், துந்தசைவனங்கள் உலூகங்கள், சமுத்திரங்கள், மண்டலங்கள், சங்காவர்த்தங்கள், வாய் சதுண்டங்கள், இந்தப்படி எலும்பின் சந்துகள் எட்டு பிரகாரமாயிருக்கும். மீசை, தலை மயிர், அங்கரோமம் இந்த மூன்று வகையான மயிர்கள் மூன்றரைக் கோடி.

**நான் எனது என்னும் செருக்கு**

தசரத குமரா கேளும்! தேகத்தின் சொரூபம் உமக்குச் சொன்னோம். இந்த மூன்று உலோகத்திலேயும் இந்தச் சரீரம் மிகவும் அசாரம் ஒரு பதார்த்தமுமல்ல. சத்தாயிருக்கிறதுமல்ல. இதனிடத்திலே நான், என்னது என்னும் அபிமானமென்கிற அகங்காரம் என்னும் பாபியினாலேயாகிலும் இப்போ மகாபாதக் கொடுமைகள் பண்ணப் படுகிறது. ஆகையாலிந்தத் தேகத்தின் சொரூபம். நாம் உபதேசித்தபடி மூமுட்சுகளான பேர்கள் அறிய வேண்டியது.

இப்படி பத்மமென்னும் மகாபுராணத்தில் சிவனாலே சொல்லப்பட்ட உபநிடதத்திலே பிரம வித்தையான யோக சாஸ்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே சரீரமென்னும் ஒன்பதாமத்தியாயம் முற்றும். சிவகிருபை உண்டாக வேணும்.

## பத்தாம் அத்தியாயம்

# சீவ சொரூப உபதேசம்

**இராமரின் கேள்விக் கணைகள்**

சிவனைப் பார்த்து இராமர் கேட்கிறார்! வாருமைய்யா பகவானே! இந்தச் சீவனானவன் மனுஷ சரீரத்திலே எவ்விடத்தே இருப்பன்? எவ்விடத்தில் தானும் உண்டாகுறான்? இவன் சொரூபம் தானேது? இந்தத் தேகம் விட்ட பிற்பாடு எங்கே போவன்? போய்த்தான் எவ்விடத்திலே இருப்பன்? எப்படி தானே திரும்பி வருவன்? போக்குவரத்து இல்லாமல் எப்படிதான் அவன்? இந்தப்படி இராமர் கேட்க சிவன் அநுக்கிரகிக்கிற பிரகாரம்

**பத்திக்கு மெச்சிய பரமன்**

மகாபாகரே நன்றாகக் கேட்டீர். இந்த அர்த்தம் ரகசியத்திற்கு இரகசியமாகிலும் இந்திராதிகளான தேவதைகள், மகத்து ரிஷிகள் முதலானவர் இதை அறியமாட்டார்கள் அதைச். சொல்லுகிறோம். நாமும் உம்முடைய பத்தியாலே மிகவும் பிரீதியடைந்தோம். இராமரே நீர் இதரருக்குஞ் சொல்ல வேண்டாம். சாவதா னமாய்க் கேளும்.

**எங்கும் எதிலும் இருப்பவர்**

சத்தாய், ஞானமாய், ஆனந்தமாய், அனந்தமாய், பரஞ் சோதியாய் சூட்சுமமாய், தூலத்துக்குக் காரணமாய், நித்தியராய், பரிசுத்தராய், சருவ ஆத்மகராய், பத்து அகங்கார பலம் இதுகள் அற்றவரான பரமாத்மா நானே! வேறொருவரில்லை நமக்கு ஒரு தர்மமுமில்லை. இந்திரியங்களாலேயும், மனசினாலேயும், நாம் கிரகிக்கத் தக்கவரல்ல. சகலத்தையுங் கிரகிக்கிறவர் நாம். சகலத்தையும் அறிந்தவர் நாம்.

நம்மையறியத்தக்கவர் வேறொருவரில்லை. பிறப்பு, இறப்பு, வளர்த்தி, உறுதி, தளர்தல், நாசம், இப்படிப்பட்ட அனுவிகாரங்கள் அற்றவராய், யாதொரு வஸ்துவிலே நின்றும் வாக்குகள், மனசுடனே கூட அண்டப்படாமற் திரும்புதோ நம்மையவரவர் மனசுக்கே ரசமான அப்படிப்பட்ட ஆனந்தவடிவான பிரமமென்று அறிந்தவன் - ஒன்றிலுமஞ்சான். அப்படியே சகல பூதங்களையும் தானாகவே அறிந்து எங்கும் ஐக்கியம் பார்க்கிறவனுக்கு என்ன மோகம்? என்ன சோகம்? இந்த ஆத்மாவானவர் சகல பூதங்களிடத்திலேயும் மறைந்தவராகையால்- வெளியாக வில்லை. சாத்திரங் கூர்மையுள்ளதாய் சூட்சுமமான புத்தியினாலே உற்றுப் பார்க்கிறவர்களாலே காணப்படுவர். அனாதியான அவித்தையுடனே கூடி அவ்வியராய் ஒருவராயே இருக்கிற நாம், அவ்வியாகிருதமான பிரம்ம ரூபராய் சாக்கிரத்தாலான ஈசுர ரூபம் நாமேயாகிறோம். சொற்பனப் பிரபஞ்சம் போல, இந்தச் சாக்கிரப் பிரபஞ்சமெல்லாம் நம்மிடத்திலேயே காண்பிக்கிறது. நம்மிடத்திலேயே இருக்கிறது.

### இலிங்க சரீரம்

ஞான பிரகாரமான அவித்தைகளுடனே கூடினவராய் சீவாத்மாவா இருக்கிறவரும் நாமே! கன்மேந்திரிய மஞ்சும், ஞானேந்திரிய மஞ்சும், பிராண வாயுகளஞ்சும், மனம், புத்தி, சித்தம், ஆங்காரம், இதன் கூட்டம் லிங்க சரீரத் தன்மை ,அடைகிறது. அதிலே அவித்தையுடனே கூடிக்கொண்டு பிருதிவி, லயிக்கும், சைதன்னியம் விவகார சித்தரான சீவனென்னும் கைஷத்திரிக்கியரென்றும் புருஷனென்றும் பேர் பெற்றவராய், சகல பிரபஞ்சத்தில் அனாதியான புண்ணிய பாவங்களுக்குக் கர்த்தாவும், பொத்தாவுமாகிறான். இகத்திலும், பரத்திலும் போக்குவரத்தும் சாக்கிர, சொப்பன, சுழுத்தி என்னும் மூன்றவத்தையில் சுகதுக்கப் போர்த்து, குரு தன்மையும் அவருதே. அப்போ பிரதி பிம்பமான அந்தச் சீவனுக்கே சுகதுக்காதி பந்தமல்லாமல் பிம்ப சைதன்னியமான அந்தப் பரமேசுரக்கு அந்தப் பந்தமில்லாதே போகக் கவ்வை ஏதென்னிற் சொல்லுகிறோம்.

### முகமும் பிரதி முகமும்

கண்ணாடியிலே முகம் பிரதி பிம்பிக்கிறபோது, அதனுள்ளே பிரதி பிம்பமான ஒரு முகம் தோன்றுது அல்லோ? அவ்விடத்திலே கண்ணாடியில் அழுக்கு வட்டடி முதலான அதன் தர்மங்கள் பிரதி முகத்துக்கே யல்லாமல், முதல் முகத்துக்கில்லை யல்லோ. இந்தப் படியே செலங்கள், கத்திகள் முதலான உபாதிகளிலே பிரதி பலிக்கிற சந்திரன் முகம் முதலானதுகளுக்கே செலத்திற் சஞ்சலம், வக்கிரம முதலான குணங்கள், பிரதி சந்திராதிகளுக்கேயல்லாமல் சுபாவமான சந்திரன் முகாதிகளுக்கில்லை. இப்படி உபாதி தோஷங்கள் பிரதி பிம்பங்களுக்கல்லாமல் பிம்பங்களை அடையாது. ஆனாலும் இந்த இரண்டுக்கும் அன்னியோன்னியம் தாதாந்மியத்தின் அத்தியாசத்தினாலே அந்தக்கர்ண ஆத்மாக்களுக்கு ஏசி, பாவத்தின் அபிமானத்தினாலே அந்தக்கர்ண சுகதுக்காதிகள், ஆத்மாவிடம் தோன்றுகையால் ஆத்மாவுக்குத்துக்கமென்று அஞ்ஞானன் அறிகிறான்.

**தூலதேகம்**

அன்றி பூமியிற் கானலைச் செலமென்று மூடன் பிரமிக்கு கையாலே, அந்தச் சூரியனுக்கு நனைதல், வராதல்லோ? அப்படியே ஆத்மா நிருலேபராகிலும் மூடாத்துமாக்களாலே தன் அஞ்ஞான தோஷத்தினாலே ஏகாதிருத்துவாதி சமுசார கர்மங்களுடையவனாய் காணப்படுகிறான். அதிலே அன்னமய கோசமான தூலதேக த்திலே பாதாதி கேசமட்டும் வியாபிச்சு இருதையத்தில் இருக்கிறான். சொல்லுகி றோம். அதை, ராமா கேளும்.

**இதயமும் நாடியும்**

பூரித்து என்னும் பேர் பெற்றதுமாய் நாபிக்கு மேல் கழுத்துக்குக் கீழ் ஒரு மாமிச பிண்டமிருக்கிறது. அதன் நடுவே காம்புடைய கோசம் போல, அதோ முகமான இருதையத்தினுடைய மிகவும் சூட்சுமமான ஒரு ரந்திர மூன்று. அது தேகராகரசமாகிலும் அதிலே சீவனிருப்பன். சீவனிருப்பான். மயிர் நுனியில், நூற்றிலொரு பாகத்தினுடைய பத்திலொரு அம்ச மாத்திரம் இந்தச் சீவனுடைய பிரமாணம். அவன் அனந்த தன்மையும் அடைவன். அப்படிப்பட்ட இருதையத்திலினி ன்றும் எங்கும் சுற்றி நாடிகள் பரந்து சரீரத்தை வியாபிச்சிருக்கும். அதுகள் இத்தையும் பலத்தையும் கொடுக்ககையால் விதங்களென்று பேர் பெற்றும், அதுகள் எழுபத்தீராயிரம் நாடியென்று யோக சாஸ்திரத்திற் சொல்லப்பட்டது. அதுகள் சூரியனிடத்தில் கிரணம் போல இருதையத்தில் நின்றும் எழும்புகிறது. அதிலே நூற்றியொரு நாடி முக்கியம். எங்கும் பரவி, ஒவ்வோர் இந்திரியத்துக்கு பவ்வத்து சட்டம் பத்திந்திரியத்திலேயும் நூறு நாடி விஷயோன முகங்களாய் கர்மாம் கர்ம முதலான ஏதுக்களாய் உண்டான சொற்பனாதி பல போகத்தின் பொருட்டுப் பிரிந்து நதிகளானது பிரவாகத்தைப் போலக்கரும பலங்களை வகுக்கிறது. அனந்தமாய் பிரமாத்திரம் மட்டும் உவர்த்துவ முகமாய் ருசுவாய், சுழிமுனையென்று நூற்றி யோர் நாடி அந்த வழியாய்ப் போற சீவன் முத்தனானவன். அதனாலே அவச்(ச) சின்னமாய்ப் பேதிக்கப்பட்ட சைதன்னியத்தைச் சிவனென்றும் மகத்துக்கள் சொல்லுவார்கள். அந்தச் சிவன் சுபாவத்தினாலே அதிரகசியம். ஆனாலும் சூரிய மண்டலத்திலே ராகு போல சிவன் சருவ வியாபியானாலும் லிங்க சரீரத்திலே காணப்படுவன்.

**நாடியும் லிங்க தேகமும்**

கடங்கொண்டு போகச்சே கடாகாசங் கொண்டு போறது போல, லிங்க சரீரம் போகச்சே நிச்சலும் பரிபூரணனுமாயே போகிறான் என்று உபசாரத்தினாலே சொல்லப்படுகிறான் சாக்கிர அவத்தையிலே ஆசற்பாவ விசேஷத்தினாலே, சூரியன் சகலதிக்குகளையும் போல் வியாபிச்சிருக்கிறான். நாடிகளாலே லிங்க தேகத்திற் பிறந்த விருத்திகளாலே அந்தந்த கருமானு சாரீயாய், அந்தந்த அவத்தையுற் போகங்கள் பொருட்டு அதுகள் எழுப்புகிறது. இந்த லிங்க சரீரமானது மோக்ஷ பரியந்தத்துக்குத் தொடரும். நசித்துப் போகாது. ஆத்மா சாட்சாத்கரத்தினாலே

அவித்தையுடனே கூட இந்தச் சரீரம் நசிக்குமளவில் தன் சொரூபமாத்திரமாய்த் தானிருக்குகை, முத்தியென்பிக்கும்.

**அவத்தையும் சுயம்பிரகாசரும்**

கடம் பிறந்த புன்பு ஆகாசமானது கடாகாசத்தன்மை அடையிறது. அது நசித்த பின்பு, தன் சொரூபத்தினாலே, கேவலாகாசமாகவே இருக்கிறது போல் இப்படிப்பட்ட சாக்கிறத்து கர்மநாசத்தினாலே சொப்பன போகம் வரும் போது தேக இந்திரியாதிப் பிரபஞ்சத்தில் அப்போதாவது இதை மறைத்து கர்மத்தினாலே எழுப்பப்பட்ட தேக ரட்சரமுள்ளவனாய் சொப்பனத்திலே கிடைக்கும். இச்சையாலே, மாயையினாலே, ஆத்மா வேறொரு அவத்தையை அடைகிறான். கடாதி சகல விசையங்களையும், புத்தியாதி கரணங்களையும், பஞ்ச பூதங்களையும், வாசனா மாத்திரமாய் சூட்சுமங்க ளான இதுகளைப் பார்த்துக் கொண்டு சுயம்பிரகாசராய் சாட்சியாயிருப்பர். அந்தக்கர ணாதிகள் வாசனையினாலே, வெகுபழக்கத்தினாலே, வாசனாற் மங்களென்பிக்கும். அப்படிப்பட்ட வாசனைகளாலே இந்த வாக்கிய பிரபஞ்சமெல்லாம் கர்மபிரானை உடையதாய் சொப்பனத்திலே காண்பிக்கும். அதனாலே அதற்குச் சாட்சிதான் சாக்கிரத்திலே இந்த லோகத்தைப் போல கர்மம் கர்த்தாதிக் கிரியை இந்தப் பிரபஞ்சமெல்லாம் தானாகத் தன்னிடத்திலேயே சாட்சியாய்க் கொண்டு தானே விளங்குவன்.

**ஊழ்வினை**

அப்படிப்பட்ட அந்த வாசனைகளைக் குறித்து தன்னுடைய சாட்சித்தன்மை அந்தச் சாட்சியான ஆத்மாவுக்கு சொற்பன மென்பிக்கும். போன சென்மத்திலே எந்தக் கர்மம் எப்படி எப்படி முடிந்ததோ அந்த வாசனைகளாலே முந்தின வயசிலே அந்தக் கர்மம் சேர்ந்திருக்கும். அதற்குத் தக சொப்பனத்தை அந்த வாசனைகளுக்குத் தக்கதாகப் பார்ப்பன். அந்திய வயசிலே பரலோகத்துக்கு இச்சீவன் தான் கர்ம உபாசனைகளுக்குத் தக்கதாய் மேற் சென்மத்தில் தன் சொரூபத்தைச் சொப்பத்திலே ஆத்மா பார்ப்பன்.

**இறை இன்பம்**

இந்தப்படி சாக்கிர சொற்பனா அவத்தைகளிலே திரிந்து சஞ்சரித்ததனாலே விகாரப்பட்டு ஆகாசத்தினாற் சஞ்சாரத்திலே விடப்பட்ட பருந்து தன்னிறகைச் சுருக்கிக் கொண்டு மரத்தின் கூட்டிலே புகுகிறது போல சகல காரணங்களையும் சுருக்கிக் கொண்டு, காரணமாக அவித்தையுடைய காரியமான சகல பிரபஞ்சத்தினிட த்தில் நின்றும் இந்திரியங்கள் வாசனையை நாடிகள் வழியாய் இழுத்துக் பிடித்துக் கொண்டு, விஞ்ஞான சொரூபமான இந்த ஆத்மா அவ்வியாக்கிருதராய் ஈசுரனென்று பேர் பெற்ற பிரஞ்ஞாத்மாவிலே தன் காரணத்திலே லயிச்சு சுகம் யாதாவராகிலும் அந்தரமறியாமல் தனக்கு இஷ்டமான ஸ்ரீயை ஆலிங்கணம் பண்ணிக் கொண்டவன் போல, ஆனந்தமயனாய் அவித்தையினுடைய சூட்சுமமான விருத்தியினாலே அந்தச் சுகத்தையும் அதைத் தோற்றுவிக்கிற அஞ்ஞானத்தையும் சூட்சுமமாகவே

கேவலந் தானொருவனே அனுபவிப்பன். ஆகையால் தூங்கியெழுந்தறிந்தவுடனே இவ்வளவு இம்மட்டு ஏது செய்தீர்? என்கிறவனைக் குறித்துச் சுகமாகத் தூங்கினேன். நானொன்றுமறியேன் என்றுதான் சொல்லுகிறான். அந்தபடியே நினைக்கிறான். அந்தக்கரண விருத்திகளால் இச்சியபடியால் அந்த அனுபவமும் அதற்குத் தக்க மேல் நினைவும் அவித்தையினுடைய விருத்தியினாலே உண்டாக வேண்டியது.

**விஞ்ஞானாத்மா**

இப்படி இகத்திலேயும், பரத்திலேயும் சாக்கிர, சொற்பன, சுழுத்தியென்று மூன்றவத்தையும் உண்டு. அதன் பிறகு கர்ம வசத்தினாலே நெருப்பில் நின்றும் பொறிகள் போல, மனோபுத்திகள் முதலானதுகள் காரணமான அஞ்ஞானத்திலே நின்றும் முன்னையைப் போலே உண்டாகிறது. செல பூரிதமான கடமானது நதியிலே செலங்களாலே அமிழப்பட்டு எடுக்கிற பொழுது, அந்தச் செலங்களுடனே கூடி வருகிறது போல இந்த விஞ்ஞானாத்மாவும் காரணாத்மாவான பிரஞ்ஞுகராலே வியாபிக்கப்பட்டவராய் அந்தக்கரணாதிகளுடனே ஏகிதீபவிச்சே எலும்பு வர அதுகளிருக்க மட்டும் காண்பிப்பர். அதுகள் நசிக்கும்போது காண்பியார். சூரியர் தாமொருவராயே அந்தந்தக் காரியங்களிலே அந்தந்த உபாதிகளிலே அந்தந்த ஆகாரமுள்ளவராய்த் தோன்றுகிறது தோன்றாதது போலக் கூடத்தராய், நிருவிகராய், பரமாத்மாவான இந்தாத்மாவே அந்தந்த உபாதிகளாலே அந்தந்த ஆகாரம் போல தோன்றுகிறதும், பேராவபோல் வருகிறவர் போலவுமிருக்கிறார். இப்படிச் சகலப் பிரபஞ்சமும், சகலப் பந்தமும், அஞ்ஞான மாத்திரமாயும் பிராந்தி மயமாயும் அவருக்கு இது கூடும். அவரானாற்கேந்தரிய அந்தக்கரண அத்தியாற்மகமான தூல, சூட்சுமம், காரண மென்னும் சரீரத்திரையத்தையும் கடந்து சுயம் பிரகாச சொரூபரா கும் அந்த ஆத்மா. தசரத குமாரரே கேளும். இப்படிப்பட்டது சீவாத்மாவினுடைய சொரூபம். இது அவக்கிறதாத்தமாகச் சொன்னோம்.

**பத்தாவது அத்தியாயம் முடிவுரை**

இப்படி சிவனனுக்கிரகித்தப் பிரகாரம். இந்தப்டி பத்மமென்னும் மகா புராணத்திற் சிவகீதையென்னும் உபனிடதத்திலே பிரம வித்தையான யோக சாஸ்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே சிவசொரூப உபதேசமென்னும் பத்தாமத்தியாயம் முற்றும்.

## பதினோறாம் அத்தியாயம்

# உபாசனா மார்க்கயோகம்

**சிவன் சொல்லுகிறார்**

இப்படிப்பட்ட இந்தச் சீவனுக்குத் தேகம் விட மறு தேகம் எடுக்க அவனுடைய பரலோக கதிபிரகாரத்தைச் சொல்லுகிறோம். கேளும் இராமரே! சாவதானமாய்! இந்த

தூல தேகத்திலே அன்னபானங்கள் கொள்ளுகிறது எது உண்டோ, அதனுடைய ரசாங்கிசத்தினாலே யாம் கட்டுண்டாம்.

**தூலதேகமும் மாம்பழமும்**

அதனாலே, தூல சரீரமும், லிங்கச் சரீரமும் தரித்து நிற்கிறது. வியாதியாலே தான், சிறையிலேதான், வயிற்றிற் பசி அக்கினியானது சிலேத்துமத்தினாலேதான், மந்திக்கப்படும். அதனாலே கொண்ட அன்னபானங்களை அந்த அக்கினிப் பக்குவம் பண்ண மாட்டாது. அதுகள் அவபக்குவமாகையால் அதில் ரசாங்கிசம் இல்லாமை யாலே, சத்த தாதுக்கள் அன்னரசங்காளலே தேகத்தைப் பூசாது. அந்த ரசத்தைத் தேகமெல்லாம் சர்மானமாக்குகையால் அந்த பிராண வாயு, சமானமாகிலும் இப்படிப் பட்ட அன்னரசம். இல்லாமையால் ஆம், பெந்தும் வற்றி, பரிபக்குவ ரசமான மாம்பழமும் காம்பினின்றுவிழும் போல தூலத் தேகந்தானே விழுகிறது. அப்போ, அந்தக்கரனங்களின் நின்றும் சரீரத்திற் பஞ்ச பூதங்களையும் இந்திரியங்கள் வாச னைகளையும் இழுத்துக் கொண்டு இருதைய கமலத்திலே அய்க்கியத்தை அடைந்து பிரான வாயு மற்ற ஒன்பது வாயுக்களுடனே கூடிக்கொண்டு ஊர்த்துவ முகமாய், லிங்கச் சரீரத்தைக் கூடிக் கொண்டு, ஊர்த்துவ சுவாசத்தை விட்டு கொண்டு, நாடிகள் வளியாக்கு கர்மோபாசனைகளுடனேயும் கூடிக்கொண்டு, பிராஞ்ஞாத்மாவை அடைந்து இந்த விஞ்ஞாத்மாத்வான சீவன் சட்சுவிலும் சிரசிலும் தான் புறப்பட்டுப் போவன்.

**தேகமும் கர்மமும்**

கும்பமாகிறது ஒரு தேசத்தில் நின்றும் தேசாந்திரத்தை நோக்கிக் கொண்டு போறபோது, ஆகாச பூரிதமாகவே கொண்டு போறது போலவும், அதன் ஆகாசம் கடாகாசத் தன்மையடையிறது போலவும், இந்த லிங்க சரீரம் போகுமிட மெல்லாம் இந்த ஆத்மாவும் எங்கும் இருத்தும். அதனுடனே கூடுகையால் அந்த உபாதியினா லே போகிறானென்னப் படுகிறார். திரும்பவும் கன்மானு சாரியாய் தேகாந்திரிகளை யும் அடைகிறான்.

**யாதனா சரீரமும் நரகமும்**

இந்தத் தேகம் மோட்சம் வரமட்டும் நதியில் மீன்யிடுகையும் போல இரண்டு லோகத்திலேயும் திரிகிறது. அதிலே பாவ பலம் போக்கும் பொருட்டுப் போறதாகில் யம தூதர்களாலே அதிட்டிக்கப்பட்டதாய், யாதனா சரீரத்தைப் படைத்து நரகத்துக்கே போம். இஷ்ட பூதங்கள் முதலான கர்மிய கர்மங்களை எக்காலம் அனுஷ்டித்த வனாகில் பிதுர்லோக மென்று பேர் பெற்ற சொர்க்காதி புண்ணிய போகமடைவன். அவனடையிற் வழி முந்த அக்கினியினுடைய புதையை அதன், அயிமான தேவதையாலே அடையப்படுவன்.

**சொர்க்க லோகம்**

அந்த தர்மத்திலே நின்றும் ராத்திரியையும், ராத்திரியிலும், கிருஷ்ண பட்சத்தையும், தெக்ஷனாயனத்தையும், அந்தத் தெக்ஷனாயத்திலும், பிதுர் லோகம் சந்திர லோகமென்று பேர் பெற்ற சொர்க்க லோகத்தை, தெய்வலோகத்தை அடைந்து திவ்விய தேகத்தை அடைந்து, மகாபோக பாக்கியங்களைச் சந்திரனுக்குச் சமான மான ரூபமுடையவனாய், கர்மம் இருக்க மட்டும் பொசித்து, திரும்ப கர்ம சேஷத்தி னாலே, இந்த லோகத்தை அடைவன் அப்போ திவ்வியமான அந்தத்தூல தேகத்தை விட்டு, முன்போல லிங்க சரீர வடிவாகவே முந்த ஆகாசத்தை அடைவன். ஆகாசத்திலும், வாயுவை வாயுவிலும், பரசன்னியத்தை பரச் சன்னியத்திலும், மேகத்தையும், மேகத்திலும், மழையையும், மழையிலும், பொசிக்கத்தக்கதாக, தானியங்களாகப் பிறப்பன். அதிலே சிறிதுபேர் கர்ம விசேஷத்தினாலே தேக நிமித்த கமாகத் தாய்க்கர்ப்பத்தை அடைகிறார்கள். மற்ற சிறிது பேர்கள் மரங்கள், மட்டைகள் இந்த செனனம் அடைகிறார்கள்.

**கர்மமும் சட்டமும்**

அவரவர்கள் கர்மமே அவரவர்கள் சென்மத்துக்கு சட்டம். அதற்குப் பின்பு அந்தத் தானியங்கள் அன்ன ரசங்களாய் மாதாபிதாக்களாலே பொசிக்கப்பட்டுச் சுக்கிலமுமாச்சு. மாயக் கற்பமாகிறது. அந்தக் கர்ப்பம் அதன் கர்ம வசத்தினாலே ஆண், பெண், அலியாகும். இந்தப்படி இந்தச் சீவனுடைய போக்கு வரத்தைச் சொன்னோம்.

**பிரமலோகம்**

இப்பரம் விட்டு போற, முத்தி வழியைச் சொல்லுகிறோம். யாதாமொருவன், சம தேமாதிகளுடனே கூடின எக்காலம் உபாசனாபரனாவன், அந்தச் சீவன் தெய்வ யான மார்க்கத்தினாலே பிரம்மலோகம் மட்டும் போவன். அந்த வழி ஏதென்னில் சொல்லுகிறோம். முதல் இந்தத்தூலத் தேகத்தை விட்டு லிங்க சரீரத்துடனே அரசென்னும் ஒரு தேவதையை அடைவன். அரசிலும் திவசத்தையும், திவசத்திலும், சுக்கில பக்ஷத்தையும், சுக்கில பக்ஷத்திலும், உத்தராயணத்தையும் உத்திராயனத்தி னும், சமவத்சரத்தையும் சமவத்திசரத்திலும், ஆதித்தனையும், ஆதித்தனிடத்திலும் சந்திரனையும், சந்திரனிடத்திலும் வித்தியுத்தையும் அடைந்தபின்பு, ஒரு திவ்விய புருஷன் பிரம்ம லோகத்திலும் வந்து எதிர் கொண்டு இந்தச் சீவன் திவ்விய தேகத்துடனே கூட்டிப் பிரம்மலோகம் அடைவிச்ச பின்பு, அந்தப் பிரம்ம லோகத்திலே பிரம்மாவுடனே எதேட்டமான திவ்விய தேகங்களைப் பொசித்துக் கொண்டு அந்த பிரம்மா இருக்கு மட்டும் இருந்து, அவருடனே கூட முத்தியை அடைவன். இது உபாசகன் வழி.

**கண்ணீரும் உப்புக்கட்டியும்**

சுத்தமாய் அத்துவிதமான பிரம்மத்தைத் தானென்று ஞான நிஷ்டையுடைய வனாலே அவனோரிடத்திலேயும் போகான். அவனிடத்திலே பிராணன்கள், லிங்க சரீரம், இது செலத்திலே விட்ட உப்புக்கட்டி போல, இலயிச்சுப் போம். இன்னும் தூங்கியெழுந்தவனுக்குச் சொப்பனப் பிரபஞ்சத்தின் சிருட்டி போல, பிரம்ம ஞானமு டையவன் தேகாதி சிருட்டியும் அந்த ஆத்மாவினிடத்திலே இலயிச்சுப் போம்.

**மூன்றாங்கதி**

இந்தப்படி உபாசனை, கர்மம் இந்த இரண்டு வழி இல்லாதவன் மூன்றாங்கதி அடைவன். அவன் மகாகோரமாய் மகா ரவரவாதி நரக முதலான நரக வாதயே அனுபவிச்ச பின்பு பாவக்குறையினாலே சமஸ்த செந்துகளிலே ஈ, கொசு, பேன், கிருமி, கிடகங்களாகப் பிறப்பன். இந்தபடி சீவனுடைய ஆதி பேதங்களைச் சொன்னோம்.

**இராமரின் சந்தேகம்**

இனி எது கேட்க வேணும் என்கிறீர்? இராமரே சொல்லுமென்று கேட்ட சிவனைக் குறித்து திரும்ப இராமர் கேட்கிறார். வாருமையா பகவானே! ஞானத்துக் கும் கர்மத்துக்கும் தேவரீர் பிரம்ம லோகத்திலேயும் சந்திர லோகத்திலேயும் போக பலமென்று சொன்னீர். அந்தப்படியாகட்டும். கந்தருவாதி லோகங்களிலே போகம் எப்படிப்பட்டது? ஒருவன் தேவன், ஒருவன், கந்தருவன், ஒருவன் இந்திரனாகிறான். இது கர்ம பலந்தானும் உபாசனா பலந்தானாகட்டும். பார்வதி பதியான சிவனே அதிலே எனக்கு மெத்தவும் சமுசயமாக இருக்கிறது. அதை விவரித்துச் சொல்லும் என்று கேட்ட ராமருக்குச் சிவன் உத்தாரம் சொல்லுகிறர்.

**ஆனந்தம்**

கந்தருவாதி லோகங்களிற் போகமும் உபாசனை இதின்று சரியான பலமே. சரி. அதெப்படியன்றோ? தருணனாய், அழகனாய், சூரனாய், ரோமற்றவனாய், பலவானாய், யாதொருவன் ஏழுதீவுடைய இந்தப் பூமியை உபத்திரவம் இல்லாமல் எவன் பூசிக்கிறானோ. அப்படிப்பட்ட போகம் மனுசாள் ஆனந்தம் என்பிக்கும். அதிலும் நூறு குணம் அதிகரிச்சது தபசிலே மிகுந்த மக்ஷ கந்தருவானந்தம், அவனிலும் நூறு குணமதிகரிச்சுது. தேவகந்தருவானந்தம். இந்தபடிச் சீவலோகர்க ளாகிய பிதுர்க்கள் அஞ்ஞான ஞானகர்ம தேவாள், தேவன், தேவ தேவந்திரன், பிரகஸ்பதி, பரசார்பதி, பிரம்மா இவர்கள் ஆனந்தம் உத்தரோத்தரம் நூறு நூறு குணம் அதிகரிச்சது. ஞானாதிக்கத்தாலேயாகிலும், தேவலோகத்திலே சுகதுக்கம், இப்படி உத்தரோத்தரமான அந்த ஆனந்தங்களெல்லாம் வேத சாஸ்திர சம்பண்ணனா ய்க் கர்மனையாலடி படாதவனாய்ப் பரப்பிரம்மாகத் தன்னை அறிந்த பிராமணனு டைய பிரமானந்தத்துக்கு ஈடல்ல.

**ஞானியின் மகிமை**

தசரத குமாரரே கேளும். ஆத்மானந்தத்துக்கு மேற்பலமுமில்லை. அப்படிப் பட்ட பிராமணன் கர்மங்களாலே ஏறான். குறையான், கட்டுப்படான். பாதங்களாலே பற்றப்படான். ஆகையால் அப்படிப்பட்ட ஞானியானவனே சகலரையும் அதிகரித்த வன். அப்படி அறிந்தவன் பண்ணுகிற கர்மம் அக்ஷயம் ஒரு கோடி பிராமனரைப் பொசிப்பித்த பலம், ஞானியான ஒரு பிராமணனை பொசிப்பித்தவனுக்குண்டு. ஞானிகள் பொருட்டு கொடுப்பிக்கிறது, ஒன்று கோடி பலம். ஞானமுள்ள பிராமண னைத் தூவெளிக்கிறவன் மனுசரில் தமன். அந்தப் பாவியானவன் வெகு துக்கத்துடனே மரிச்சுப் போவன். ஏதென்னில் அந்த ஞானியே ஈசுரன். அவனது திரேகமே ஈசுரதுரகம். ஆகையால் அந்த ஞானத்துக்குச் சரியான வஸ்துவில்லை. அப்படி இந்த ஞானியைப் போல உபாசகனுங் கர்மனையற்று பரசிக்கிறவன் ஒருக்காலும் அதோ கதியையடையான். நீரும் உபாசனா தாபராய்ச் சகல கிலேசமற்று சுகமாயிரும்.

.

**பதினோறாம் அத்தியாயம் முடிவுரை**

இப்படிப் பத்ம புராணத்திற் சிவராகவ சம்வாதத்தில் உபாசனா மார்க்கயோக மென்னும் பதினோராமத்தியாயம் முற்றும்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# உபாசனா விதி

**இராமரின் வேண்டுகோள்**

இராமர் கேட்கிறார். தேவதேவேசுரராய் பகவானான் மயேசுரரே! தேவரீர் பொருட்டு நமஸ்காரம். உபாசனா விதி பண்ணுகிற பிரகாரத்தையும் அனுஷ்டிக்கிற உபதேசம், அதன் காலம், அதன் அங்கங்கள் இதுகளை என்னிடத்தில் அனுக்கிரக திட்டியுண்டாகில் சொல்ல வேணும் என்று ராமர் கேட்க, சிவன் சொல்லுகிறார்.

**எங்கும் எவையுமாய் இருப்பவன்**

சகலாகாரமுடையவரும் சச்சிதானந்த மூர்த்தியாயிருக்கிறவரும் நாமொரு வரே. நம்முடைய அம்சங்களாய்ப் பரிச்சின்னராகிலும் தேவர்களும் யாதொருவர்கள், இதர தேவதைகளைப் பத்தியினாலே சிரத்தையுடனே கூடிக்கொண்டு ஆராதிக் கிறார்களோ விதி பூருவ மாகாமல் நம்மையே உபாசிக்கிறார்கள், யாதொரு காரணத்தினாலே சகல பிரபஞ்சமும் நம்மைப் பார்க்கிலும் வேறில்லை. சகல கர்மங்களுக்கும் பேர் தரவும் அதன் பலன் கொடுக்கிறவரும் நாமே. யாதொரு மனுஷர் எந்தெந்த ஆகாரத்தினாலே நம்மை உபாசிக்கிறார்களோ அவர்கள் பொருட்டு அந்தந்த ஆகாரத்தினாலே பிரசன்னராய் நாமே அவர்களுக்கு அபீஷ்டத்

தை கொடுக்கிறோம். விதியாகத்தான், விதியில்லாமறத்தான், பத்தியினாலே நம்மை உபாசிக்கிறவர்களுக்கு, ஆனால் நம்முடய சொரூபத்துடனே பிரசன்னராய் நாமே பலங்கொடுப்போம். அதற்குச் சந்தேகமில்லை.

**பிரமகத்தி**

மிகவும் துராசராபானாகிலும் அன்னிய சித்தனாய் நம்மை அப்பிச்சிருக்கிறானோ அவன் நல்லவனே, என்று எண்ணத்தக்கவன். ஏனெனில் அவனுடைய நிச்சயமானது மிகவும் படிமான மாயிருக்கும். நம்மை யொருவரையே தன்னிட சீவாற்மாவாய் அன்னிய சித்தமாய், கொண்டடைகிறானோ அவனை பிரமகத்தி முதலான பாதகங்களுமுட்பட அவனை அண்டாது.

**சம்பத்து**

அதிலே உபாசனை இந்த உபாசனைகள் சம்பத்தென்றும் ஆரோபமென்றும் சஞ்சறகமென்றும் அத்தியாசமென்றும் பெரியவர்களாலே நாலு விதமாகச் சொல்லப் படுகிறது. அதிலே அர்ப்பமா இருக்கிற வஸ்துவை அதிகரிச்ச குணமுள்ளதாகப் பண்ணுகிற தியானம் சம்பத்தென்பிக்கும். மனசு அனந்தமென்று உபநிடதத்திலே சொல்லப்பட்ட உபாசனை அற்பமான மனசை அனந்தமான குணத்தைச் சம்பாதித்து அதனுடையதாகத் தியானிக்குகையால் சம்பத்தென்பிக்கும்.

**ஆரோபம்**

விதியினாலே ஒன்றிலே ஒரு தன்மை ஆரோபித்துப் பண்ணும் உபாசனை ஆரோபமென்பிக்கும். பிரணவித்தை கிறுவிலே பண்ணுகிற சாமகானத்தின் அம்சமான உற்கீதமாக உபாசிக்க வேணுமென்று சொல்லப்பட்ட உபாசனை ஆரோபம். அப்படியே புத்தி பூர்வமாக இல்லாத அர்த்தத்தை ஒன்றிலே வேணுமென்று ஆரோபிக்குகையும், அந்த ஆரோபமென்கிற உபாசனை யென்பிக்கும்.

**அத்தியாயம்**

ஒரு கிரியா யோகத்தினாலே ஸ்ரீயினிடத்திலே அக்கினி பன்னுகிற புத்தி முதலானது அத்தியாசமென்கிற உபாசனையென்பிக்கும். ஒரு கிரியா யோகத்தினாலே பண்ணுகிற உபாசனை விதி சங்கசாமென்பிக்கும். அந்தப்படி என்னிற் பிரளய காலத்திலே பூதங்களையும் வாயுவினாலே உபசங்கரிச்சுத் தானொருவனே இருக்க வேணுமென்று சொல்லப் பட்ட உபாசனாவிதி சங்கற்கம், இவ்வன்னம் புத்தியினாலே தேவதாரம் வடிவாக அந்தந்த தேவதையைச் சேர்ந்தடைந்து பண்ணப்படும் உபாசனையும் அத்தியாசமென்று சொல்லப்பட்ட நாலாமுபாசனையென்பிக்கும். இது சம்பத்து முதலான வெளியில் மூன்று உபாசனையிலும், மிகவும் அதிகரிக்கும். அதற்கு லெட்சணங் கேளும்.

**உபாசனை**

விசாதியான வேறொரு ஞானங்களாலே அடையப் படாத தாயலே ஐக்காதி யான ஞானங்களுடைய சந்தானத்திலே உண்டான தன்னிடத்தில் தேவதாரம் தனிமை இதிப்போ உபாசனைக்கி லெட்சணம். இதுவே ஆதாரமாகையால் அகங்கிற கற்பாசனை என்றும் பேர் பெறும். சம்பத்து முதலானவாதியங்களிலே பண்ணுகிற சிருட்டித் திடமான புத்தியே பரசனைக் கர்மம். அனுஷ்டிக்குங் காலத்திலே உற்சித முதலான அதினங்களிலே பண்ணுகிற சிருட்டி மாத்திரம் உபாசனை. இந்தப்படி உபாசனா விதியைச் சொன்னோம். அதன் அங்கங்களைச் சொல்லுகிறோம் கேளும்.

**யோகத்தின் முறை**

தீர்த்தங்களைச் சேத்திரங்களை நோக்கி யாத்திரை அதினிடத்திற் சிறந்த விடுகை தன் சிதத்தே காக்கிற தன்மையும், கம்பளம் மிருதுவான மெத்தை, வியாக்கிற சருமம், இது முதலானதுகளிலே ஏகாசனமா இருக்குகை நிறசெனப்பர். தேகம் சமமாக நிறுத்தப்பட்ட கழுத்து, சிரசு, சரீரம் இந்தப்படி அத்தியாசிரமமென் னும் சன்னியாசத்திலே பாசுபத விரதத்திலே தானிருந்து கொண்டு, சகல இந்திரியங் களையும் நிக்கிரகிச்சுக் கொண்டு, பத்தியினாலே தன் குருவை நமஸ்கரித்து வித்து வானானவன் யோகத்தை அப்பியாசிக்க வேணும்.

**சித்தில்லாதவன்**

யாதொரு மனுஷன் விஞ்ஞானமில்லாதவனாய் ஏகசித்தனுமாகானோ அவனுக்குப் பொல்லாத குதிரைகள் சாரதிக்குப் போல இந்திரியங்கள் வசங்களாகாது. அப்படியே விஞ்ஞான மற்றவனாயும் எக்காலம் அசூகியாயும் ஏகசித்தன் ஆகாதவனும் அந்தப் பரமபதத்தை அடையான். சம்சாரத்தையே அடைவான்.

**பரமபதம்**

யாதொருவன் விசேஷ ஞானமுள்ளவனாய் உத்தமமான மனசுடையவனோ சாரதிக்கு நல்ல குதிரைகள் போல அவனுக்கு இந்திரியங்கள் வசமாம். அப்படியே மனசு செயிச்சுப் பரிசுத்தியுள்ளவனான ஞானியானால் மறுபிறப்பற்ற பரம பதத்தை யடைவன். அப்படியே விக்கரணமென்னும் சாரதியையும் மனசு என்னும் இந்திரியக் குதிரையைக் கட்டுங் கயிறுமுள்ளவனே சகல ஆத்துமாவையுங் கடந்த கரையான நம்முடைய பரமபதத்தை அடைவன்.

ஆகையால் இந்தப்படி. மனசையும் இந்திரியங்களையும் நிக்கிரகிச்சுக் கொண்டு தன் இதையத்திலே நிர்மலமாய், பரிசுத்தமாய் ரசோ குணமற்றதாய், சகல கிலேசமற்றதாய்; ஒரு கமலத்தைச் சிந்தித்து அந்த இருதைய கமலத்திலே. பரமேசுரனான நம்மைத் தியானம் பண்ணுகிர பிரகாரம்.

**பரமசிவன் உருவ அமைதி**

அசித்தியமான ரூபமுடையவராய், அத்தியந்த சூட்சுமராய், மற்றுஞ் சனன மரணமற்றவராய், கர்த்தராய், சுத்த படிகவடிவராய், உமாத்தேகராய், புலித்தோல், நீலகண்டம், மூன்று கண், சடை, சூட்சும சந்திரரேகை, நாகம், யக்ஞோபவீதம், புலித்தோல் உத்தரியம், வரதம், அபயம், மான், மழுதரித்த நாலுப்புயமும், மத்தியான காலத்திற் கோடி சூரியப் பிரகாசம், கோடி சந்திர சீதளமும், சந்திர சூரியாக்கினியென்னும் கண்களும், புன்சிரிப்புமுள்ள செந்தாமரை போலும் திருமுகமும்,, பாமோத் தூன்னமுடைய திவ்விய தேகமும், சருவ: பரணங்களும் உடையவரான பரமசிவனைத் தியானித்துக்கொண்டு தன்னாத்மாவைக் கீழாணியும் பிரணவத்தை மேலாணியுமாகப் பண்ணித் தியானாக்கினிக்கடையும் அப்பியாசத்தி னாலே மனுசன் நம்மை சாட்சாத்காரமாகப் பார்ப்பன்.

**எதையும் கடந்தவன்**

நாம் வேத வாக்கியங்களாலே - சாஸ்திரங்களாலே - வேறு மனசினாலே தான் லபிக்கப்படத்தக்கவரல்ல. தியானத்தினாலே எக்காலம் நம்மை வேண்டுகிறவனை நாம் வேண்டுவோம். பாவங்களில் நின்றும் விரத்தனாகாதவனும் சமதே மாதித்த சமாதத்த சமாதி மனசொழிவுமில்லாதவன் வெறுமறிவினாலே நம்மையடைய மாட்டான். இதுகளுடனே கூடின ஞானமுள்ளவனே நம்மையடைவன்.

**சதாசிவன் இயல்பு**

சாக்கிர, சொற்பன, சுழுத்தி, இதன் பிரகாசமே பரப்பிரமம். அதே நாமென்றறிகிறவன். சகல பெந்தங்களாலேயும் விடப்படுவன், இந்த மூன்று தானத்தி னாலேயும் பொசிக்கத்தக்க வஸ்துவும் அதன் போகமும் அதற்குப் பொத்தாவென் னும் திருட்டிலும் புறம்பான சாட்சியாய் சின்மாத்திரரான சதாசிவனே நான். இன்னும் சகல பூதங்களிடத்திலேயும் மறைஞ்சவராய் அதன் அந்தர்மியாய் ஒருவராய், சகலத்துக்கு அத்தியட்சராய், சகல பூதங்களுக்கும் இருப்பாய், சாட்சி யாய், அறிகிறவனாய் ஒன்றிலேயும் பற்றில்லாதவராய், நிர்க்குணராய், சகல வசமு ள்ளவராய், சகலருக்கும் அந்த ஆத்மாவாய், பிரபஞ்சத்துக்குப் பீஷமாய், காரணமான அஞ்ஞானத்தைத் தான், ஆகாரமாய், பண்ணுகிறவனாய், நித்திய ரூபமான பரமாத்மா வான நம்மைத் தான் பார்க்கிறவனுக்கே முத்தியல்லாமல் மற்றவர்களுக்கு இல்லை.

**பற்றற்றான்**

இந்தப் பரமேசுரரே தாமொருவராயே அக்கினியானது இந்தப் பிரபஞ்சத்திலும் பிரவேசித்து அந்தந்த தேக ரூபங்களிலே பிரதி ரூபங்கள் அடைந்தது போல சருவ பூதங்களுக்கும் அந்த ஆத்மா தான் ஒருவனே அந்த மாயா ரூபங்களிலே பிரதி ரூபங்கள் அடைந்தார். சூரியனும் அப்படியே பிரதி ரூபங்களை அடைந்து வாகியங் களான அதுகளிடத்தில் தோஷங்களாலே அதுகளைத் தோற்றுவிச்சுக் கொண்டே

பற்றப்படாததும் போலே இந்தச் சருவ பூதாத்மா தானொருவனே பிரபஞ்சத்தைத் தோற்றுவிச்சும் சுக துக்கங்கள் முதலான அதன் தோஷங்களாலே பற்றப்படான்.

**முத்தன்**

இந்தப்படி மகா புருஷனாய், கோடி சூரியப் பிரகாசனாய், இருளைக் கடந்த நம்மை இப்படி நன்றாக அறிந்தவனே அமிர்தனாய் முத்தனாவன். இதைத்தவிரக் கரை ஏறத்தக்க வேறொரு வழியில்லை. நாமே முதல் இரண்ய கருப்பரை உண்டாக்குகிறோம். அவர் பொருட்டு வேதங்களையுங் கொடுக்கிறோம். அப்படித் துதிக்கத் தக்கவராய், புராண ரூடராய், தேவரான நம்மை நன்றாக விசாரிச்சு நிச்சயித்தவனே சம்சாரமென்னும் மிருத்துவும் முகத்திலே நின்று விடப்படுவன். இந்தப்படி சமதேமாதிகளுடனே கூடிக் கொண்டு நம்மைத் தத்துவமாய் நன்றாக அறிந்தவன் சகல சம்சார துக்கத்திலேயும் விடப்பட்ட சீவன். முத்தனாய் இருந்து சரீரம் விடுமளவில் நம்மிடத்திலே லயமென்னும் விதேக கைவல்லியமான பரமுத்தியை அடைவன்.

**முடிவுரை**

இந்தப்படி பத்மமென்னும் மகாபுராணத்தில் சிவகீதை யென்னும் உபநிடதத் திலே பிரம வித்தையான யோக சாஸ்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே உபாசனா விதியென்னும் பன்னிரெண்டாம் அத்தியாயம் முற்றும்.

சிவகிருபை உண்டாயம் வேணும். குருபாதம்.

## பதிமூன்றாம் அத்தியாயம்

# மோக்ஷ ஞான யோகம்

**சூதர் சொல்வது**

சூதர் சொல்லுகிறார். இந்தப்படி மகாதேவர் சொற்கேட்டு கௌசல்யன் குமாரராய், புத்திமான்களிலே சிரோட்டமான இராமர் மிகவும் சந்தோஷத்துடனே உமாபதியான சிவனைக் குறிச்சு முத்தி இலட்சணத்தைக் கேட்கும் பிரகாரம்.

**இராமர் வேண்டுகோள்**

வாருமைய்யா பகவானே! கருணையுடனே கூடின இருதையராய் தேவரீர் எனக்குப் பிரகாசித்து முத்தியினுடைய சொரூபம், அதன் லட்சணத்தைச் சொல்லு மய்யா பரமேசுரரே! என்று கேட்ட ராமரைக் குறித்துச் சிவன் சொல்லுகிற பிரகாரம்.

**நால்வகை மார்க்கம்**

சாலோக்கிய மென்றும், சாமீப மென்றும், சாரூப மென்றும் சாயுச்சிய மென்றும், கைவல்லிய மென்றும் முத்தி அஞ்சுவித மென்றும், இராமரே அறியும். அதுகளிலே யாதொருவன் காமனையற்று ஞானமில்லாதவனாய் நம்மைப் பூசிக்கிறானோ அவன் நம்முடைய லோகத்தையடைஞ்சு, எதேட்டமாய் அதன் போகங்களைப் பொசிக்குகை சாலோக்கியம். யாதொருவன் நம்மை நன்றாக அறிந்து நம்மை நிட்கரமாய்ப் பூசிப்பானோ அவன் நம்முடைனே சமானவடிவையுடையவ னாய் நம்முடைய லோகத்திலே பூசிக்கப்படுவன். அதிலே நம்முடைய சன்னதியிலே அப்படிப்பட்ட இருப்பு சாமீபம். அதிலும் அதிலுமதிசமயமாம் நம்முட சமான ரூபம் அடைகிறது சாரூபம். இஷ்டா பூர்த்தங்கள் முதலான கர்மங்களையும் மற்றுந்தான் எதைப் பண்ணுகிறான் எதைப் பொசிக்கிறான்? எதை ஓமம் பண்ணுகிறான்? எதைக் கொடுக்கிறான்? என்ன தவசு பண்ணுகிறான்? அந்தக் கர்மங்களையும் நமக்கு அர்ப்பணமாகவே பண்ணுகிறவன் நம்முடைய லோகத்திலே நமக்குச் சமானமான மகிமையை உடையவனாய் அவ்விடத்துப் பாக்கியங்களைப் பொசிக்கிறானோ அது சாயுச்சியம்.

**பரமுத்தி அபரமுத்தி**

யாதொருவன் சமதேமாதிகள் ஒழிவு, விவேகம் முதலானதுகளுடையவனாய் தம்மைத் தன்னாத்மாவாகப் பார்க்கிறானோ அவன் பரஞ்சோதியாய் அத்துவிதமாய் ஒன்றான பரப்பிரமமேயாவான். அப்படிப்பட்ட ஆத்ம சொரூபமாகவே தோன்றியிருக் குகை அது இப்போ கைவல்லியம். அதே பரமுத்தி. மற்றது அபரமுத்திகள். அது எவ்வாறென்னில் சொல்லுகிறோம்.

**பரப்பிரமம்**

பரப்பிரமம் ஒன்றே இறப்பு நிகழ்வு எதிரென்னும் மூன்று காலத்திலேயும் ஒரு அதிட்டானத்திலேயும் ஒருவனாலேயும் ஒருவன் கையினாலேயும் வாதையில்லா மையாலும், சகலவாதைகளுக்கும் அதிஷ்டானமாகையாலும் அசத்தியம், அஞ்ஞான மென்னும் இருளை நீக்குகையாலும் சகலமான திருசியங்களையும் தோற்றிவிக்கும் ஒளியாகையாலும் ஞான ரூபம், ஒன்று மட்டும் மீதியளவு இல்லாமையால் அனந்த எக்காலமும் நிருபாதிகமான பிரதிக்கு விஷயமாகையால், அனந்த ரூபந்தான் ஒன்றே. ஆகையால் கேவலம் ஒன்றுடனே சமானம் ஒன்றுக்கு விருத்தமுமான சகல தர்மமும் அந்தப்படியாகிலும் மனசுக்கும் வாக்குக்குந் தூரம். அதுகளிலே அறியத்தக்கன பாதிகள் தன் சொரூபமாகாமையாலும் அகோசரம் தனக்குச் சமான சாட்சியான சோகிரஷ்டாதிக பதார்த்தங்களும் தனக்கு விருத்த சாதியான விசாதீக பதார்த்தங்களும் தனக்கு வேறா இல்லாமையாலும் தன் பந்தத்தினிடத்திற் கூடாமை யாலும், இந்த மூன்று விதமான பேதமென்றும் துவிதம். மற்ற படியாலும் அத்து விதம்.

**பிரம சொரூபம்**

இப்படிப்பட்ட சுத்தமான பிரம சொரூபமே நான். என்னிடத்திலேயே இந்தச் சராசரமான சகலப் பிரபஞ்சமும் அனாதியான அவித்தையினாலே கற்பிக்கப்படுகிறது; காண்பிக்கப்படுகிறது; அது ஆகாசத்திலே கந்தருவ நகரம் போலே பிராந்தி மாத்திரமல்லாமல் சத்தியமல்ல. அந்த அவித்தையாலே அது நம்மிடத்திலே பரிணமிக்கிறது. நம்மிடத்திலே இலயிக்கிறது. நம்மிடத்திலே சொரூபம் ஞானத்தினாலே அஞ்ஞானமான அந்த அவித்தை நசிக்கும் போது நான் ஒருவனே என்றைக்கும் அதிருசியனாய், சத்தாய், சித்தாய், ஆனந்தமுமான ஆத்மாவாய் இருக்கிறேன்.

**கைவல்யம்**

நம்மைத் தவிர சத்தியமாய், காலதேசம், பஞ்சபூதங்களும், மதிக்கு, விதிக்கு, ஒரு வஸ்துவும் இல்லை.. கேவலம் ஒருவனே நான். நம்முடைய சொரூபம் ஒரு திஷ்டியாலே ஒருவனும் பார்க்க மாட்டான். இப்படிப்பட்ட நம்முடைய சொரூபம் கைவல்லியம் நல்ல மனசின் விவேகத்தினாலேயும் நல்ல புத்தியாலேயும் அப்படிப்பட்ட நம்மை அறிந்தவர்களே சனன மரண மற்று அந்தக் கைவல்லிய முத்தியடைவார்கள்.

**இராமரின் ஐயம்**

இப்படிச் சிவன் சொற்கேட்டு திரும்பி இராமர் கேட்கிறார். இப்படிப்பட்ட தேவரீருடைய சுத்த ஞானம் மனுஷருக்கு வருமுபாயமெது? அந்தப் பிரகாரம் எனக்கு அருளிச் செய்ய வேணும் என்று கேட்ட இராமருக்கு மறுபடி சிவன் அநுக்கிரகிக்கும் பிரகாரம்.

**குரு உபதேசம்**

கிருமிகள் முதலாய் சதுர்முகபிரமா மட்டும் சகலப் பதங்களினின்று மொளிந்தும் புத்திர மித்திர, களத்திராதிகள் சகலரிடத்திலும் வாஞ்சை விட்டு மோட்சத்திலேயே சிரத்தையுள்ளவனாய் அதற்குச் சாதனமான வேதாந்த ஞானமிச் சித்துசமிடத்து புஷ்பம் முதலான காணிக்கையில் உள்ளவனாய், பிரமவேதாவான ஸ்ரீகுருவைச் சரணமடைந்து நெடுங்காலம் நியமங்களாலேயும் சேர்வைகளாலேயும் சந்தோஷிப்பித்து தான் மனச மரணத்துடனே சகல வேதாந்த வாக்கியங்களுடைய அர்த்தத்தைக் குரு உபதேசமாகக் கேட்க வேணும். அப்படிச் சகல வேதாந்த வாக்கியங்களுக்கும் நம்மிடத்திலே வருகிற நிச்சயமாகிலும் சிரவணமென்னும் பிரம வித்துக்கள் சொல்லுவார்கள். அப்படி குரு உபதேசமாகக் கேட்கப்பட்ட வேதாந்த அர்த்தத்தை லோகமானுஸ்மிருதிகள், இது முதலான சுருதிகள் சொன்ன திட்டாந்த ங்களாலே மனசுக்கு ஒவ்வப் பண்ணி அதைச் சிந்திக்கிறதே மனனமென்பார்கள். அதை யுத்திகளாலே வாக்கியார்த்த மொத்துக் கொள்ளுகையும் என்பார்கள். அதெப்படி என்னிற், பிரமமே சற்பதார்த்தம். அதன் சத்தையே அதனிடத்திலே ஆரோபிதமா இருக்கிற ஆகாசாதிகட்குப் படாத பிரபஞ்ச தர்மமான சத்தையாகத்

தோன்றுகிறது. வேறொரு சத்தையல்ல, ஆகில் அது அந்தப் பதார்த்த சொரூபமே. அதன் தர்மமோ பதார்த்த சொரூபமேயென்று சொல்லக் கூடாது, கடத்தின் சத்தை, படத்தின் சத்தையென்று, அந்தச் சத்தைக்குப் பிரபஞ்ச தர்ம தன்மையை க்ஷகள் நீக்கும் (சிஷ்ய கன்றிக்கும்) அனுபவமும் விபகாரமும் அப்போது எடுபட்டுப்போம். அந்த அர்த்தம் பிரபஞ்ச சத்தியவாதிகளுக்கு சம்மதமல்ல.

**மாயா சொரூபம்**

பிரபஞ்ச தர்மமாகட்டும் அந்தச் சத்தை என்கிறதும், ஒவ்வாது. அப்போது அசத்தை சத்தென்றும், அனுபவத்துக்கு அந்தத் தர்மாயான சத்தை விசையமாக மாட்டாது. அப்போ அதிட்டான பிரம சத்தையே கடாதிகள் சத்தென்றும் புத்திக்கு விஷயமாகலாம். தர்மமான சத்தை அந்தப் புத்திக்கு விசயமென்கிறபோது அப்பிராயாணிக்கங்களாய் அனந்தமான சத்தைகளைக் கற்பிக்க வேண்டி வர அனல் வித்தை வரும். ஆகையால் கட்படாதிகள், வெவ்வேறானாலும் அதுகளிலே ஏகாகாரமாய்த் தோன்றுகிற சத்தை அதன் அனுஷ்டானமான பிரமமே சரி, அதெப்படி போலென்னில், மிருத்தின் விகாரங்களான கடக பாவங்கள் முதலான பதார்த்தங்களு க்கு மிருத்து சத்தையல்லாமல் வேறே சத்தையில்லை. விகாரங்கள் உபகரணமான மிருத்தையடையும் போது மிருத்தே சத்தாய் இருக்குமல்லாமல் மற்றது சத்தல்ல. அந்த மிருத்தே சத்து. மற்ற விகாரங்கள் மாயா நாம ரூபமே அல்லாமல், வேறொரு சத்தையில்லை என்பது போலவும் சுவர்ண காரியமான கடக மகுடாதிகளுக்கு அந்த நாம ரூப விகாரங்கள் சத்தல்ல சுவர்ணமே அதன் சொரூபம் போலவும் கானலிலே தோன்றுகிற செலம் பிராந்தி மாத்திரமல்லாமல் சுபாவமல்ல. கிளிஞ்சலிலே தோன்றுகிற ரசிதமும் ஆபாசமல்லாமல் எதார்த்தமல்ல. இப்படிப்பட்ட கலப்பணி பிராந்திகளுக்கு அதிஷ்டானமே சத்தை அதே சொரூபம் போலவும் கற்பிதமான சகல பிரபஞ்சத்துக்கும் பிரமமே அனுஷ்டானம். அதை சத்தை என்றும் அதை சொரூப மென்றும் இது முதலான. உபநிடதத்துகளிற் சொன்ன திட்டாந்தங்களாலேயும் புத்தி களாலேயும் ஆசாரியோபாதிட்டமான மகா வாக்கியாத்மாகிற சீவப்பிரம்மா பெற்ற தை ஒவ்வப்படுத்தி மனசிலே பண்ணுஞ் சிந்தனை மனனம் இப்படிச் சிந்திக்கப்பட்ட தன் சொரூபத்தைத் தன்னிடத்திலேயே மோகத்தை நீக்கி அகங்காரமற்று சகலத்தி லேயும் சங்கத்தைவிட்டு சமதேமாதிகளுடனே கூடிக்கொண்டு, எக்காலந் தியானம் ஆதியினாலே திருப்பித் திருப்பி, அந்த அர்த்த ஞானத்தில் அனுசந்தான தாரை நிருத்தியாசனமென்பிக்கும்.

**சாதனம்**

இதிலே சிரவணம் மனசிலே ஞானத்தை நிறுத்தும். அப்படி நிறுத்திய தீபத்தை நிவாதம் அலையாமல் நிறுப்பது போல் உண்டான ஞானத்தை வாக்கியமான விஷயங்களாலே விடச்சே படுத்தாமல் ஏகதாரையாய் நிறுத்துகிறது. நிறுத்திச் சாதன மென்றறியவும். இப்படி இருந்த நிருத்தி சாதன முத்தன் அந்தப் பரிபாகத் தினாலே சித்தத்தின் பிராந்தி விபரீத நினைவு சமுசயம் அதற்கு மூலமான மோகம், இதன் சக்காரி தடையான கர்மங்கள், எல்லாந் தொலையத் துளக்கப்பட்ட கண்ணாடி

யிலும்போல் நிர்மலமான மனசிலே நிசமான சொரூபத்தின் பிரகாசமுண்டாம். அதிப்போ சாட்சாக்காரம். அது ஒவ்வொருக் கிருதாரதனுக்கு உடனே யுண்டாம்.

**சீவனமுத்தன்**

ஒருவனுக்கு நெடுங்காலத்திலே முடியும் அந்த அபரோட்ச சாட்சாகாரத்தினா லேயே அனந்த கோடி சென்மங்களிலே அர்ச்சிக்கம் பட்ட கர்மங்கள் அடை கவலைபோலக் கிடாத்தாகிலும் தனக்கு மூலமான அஞ்ஞானம் நசிக்குகையால், காபாலமுடைய கடம் போல் நிராதரவாய் நசிக்குமல்லாமல் கர்மங்களாலே கர்மங்கள், இருளாலே இருள் போல் தொலைய மாட்டாது. அப்போ ஞான முடிந்த பின்பு பண்ணுகிற புண்ணிய பாவந்தான் தன்வசமாய் வருகிறது, நீங்கிறது எப்படியென்னில் அதுவும் அந்த ஞானத்தினாலே நசிக்கும். அந்த ஞானி அந்தக் கர்மபலங்களிலே தண்ணீரிலே தாமரை போல் பற்றான். ஆகிலும் இந்தச் சரீரத்தை உண்டாக்குகின்ற பிராத்தமென்னும் கர்ம மெதுண்டோ அதுபோகத்தினாலே நசிக்கும். ஒழிய ஞானத்தினாலே நசியாது. பள்ளத்திலே விட்ட செலமும் முளைத்தப் பயிரும் போல தன்வசமாகவே நசிக்க தக்கது. ஆங்காரமகாரம் மற்றும் ராகத்துவேஷதிகளை விட்டு சகல பூதங்கடத்திலேயும் தன்னையும் தன்னிடத்திற் சகல பூதங்களையும் இப்படி ஏகாத்மமாகப் பார்த்திருக்கிறவன் எவனோ அவனே சீவனமுத்தன் எனப்படுவன்.

**பாம்பும் பழுதையும்**

சங்கை இப்படி சீவன் முத்தனான இவன் தனக்குத்தான் போலே தன்னைப் பார்க்கிறவருக்கும் எனத் தோன்றான். சம்சாரி போல், மனுஷன் போல், ஏன் தோன்றுகிறான்? என்னுஞ் சங்கைக்குப் பரிகாரம்.

பழுதையானதுதான் பாம்புமல்ல; பாம்பாகத் தோன்றுகிறது சுபாவமுமல்ல; ஆகிலும் பிராந்தரமுடைய பார்வைக்குப் பிரள உருளப் படுக்கத் பயமுறுத்துகிறது போல் பரமா திருட்டிக்கு இந்த ஞானி சம்சாரியாய்க் தோன்றியும் தனக்குத் தானாகவே தோன்றுகிற இந்த இரண்டுக்கும் எவ்வளவாகிலும் வித்தியாசமில்லை. எக்காலத்திலே இவனுக்கு இருதயத்தில் இருக்கும் ராகதுவேஷவாதனைகள் விட்டுப் பிரியுதோ அப்போதே அந்த மனுசன் முத்தனாய் பிரம சொரூபத்தை அடைவன்.

**சித்தாந்தம்**

எப்பொழுதுதான் இருதையத்தில் முடிச்சுகள் போலிருக்கிற வாசனைகளெல் லாம் சேதிக்கப்படுகிறதோ உடனே சாந்தி மோட்சமுடையவன் அமிர்தனாவன். அவனுக்கு முத்திக்கு அட்டியில்லை இதுவே சருவவேதாந்தத்தின் சித்தாந்தம். இதுவே பரம உபதேசம்.

### மோட்சம் எது?

இராமரே கேளும். மோட்சத்துக்கு ஒரு ஊரும் இருப்பும் ஒரு பேரும் ஒரு ரூபமுமில்லை. அஞ்ஞானமென்னும் இருதையக்கிரந்தியினுடைய நாசமே மோட்சமென்று சொல்லப்படுவது. அதெப்படியென்னில் மரத்தில் உயரத்தில் கால் நழுவினவன் விழ எவ்வளவு காலஞ் செல்லும்? எதனாலேதான் அது முடியும்? அப்படியே தத்துவ ஞானத்தினாலே அவத்தியாக் கிரந்தியிலும் நழுவினவன் இச்சித்தாலும் இச்சியாய் விட்டாலும் முத்தனேயாவன். இன்னும் சொல்லுகிறோம். புண்ணிய தலத்திலேதான் புண்ணிய தினத்திலேதான் சண்டாளக்கிரகத்திலே தான் மரிக்கட்டும், பிரக்ஞைதான் அயிராமதான் போகட்டும், அது காரணமல்ல. அவன் ஞானமுடையவனாகில் தேகம் விட்டவுடனே முத்தியை யடைவன். அப்படியே ஞானமுடையவன் ஏதாகிலும் உடுத்தட்டும், எத்தையாகிலும் பொசிக்கட்டும், எங்கே யாகிலும் படுக்கட்டும் தூங்கட்டும், எந்தப் பிரகாரமாய் இருந்தாலும் ஞானவானான மகானுபாவன் திரும்பியுஞ் சம்சாரத்துடனே கூடான்.

பாலிலும் உண்டாக்கப்பட்ட நெய்யானது திரும்பிப் பாலில் விட்டாலும் கூடா தல்லோ, இந்த ஞானியும் அந்தப்படியே. இந்தப்படியே மோக்ஷ ஞானவுரை யென்னுமிந்த அத்தியாயத்தைப் பத்தியுடனே எக்காலமும் படிக்கிறவனுங் கேட்கிற வனும் இந்தத் தேகத்திலே நின்றும் அனாயசமாக முத்தனாவன்.

### ஞான சொரூபம்

ஆகையால் இராமரே நீரும் சித்த சுத்தியுடனே இந்த அத்தியாயத்தைப் படியும். அதனாலே அனாயாசமாகவே மோட்சமடைகிறீர். நிச்சயம் இப்படி சிவன் இராமருக்கு முத்தி சொரூபம் முத்தி சாதனமாகஞான சொரூபமும் முத்தி உபதேசஞ் செய்த பிரகாரம்.

### முடிவுரை

இப்படிப் பத்மமென்னும் மகாபுராணத்திற் சிவகீதையென்னும் உபநிடதத்திலே பிரமவித்தையான யோக சாஸ்த்திரத்தில் சிவராகவ சம்வாதத்திலே மோக்ஷ யோக மென்னும் பதிமூன்றாமத்தியாயம் முற்றும்.

குரு கமலம். பரமானந்தம் குருபாதமே கதி. சற்குரு பாதம் துணையுண்டு.

## பதினான்காம் அத்தியாயம்
# பஞ்சகோச விவேகம்

**இராமரின் ஐயங்கள்**

இராமர் கேட்கிறார். வாருமைய்யா பரிபூரண சற்குணரான பகவானே! தேவரீருடைய சொரூபம் சத்து, சித்து, ஆனந்தம் நிட்களம், கிரியை இல்லாதது சாந்தம்; தோஷமில்லாததும் நிரலேபம்; பற்றில்லாததும் ஒரு தரம் இல்லாததும் மனோ வாக்குக்கு அக்ஷயம். பாலிலே நெய் போல் சகலத்தையும் வியாபிச்ச ஆத்மாவும். அறம் ஞானத்துக்கும் ஆத்ம சொரூபத்தின் அனுசந்தானமென்னும் தபசுக்கு மூலக்காரணமாய் உபநிடதத்திற் பிரசித்தமான ஒன்றான பிரமமாகில் அது அனாகாரம். சருவ பூதங்களின் சொரூபம். தூல சூட்சுமங்களான காரிய காரணங்களுக்கும் காரணமாம். உம்முடைய மூர்த்தி சகல பூதங்களுக்கும் சகல காரணங்களுக்கும், காரணம் சகலத்துக்கும் அதுவாரமது. இதுவானால் அதிரகசியம். அக்கிராக்கியம் அது தரிசிக்க, கிரகிக்க யோக்கியமாகிறது எப்படி? உம்முடைய நிசசொரூபம், நிர்க்குணம். அது கிரகிக்கப்படாது. சுபாவம் கிரகிக்கதக்க சற்குணாகாரம் சுபாவமான சொரூப மல்ல. இதற்கு உபாயமேது? வழியேது? அது அறியாமையாலே மெத்தப் பெரிதாக இருக்கிறது. சங்கரரே, இது வழி பண்ணச் சொல்ல வேணும் என்று இராமர் கேட்க, பகவான் சொல்லுகிற பிரகாரம்.

**அருந்ததி**

கேளும் இராமரே! நீ மகாபுருஷாளல்லோ, உமக்கு அதிலே உண்டான உபாயஞ் சொல்லுகிறோம். அதெப்படியென்னில் முன்னே சகுனோ பாசனைகளாலே - சித்தத்தைக் குணத்திலே ஏகாக்கிரமாக நிறுத்தி உறுதியான பிற்பாடு அந்தச் சகுண வழியாய்க் கிரமத்திலே நிர்க்குணத்திலே நிறுத்தவேணும். அதெப்படி யென்னில் நட்சத்திர மண்டலத்திலே அருந்ததியை யறியாதவனுக்கு அதன் சமீபத்திற் தூல நக்ஷத்திரங்களிலே முதல் அருந்ததி தன்மையைக் கிரகிப்பித்து அந்த வழியான அதன் அண்டையிலே அதி சூட்சுமமான யதி சுபாவமான அருந்ததியிலே அதைக் கிரகிப்பித்து அந்தத் திஷ்டியை அதிலே நிறுத்த வேணும். அதைப் போல முதல் விசயமுள்ளவன் பள்ளமடையான் மனசை முந்தத் தூலமான சிறிது குணாகாரங் களிலே வைத்து அதிலே கிரகிப்பிச்ச ஆத்மத் தன்மையை அத்தைப் பார்க்கிலும் சூட்சுமங்களிலே கிரகிப்பித்து முடிவிலே அதி சூட்சுமமான பரமாத்மாவினிடத்திலே அந்த மனசை லயிக்க வேணும் அந்தப்படியன்றோ அன்னமயமான தூல தேகம், சேர்மம், சாதி, சிறை, மிருத்தியும் இதுக்கு இருப்பிடம், இதிலே பிராணிகளுக்கு நானென்னும் ஆத்மா புத்தி ஒருக்காலும் போகவில்லை.

**ஆத்மா**

ஆத்மாவானவர், ஒரு வழியிலேயும், இறக்கிறதும் பிறக்கிறதுமில்லை. நித்தியமாய் இந்தத் தேகமானால் பிறப்பு, இருப்பு, அதிவளர்த்தி, தளர்தல், நாசம் என்னும் நாலாவிகாரங்களுடையதாய் விகாரியாம். ஆத்மா ஒருக்காலும் கடத்திலாகாசம் போல சுயமாய் விகாரியாகாமையால் இந்தத் தூலதேகம் ஆத்மாவல்ல என்று நன்றாகச் சிந்தித்து அதிலே பிடிபட்ட ஆத்ம புத்தியை அதிலும் தர்ம சூட்சுமமாய் உருக்கிய பொன் முழையிலே பிரவேசித்து அந்த ஆகாரமானது போல் இந்த அன்னம் கோசத்தியனுள்ளே பிரானமய கோச மென்னும் சூட்சும தேக பிராணன் முதலான பத்து வாயுக்களாலே கட்டப்பட்டு கர்மேந்திரியங்களுடனே கூடி அசைவு முதலான கிரியா சொரூபமாய், பசிதாகங்களாலே வாதிக்கப்பட்டுக் கொண்டு செடமான இது ஆத்மா ஆகமாட்டாது.

செடமான இந்த தேகத்தை அறியீர். சித்து ரூபமாகிலும், நிரலேபர ஆத்மா இவரே நிரலேபரஆனந்தநிதி பரப்பிரமம். அது ஒன்றையும் புசியாது. அதை ஒன்றுதான் புசிக்க மாட்டாது. இந்தப்படி விவேகத்தினாலே பிராணமய கோசத்திலும் ஆத்ம புத்தியை நீக்கி அதற்கு முள்ளான மனோமய கோசத்திலே நிறுத்த வேணும். அதன் சொரூபம் சங்கற்ப விகற்பமுமான புத்தி. அது ஞான இந்திரியங்களுடனேயும் காமகுரோத லோபம் மதம் மாச்சரிய மோகமென்னும் ஆறு லெக்ஷணங்களுடனேயும், மமதையுடனேயும் கூடியிருக்கும். இந்த மனோமயம் கோசமாத்மாவல்ல. ஆத்மா இதுகளிலே ஒன்று மற்றது. அது இந்த ஆத்மா வல்ல என்று விவேக புத்தியினாலே இதிலும் சூட்சுமமா அதற்குமுள்ளான விஞ்ஞானமய கோசத்திலே நிறுத்த வேணும். வேத சாஸ்திரார்த்தமான கர்மத்தை விழ .......... கரிச்ச நிச்சயமென்னும் புத்தி ஞானேந்திரியங்களுடனே கூடி கர்த்திருத்தன்மை தானெனதென்னும் அபிமானமும் உடையது விஞ்ஞானமய கோசம் அது இப்போ விவகாரத்திலே (வி)ளங்குகிற சீவன் இவனுக்கே இது லோக பரலோக போக்குவரத்து. இப்படிப்பட்ட விஞ்ஞானமய கோசம் கர்த்தாவும், அபிமானியும் போக்குவரத்துடையவனுமாகாத அந்த ஆத்மாவல்ல வென்றும் விவேக புத்தியினாலே இந்தப் புத்தியை விஞ்ஞானமய கோசத்திலும் நீக்கி, அதிலுஞ் சூட்சுமமா அதற்குமுள்ளான ஆனந்தமய கோசத்திலே வைக்கவும்.

**ஐம்பூதமும் தேகமும்**

ஆகாசம் முதலான அஞ்சு பூதங்களுடைய தன்தன் பிரத்தியோகமாய் சாத்துவிகாங்கிசங்களில் நின்றும் சோத்திரஞ், தொக்கு, சட்சு, ஆக்கிரானம், சிங்நுவை யென்னும் ஞானேந்திரியங்களஞ்சு. இந்தப் பூதக் கூட்டத்தின் சாத்துவிகாங்கிசங்களில் நின்றும் இந்த பூதங்களுடைய பிரத்தியேக ராக்ஷசங்களிலே நின்றும் மனோபுத்திகளும் வாக்கு, பாணி, பாதம், குதம், குய்யம் என்னும் கிரமமாகவே அஞ்சு கர்மேந்திரியமும், இதன் கூட்டத்தின் ராக்ஷசங்களின் நின்றும் பிராணன் முதலான அஞ்சு வாயுவும் கூடி இந்தப் பதினேழுவயவங்களாகிலும் இந்த லிங்க சரீரம் இது ஓலையிற் காய்ச்சிய இருப்புக் கட்டிபோல இந்த லிங்க சரீரமும் சாட்சி சைதன்னியமும் அன்னியோன்ய மொன்றிலே யொன்று தாதாற்மியத்தினாலே

ஏகீபவிச்சது. அது ஆனந்தமய கோசம். அது உபாசனா கர்மம். பலன்களை இகத்திலேயும் பரத்திலேயும், பொசிக்கிற பொத்தா வென்பிக்கும். எப்போதும் இப்படிப்பட்ட அத்தியாசத்தை விட்டு இந்த ஆனந்தமயன் அவித்தியாமாத்திரத்து டனே கூடி தன் சொரூபமாக இருப்பன். அப்போது ஆனந்த காணாதிகளுக்கும் தன் அனுபவத்துக்கும், தன்னறிவுக்கும் சாட்சியாத்மாவாவன், ஆகையினால் இந்த ஆத்மா அந்தக் கரணத்திலே அத்தியாசம் பண்ணப்பட்டவனாய்ப் போத்துரு தன்மையும் படாதவனாய், சாட்சி தன்மையும் அவனுக்குக் கூடும்.

**பஞ்சகோசம்**

இந்த இருதய ஆகாசத்திலே மனசுக்குப் பின்பாக சைதன்னியத்தில் தோன்றுகிறது. அதிலேயொருவன் ஒருவன் புசிப்பிக்கிறவன். ஒருவன் கர்ம பலத்தைப் புசிப்பிக்கிறவன். அவனைச் சேத்திரக்தியன் என்றறியவும். அவன் (ர) தமுடையவன். இந்தத் தேகம் அவனுக்கு ரதம். புத்தி சாரதி; மனசு குதிரை கட்டும் கயறு, இந்திரியங்கள் குதிரைக்கு விஷயங்கள் அதன் மார்க்கங்கள். இந்திரியங்க ளுடனேயும் மனசுடனேயும் கூடி ஏகீபவிச்ச புருஷன் பேர்த்தரக் கூடாமல் தனிச்சு இருக்கிற இந்தச் சித்து சாக்ஷி. இந்தப்படி சம்தேமாதிகளுடனே கூடினக் காலமும் இப்படி உற்றப் பார்வையாலே தன்னைப் பார்க்கிற பிராமணன், இந்த அஞ்சு கோசங் களிலேயும் மனசைப் பிரவேசித்து மேற்கோசங்களையுள்ள உள்ளே சூட்சுமங்களை கிரகிக்கும் போது, மேல் வாழை மட்டைகளை உரித்து அதற்குள்ளிருக்குஞ் சாரமான தண்டைப் போல அசாரமான இந்தப் பஞ்ச கோசங்களென்னும் மேற் புரைகளை நீக்கி, அதற்குள்ளே சகலத்துக்கும் சாரமான ஆத்மாவையடைவன். ஆகையால் இந்தப்படி மனசை ஏகாக்கிரமாக நிறுத்தி எக்காலந்தியானம் பண்ணுகிற போது அப்போ மனசு, மேற் பட்டைகளைப் போல் அசாரமான சாகாரமான ஆத்தும சொரூபத்தை விட்டு நிராகாரமாய் (க)வலமொன்றான பரமாத்வைக் கிரகிக்கும். அவர் எப்படிப் பட்டவரென்னில் தூலருமல்ல. சூட்சுமருமல்ல. குறியவருமல்ல. நெடியவருமல்ல. கை, கால், கண், காது, மூக்கு முதலான சகல தேகா அவயங்க ளும் மற்றும் பார்க்கிறதும், கேட்கிறதும், கொடுக்கிறதும், அர்ச்சிக்கிறதும், முகர்கிறதும், பிடிக்கிறதும், விடுகிறதும், பேசுகிறதும், நடக்கிறதுமாய் சகலத்தையும் (அ)றிஞ்சதும் சகலராலேயும் அறியப்படாததும், பார்க்கிறதும், பார்க்கப் படாததும் இப்படிச் சகலமும் தோற்றுவிக்கிற பிரகாச சொரூபராயும் அவாங்க மனசு கோசமான பரப்பிரமமாகிலும் இந்த ஆத்ம சொரூபமிங்ஙகனஞ் சொன்ன கிரமத்தி னாலே நிருத்தியாசனம் பரிபாகத்தில் சாட்சாகாரத்திலே தானே தோன்றும். இப்படிச் சிவன் சொல்ல இராமர் கேட்கிறார்.

**இராமரின் கேள்வி**

இப்படியாகில் சகலரும் வேதாந்த சிரவணத்திலே வேதசாஸ்திர சம்பன்னர்க ளாயும் அச்சுவர்க்களாயும், சத்தியவாதிகளாயும், வேதாந்த சிரவணம் பண்ணியும், தன்னாத்ம சொரூபத்தை அறியவில்லை. அறிந்து நன்றாக ஒத்துக் கொள்ளவில்லை. அதென்ன மெய்யோ? பொய்யோ? தேவரீர் மாயை தானோ? இதை வெளியாகச் சொல்ல வேணும் என்று கேட்ட ராமரைக் குறிச்சுச் சிவன் அருளிச் செய்யும்

பிரகாரம் கேளும். மகாவாகுவான இராமரே! அதெப்படியோ சரி. ஆலோசனை தேவையில்லை. ஏனென்னில் அறி குணாத்மகமாய் தெய்வீகமான நம்முடைய மாயையானது ஒருவராலேயும் கடக்கப்படாதது. யாதொருவர் நம்மையே நன்றாய்ப் பூசனை பண்ணுகிறார்களோ அவர்கள் இந்த மாயையைக் கடப்பார்கள். யாதொருவர் நம்மிடத்திலே பத்தி சிரத்தையில்லாமல் கேவலம் இகத்திற் கரத்திற் பலன்களை நசிக்கிறதும் கொஞ்சமும் ஒன்றுக் கொன்று ஈடு தாட்சியுமான கர்மபலக் கொடுமை யை அறியாமல் அதன் பொருட்டு கர்மங்களைப் பண்ணுகிற புருஷாத்தமானதாய் கர்ப்பமென்னும் மிருத்துவன் வாயிலே திரும்பித் திரும்பி விழுவார்கள்.

இப்படி நாலா யோனிகளிடத்திலே பிறந்து ஒவ்வொரு மனுசருக்குக் கோடி சென்மங்களில் தேடப்பட்ட புண்ணியங்களாலே நம்மிடத்திலே பத்தி பிறக்(கும்). அப்படிப்பட்ட பத்தன் சிரத்தையுடனே கூடினவனே. இந்த ஞானமல்லாமல் பலா பலன் பொருட்டு கேவலங் கர்மங்களைப் பண்ணுகிறவன், கோடி சென்மங்களிலே யும் ஞானமடையமாட்டான் ஆகையால் சகலத்தையும் துச்சமாய் விட்டு நம்மிடத் திற் பத்தியையே நன்றாகச் சம்பாதியும். இன்னும் பரம ரகசியம் சொல்லுகிறோம் கேளும். புண்ணிய பாவமென்னும் கர்மமாகியச் சகலக் கர்மங்களையும் விட்டு நம்மை ஒருவனையே நன்றாகச் சரணடையும். நாமே உம்மைச் சகலப் பாவங்களி னின்றும் விடுவிக்கிறோம். துக்கப்பட வேண்டாம். இன்னும் எதைச் செய்கிறீர்? எதைப் புசிக்கிறீர்? எதை ஓமம் பண்ணுகிறீர்? எதைக் கொடுக்கிறீர்? எந்தத் தபசைப் பண்ணுகிறீர்? இதையெல்லாம் சிவார்ப்பண மென்று நமக்குச் சமர்ப்பணம் பண்ண வும். இதுவே மிகுந்த பத்தி அல்லாமல் கூத்தமரே இதைப் பார்க்கிலும் அதிசயத்த தாய் நம்மிடத்தில் வேறொரு பத்தியில்லை.

இப்படிச் சிவன் ராமருக்கு பஞ்சகோச விவேகம் அருளிச் செய்தார். இப்படிப் பத்மமென்னும் மகாபுராணத்தில் சிவகீதையென்னும் உபநிடதத்திலே பிரமவித்தை யான யோகசாஸ்திரத்திற் சிவராகவ சம்வாதத்திலே பஞ்சகோச விவேகமென்னும் பதினாலாமத்தியாயம் முற்றும்.

## பதினைந்தாம் அத்தியாயம்

# சிவபத்தி யோகம்

### முத்திக்கு வழிகேட்கும் இராமர்

இராமரே கேட்கிறார் வாருமைய்யா! மகாதேவரே தேவரீரிடத்தில் பத்தி எப்படிப்பட்டது? எப்படித்தான் வரும்? யாதொரு பத்தியினாலே மிகவும் சகலத்தை யுமொழிந்து மனுசன் பரமுத்தியை அடைவனோ? கிரிசா காந்தரான சுவாமி! எப்படி யானால் நான் முத்தியடைவேன்? அந்தப் பத்தியைச் சொல்லும் என்று இராமர் கேட்கிற சொற்கேட்டு சிவனருளிச் செய்யும் பிரகாரம்.

**இறைவனுக்குப் பிரியன்**

யாதொருவன் வேதாத்தியானத்தையும், யாகத்தையும், தானங்களையும், தவசுகளையும், இப்படிப்பட்ட தன்தன் வர்ணாச்சிரம தர்மங்களை நமக்குச் சமர்ப்பண மென்னும் புத்தியினாலே பண்ணுகிறானோ அவனே நமக்குப் பிரியன். அப்படியே அவிமுத்தமெனப்பட்ட காசி தலத்திலேயும் தெண்டகாருண்யத்திலேயும் ஸ்ரீசைலத்தி லேயும் புண்டரீகபுரத்திலேயும் யாதொருவன் நம்மையே இச்சித்துக் கொண்டு உபாசனைப் பண்ணுகிறானோ அவன் நமக்குப் பிரியன். இன்னும் நல்ல பரிசுத்தனும் க்ஷத்திரியனுமான பிராமணன் கிரகத்திலே நின்றும் நல்ல நூதனமாக க்ஷமத்தை வாங்கிக் கொண்டு அதர்வன கிரசின் மந்திரங்களாலே விதி வத்தா அபிமந்திரிச்சு அந்த விசத்தினாலேயும் சர்வாங்கமும் உத்தூளிக்கிறான். அந்த விரத்தினாலேயும் நம்மையும் அர்ச்சிக்கிறான். அவனைப் பார்க்கிலும் மிகுந்த பத்தர் இராமரே நமக்கில் லை.

**பஞ்சாட்சரம்**

இன்னும் யாதொருவன் சிரசிலேயும் கண்டத்திலேயும் உருத்திராட்சங்களை எக்காலமுந் தரிச்சுக் கொண்டு, பஞ்சாட்சரம் செபிப்பானாக இருக்கிறானோ அவன் நமக்குப் பிரியன். இன்னும் விசத்தினாலே போராக்கப்பட்டவனாயுங் க்ஷமத்திலே சயிச்சவனாயும் எக்காலமும் சிதேந்திரியனாய் ஏகாக்கிறச் சித்தனாய், நம்மைத் தியானித்துக் கொண்டு ஸ்ரீருத்திரங்களைச் செபிக்கிறானோ அவன் அந்தத் தேகத்துடனே தானே சிவனாவன். அப்படியே யாதொருவன் ருத்திரருத்திரங்களை யும் அதர்வண சிரசையும் கைவல்ய உபநிடத சூத்திரங்களையும் வேதா வேதாந்த த்தையும் செபிக்கிறானோ அவனைப் பார்க்கிலும் அதிசயமான வேறொரு பத்தன் இந்த லோகத்திலே நமக்கில்லை. இன்னுஞ் சொல்லுகிறோம். கேளும்.

**ஓம் என்ற சொல்லின் மகிமை**

தர்மத்துக்குப் புறம்பாயும், அதர்மத்துக்குப் புறம்பாயும் கர்மத்துக்கும் அகர்மத் துக்கும் புறம்பாயும், பூதத்துக்கும் பௌதீகத்துக்கும் புறம்பாயும் சகலத்தையும் அதிகரிச்சும் ஏதுண்டோ? அதைச் சொல்லுகிறோம் கேளும். யாதொரு பதத்தை நாலாவிதமான வேதங்கள், சாத்திரங்கள் சொல்லுவோம். சகல உபநிடதத்திலின்றும் தயிரிலும் நெய்யைப் போலக் கடைந்தெடுக்கப்பட்டச் சாரமான எதை வேண்டினவர் களாய்க் கொண்டு மகா முனிகள் பிரம்மச்சரியத்தை ஆசரிக்கிறார்களோ ஓம் எனப்பட்ட அந்தப் பதத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறோம். இந்த அட்சரமே பிரமம். இந்த ஓரட்சரமே பரமபதம். இந்த அட்சரத்தை அறிந்து யாதொருவன் எதை இச்சிக்கிறான் அவனுக்கது கூடும். இதுவே சிரேட்டமான ஆதரவு. இதுவே உற்கட்டமான ஆக்ஷியம். இதறிந்தவன் பிரம்ம லோகத்திலே பூசிக்கப்படுவன். வேத ங்களென்னும் காமதேனுக்களிலே விருஷபமா ஏது சொல்லப்படுகிறது. யாதொன்று இந்திரன் மேதைக்குப் பிரிதி. அமிர்தமென்னும் முத்தியைக் தாங்குகிற கரைமேதை யினாலே மூடப்பட்ட பிரமத்தினுடைய பொக்கிசமெனப்படும். இப்படிப்பட்ட இந்த ஓங்காரத்துக்கு நாலு மாத்திரை அகார உகார மகார அர்த்த மாத்திரையென்று பேர்

பெற்ற நால்வயமுண்டு.

**முதல் மாத்திரை**

அதிலே முதல் மாத்திரை பூலோகமரிக்கும் வேதம், பிரம்மா, அஷ்டவசுக்கள், காரகபத்தியாக்கினி, காயத்திரி, கங்கா பிரதட்சயவனம், ரத்த வண்ணம்.

**இரண்டாம் மாத்திரை**

இரண்டாம் மாத்திரை புவற்னலோகம், விஷ்ணு, ஏகாதசி, ருத்திரர், திரட்டு, மயேசுர வேதம், யமுனை, தெக்ஷனாக்கினி, மாத்தியந்தின சவணம் இரண்டாம் மாத்திரை விரஷவண்ணம்.

**மூன்றாம் மாத்திரை**

மூன்றாம் மாத்திரை மகாரம், சுவற்கலோகம், சாமவேதம், பன்னிரண்டு ஆதித்தியர், மயேசுரர், ஆகவநீயாக்கினி, செகதீசதசு, சரசுபதி நதி, மின்னல் வண்ணம், திரியே சவணம்.

**நாலாம் மாத்திரை**

நாலாம். மாத்திரை அர்த்த மாத்திரை, இந்த மூன்றாம் மாத்திரை முடிவில் இருக்கும். அதுக்கிருப்புச் சோமலோகம். அதர்வாங்கிரசுக்கள். அதர்வணவேதம். மந்திரங்கள் பிரளயக் காலத்தில் அக்கினியும் அந்தக் காற்றும் விறாட்டு சத்தியம். ஆலஸ்தியமென்னும் இரண்டாக்கினிகள். சூத்திரனும் மறதியாக முடிக்கின்ற சத்திய புச்சமும் சுக்கில வண்ணம். இந்த படியானதும், ஆகிறதும், ஆவப்போவதும் சகல மும் பிரணவத்திலேயே இருக்கும். அப்படியே சகலமான பூதங்கள், விசித்திரங்க ளான புவனங்கள், வெகுவிதமான பத்மந்திர வர்ணங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள் இப்படிப்பட்ட சகலப் பிரபஞ்சமும் ருத்திரன் என்றே சொல்லப்படும். அதனிடத்திலே பின்னும் பிராணங்கள் இருக்கும்.

**பிரமத்தின் மகிமை**

ஆகையால் சகலமும் ஓங்காரமென்று சொல்லப்படும். அந்தப் பிரணவ மோய்ந்து முடியுமிடம் சாக்ஷாத் பிரம்மவாகிலும் ஆகையாலந்த சாக்ஷாத் பிரம்மமான ஓங்காரத்தை எவன் சேவீப்பனோ அவன் முத்தனாவன் என்கிறதிலே சருவதாசந்தேகமில்லை. மூன்றக்கினியிலும் தான் ஔவு பாசனாக்கினியிலுந்தான் சைவாக்கினியுலுந்தான், பரிசுத்தமான பிரமத்தைக் கொண்டு வந்து பிரணவத்தினால் நன்றாய் அபிமந்திரிச்சது அதனாலே நம்மை அர்ச்சிக்கிறவனைப் பார்க்கிலும் நமக்கு மிகவும் அதிசய பத்தன் லோகத்திலே இல்லை. சாலாக்கினியிலுந்தான் தாவாக்கினி யிலுந்தான் பிரமத்தைக் கொண்டு வந்து பஞ்சாட்சரத்தினால் மந்திரிச்சுச் சருவாங்க மும் தூலினஞ் செய்கிறவன் சூத்திரனாகிலும் முத்தனாவன். தர்ப்பை, புஷ்பம்,

வில்வ பத்திரம், மலையிற் புட்பபதான் இதுகளாலே நம்மைப் பிரணவ மந்திரத் தினாலே நம்மை எக்காலமும் பூசிக்கிறவன் நமக்கு மிகவும் பிரியன். அப்படியே புட்பம், பழம், கிழங்கு, பத்திரம், செலம் இதுகளைப் பிரனவத்தினாலே நமக்குச் சமர்ப்பணம் பண்ணினால் அது ஒவ்வொன்று கோடி குணம் அட்சயமாம்.

**வேதத்தியானம்**

கொல்லாமை, சத்தியம், திருடாமை, சௌசம இந்திரிய நிர்கிரகம், வேதாத்தியானம் எக்காலம் பண்ணுகிறவன் நமக்கு பத்தன். நமக்குப் பிரியன். பிரதோஷக் காலத்திலே நம்முடைய தானத்துக்குப் போய் எவன் நம்மை அர்ச்சிக் கிறானோ அவன் மகதை சூரியத்தைப் பொசித்து நம்மிடத்திலே ஒருபச்சுப் போவன்.

**நன்னாள்**

அஷ்டமியிலேயும் சதுர்தசியிலேயும் பௌர்ணமி, அமவாசை இந்த இரண்டு பருவத்திலேயும் பரமோத்தூளித சருளங்கனாய்க் கொண்டு அர்த்த ராத்திரியிலே விசேஷித்து கிருஷ்ண பக்ஷத்திலே நம்மைப் பூசிக்கிறவன் நமக்குப் பத்தன். நமக்குப் பிரியன். ஏகாதசியிலே உபாசனம் பண்ணி விசேஷித்துச் சோம வாரத்திலே அன்றைக்கு அர்த்தராத்திரியிலே நம்மைப் பூசிகிறவன் நமக்குப் பத்தன். அவன் கேடான பஞ்சாமிருதத்திதோன், பஞ்சகவ்வியத்திலேதான், புட்டோதக மருசோதிக மிதுளிலேதான் நம்மை அபிசேகம் பண்ணுகிறவனைப் பார்கிலும் நமக்கு வேறொரு வன் பிரியனில்லை. பால், நெய், தேன் கருப்பஞ்சாறு, பழுத்த மாம்பழமும், ரசம், இளநீர், கெந்தாதகம் இதுகளிலே எதனாலே ஆகிலும் ருத்திர மந்ரத்தை உச்சரித்துக் கொண்டு நம்மை அபிசேகம் எவன் பண்ணுகிறானோ அவனைப் பார்க்கிலும் நமக்கு வேறொருவன் பிரினில்லை.

**சாரூபம்**

சூரியாபிமுகனாய்க் கொண்டு ஊர்த்துவ பாகுவராய் செலத்திலிருந்து கொண்டு சூரிய மண்டலத்திலிருக்கும் நம்மைத் தியானித்து அதர்வண கிரசைச் செபிக்கிறவன் விஷ்ணுக்கு சமானன். விஷ்ணுவைப் போல நம்முடைய சரீரத்திலேயே பிரவேசித்து நம்முடைய சாரூபாயத்தை அடைவன்.

**சாயுச்சியம்**

பிரகத்துர தந்திரம், வாம தேவியம், தேவ விருத்தங்கள், தத்தியோகங்கள், வாசகிய வோஷகங்கள், இப்படிப்பட்ட சாரங்களை நம் முன்பாகத் தானம் பண்ணு கிறவன் இகலோத்திலே மகதை சூரியத்தைப் பொசித்து முடிவிலே நம்முடைய சாயுச்சியமடைவன்.

**சாலோகம்**

ஈஸாவாஸம் முதலான மந்திரங்களை நம் முன்பாக சேவிக்கிறவன், நம்முடைய சாயுச்சியந்தான் சாலோக்கிய தானடைவன்.

**பத்தியோகம்**

இரகு குலத்தை யுத்தாரம் பண்ணுகிற இராமரே கேளும் சகல காமியங்களையும் கொடுக்கும் நம்முடைய பத்தி யோகத்தை நாமும் உமக்கு உபதேசித்தோம். இனிமேல் கேட்கத்தக்க கதை கேளுமென்று தம்முடைய பத்தியோகம் இராமற்கருளிச் செய்த பிரகாரம்.

**முடிவுரை**

இப்படிப் பத்மமென்னும் மகாபுராணத்திற் சிவகீதையென்னும் உபநிடதத்திற் பிரம வித்தையான யோக சாஸ்திரத்திற் சிவராகவ சம்வாதத்திலே சிவபத்தி யோகமென்னும் பதினைந்தாமத்தியாயம் முற்றும்.

## பதினாறாம் அத்தியாயம்

# அதிகாரி நிரூபம்

**இராமரின் சமுசயம்**

இராமர் கேட்கிறார். கேளுமைய்யா பகவானே! இப்படி மோட்ச மார்க்கத்தை தேவரீர் நன்றாக எனக்கு அருளிச் செய்தீர். இதிலே அதிகாரியைச் சொல்லுமையா? அதிலே எனக்கு சமுசயமாக இருக்கிறது என்று கேட்ட இராமருக்குச் சிவன் சொல்லுகிற பிரகாரம்.

**சிவபூசைக்குரியவன்**

பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், ரிஷிகளும் இதிலே யோக்கியனுசாரம், அதிகாரிகள். பிராமணரிலும் பிரமச்சாரிதான், உபநயனமில்லாதவன் தான் கிரகத்தன் தான், வானப்பிரஸ்தன் தான், வனத்திலிராகவன் தான், பாசுபத விரதமுடையவன்தான், அவர்கள் எல்லாம் அதிகாரி.

**அதிகாரி அல்லாதவன்**

பல பேச்சிலே ஏது யாதொருவனுக்குச் சிவபூசையிலே பத்தியுண்டோ அவனே இதிலே அதிகாரி. அல்லாமல் சித்தன் அதிகாரியல்ல. அப்படியே அஞ்ஞானக்குருடன். செவிடன், ஊமை, சிவபூசையில்லாதவன், விபூதி, ருத்திராட்

க்ஷதாரணத்திலே திடபத்தியில்லாதவனும் சிவ வாஞ்சனதாரிகளான லிங்குகளை யும் யாதொருவன் அது வெளிப்பனோ அவர்களுமிதிலே அதிகாரிகளல்ல.

**முத்தனும் முத்தன் அல்லாதவனும்**

அப்படியே நும்மையும் குருவையும் பாசுபத விரதத்தையும் அது வெளிக்கிற புருஷோத்தமனும், விஷ்ணுவைத்து வெளிக்கிறவன் தான் அனேக கோடி சென்மங்க ளிலேயும் முத்தன்கான். சிவஞானமும் சிவபத்தியுமில்லாதவன் அனேகமான கர்மங் களைப் பத்தியுடனே ஆசரிக்கிறவனாகிலும் சம்சாரத்திலே முத்தனாகான். ஏனெனில் பல கர்மனையாலே பண்ணப்படுகிற வைதீகக்கர்மங்கள் பந்தகமல்லாமல் முத்தி யேது வல்ல. அப்படிப் பலராகத்திலே அழுத்தி அதைச் செய்கிறவர்கள் முத்தியிலே அதிகாரிகளல்ல.

**புனிதத்தலம்**

இன்னமும் கேளும். அவிமுத்த சேஷத்திலேயும் தண்டகாரண்யத்திலேயும், ஸ்ரீசைலத்திலேயும், புண்டகரீகபுரத்திலேயும், தேகமடையுமளவில் நம்முடைய அனுக்கிரகத்தினாலே சஞ்சாரதாரகமான பிரமமென்று பேர் பெற்ற நம்முடைய ஞானத்தையடைவன் - ஆகிலுமிந்த புண்ணிய தேசங்களிலேயும் புண்ணிய தீர்த்தங் களிலேயும் வசிக்கிறது எளிதல்ல. ஏனெனில் யாதொருவனிடத்திலே கைகள், கால்கள்,, மனசு, இதுகள் முதலான சகல இந்திரியம் நிர்க்கிரகமும் உபாசனையும் தபசும், நியமமும், நல்ல கீர்த்தியும் இருக்குமோ அவனே மகாதலவாசத்தில் புண்ணியத்தையடைவன். அல்லாமல் மற்றவன் அடையமாட்டான்.

**வேதமும் உபநயனமும்**

அதிலே உபநயனமில்லாதவனுக்கு விதி ஏதென்னிற் சொல்லுகிறோம். பிராமணனுக்கு உபநயனமாகும்மட்டும் வேத வாக்கியங்கள் உச்சரிக்கலாகாது. எவ்வளவு வேதாத்தியானமில்லை. அவ்வளவுமவன் சூத்திரத்திற் துல்லியன். ஆகை யால் சிவநாமோ சரணத்திலேயும் சிவத்தியானத்திலேயும் இப்படிப் பட்டவர்களெல் லாம் அதிகாரிகள். எப்படிப்பட்ட மனுசனாகிலும் சிவோகபாவனையினிலே சஞ்சாரத்தில் நின்றும் விடப்படுவன். யக்ஞம், தானம், தவசு, வேதாத்தியானம், மற்றுமுண்டான கர்மங்கள் தான் ஏககாலந்தியரான கர்மத்தினாயிரத்தின் ஓரம்சத்து க்குச் சரிக்கட்டாது. ஏனென்னிற் பிராமணத்துவ முதலான சாதி பிரமசாரி முதலான ஆசிரமம், இயமம், நியமம் முதலிய அகங்கள் கேசம், காலம் மற்றுமுண்டான கர்மங்கள் ஓரிடத்திலேயும் தியானமானது அபேட்சியாது. நடக்கையிலேயும், நிற்கையிலேயும், பொசிக்கையிலேயும், படுக்கையிலேயும் மற்றொரு கர்மங்கள் பண்ணச் செய்யும். அத்தியந்தப் பாதங்களுடனே கூடினவனாகிலும் தியானத்திலே முத்தனாவன். இந்தத் தியான கர்மம் வெகு சாஸ்திரம் வெகு விதம் வெகு தலாபம் சாங்கமாய் ஒருவராலேயும் பண்ணப்படாதே. அதெப்படிப் பலிக்கப் போறதென்னத் தேவையில்லை.

**தியானம்**

நிஷ்கரமனையாய் பரமேசுர தியானம் எவ்வளவாகிலும் எம்மாத்திரமாகிலும் பண்ணினாலும் அது மகத்தான சஞ்சார பயத்திலே நின்றும் காக்கும். அற்பமானத் தியானமும் தொடுத்தது முதல் முடிகிற மட்டும், அனுஷ்டிச்சால் ஒழியப் பலியாதென்கிறதில்லை. இடை நடுவே முடியாமல் நின்றாலும் காமிய கர்மம் போல தாளவில்லை. ஆனாலும் தொடுத்து இடைநடுவே நின்றார். சாங்கமாகாமல் வைகவியமடைந்து பிரத்தியவாய்காமென்று சொல்லவுந் தேவையில்லை. இப்படித் தொடுத்து முடியாமலும் தோன்றிய மாத்திரம் அங்கங்கள் செய்தும், கொஞ்ச மாகிலும் பரமேசுர தியானம் மனுசனைக் கரையேற்றும்.

ஆச்சரியத்திலேதான், பயத்திலேதான், துக்கத்திலேதான், தும்மலிலேதான், ரோகமில்லாதவனானாலும் வேறொரு சாக்கிலேயாகிலும் நம்மை க்ஷத்தர மரிக்கிற வன் உயர்ந்த கதியடைவன். அப்படியே மகாபாவங்களைப் பண்ணினவனாகிலும் தேகாவசாணத்திலே நம்மை க்ஷமரிக்கிறவன் பஞ்சாட்சர மந்திரத்தையும் உச்சரிக் கிறவன் முத்தனாவன். அதிலே சந்தேகமில்லை.

**முத்தன்**

இதிலும் ரகசியம் பிரபஞ்சத்தையெல்லாம் சிவ சொரூபமாகவும் தானாகவும், தானாகப் பார்க்கிறவன் மகாதண்ணியன். அவனுக்குப் புண்ணிய தீர்த்தங்களாலே தான், புண்ணிய ஷேத்திரங்களாலேதான், எதாகர்மங்களாலேதான், பிரயோசன மில்லை. சகலரும் எக்காலமும் விபூதி, ருத்திராஷதாரணம் பண்ணவேணும். அவனுத்தன் ஆகட்டும் அயுத்தனாகட்டும் சிவபத்தி வேண்டினவன் அதை அவசியம் செய்ய வேணும். அக்கிகோத்திர விபூதியென்னும் நரிய பத்மத்தையும் உருத்திராட் சங்களையும் தரிக்கிறவன் மகாபாவங்களுடனே கூடியவனாகிலும் முத்தனேயாவன். அதற்குச் சந்தேகமில்லை. மற்றச் சைவக்கர்மங்களே பண்ணட்டும், பண்ணாமற் போகட்டும், சிவனென்னும் நாமத்தை உச்சரிக்கிறவன், முத்தனாவன். அந்திம காலத்தில் விபூதி உருத்திராட்சங்களைத் தரிக்கிறவன் மகா பாதகங்கள் உத்பாதகங்க ளுடனே கூடிய நரர்தமனாகிலும் அந்த மனுசனை எமதூதன் சருவதா அண்டமாட் டார்கள். அப்படியே வில்வ விருக்ஷத்தின் மூலமிருக்குகையினாலே யாதொருவன் சரீரத்தை அந்திமக் காலத்தில் பூசிக்கிறானோ அவன் எமன் கிங்கரராலேயே தூரத்திலேயே விடப்படுவன்.

**இராமரின் ஆசை**

இரகுநாதர் கேட்கிறார். கேளும் பகவானே! தேவரீர் எந்தெந்த விக்கிரகங்களிலே பூசிக்கப்பட்டவராய் ஆகப் பிரசன்னராவீர். அதைச் சொல்லும். எனக்கதிலே வெகுவாய் கேட்கும் இச்சை இருக்கிறது என்று இராமர் சொற்கேட்டு சிவன் சொல்லும் பிரகாரம்.

**இலிங்கங்கள்**

குத்தி, கோமியம், விஷம், சந்தனம், மணல், மரம், கல்லு, லோகம், ஈயம், வெண்கலம், பித்தளை, செம்பு, வெள்ளி, பொன், நவரத்தினங்கள் இதுகளாலேதான் இல்லாவிட்டால் ரசத்தினாலே தான் கர்ப்பூரத்தினாலேதான் பண்ணப்பட்ட பிரதிமைகளிலேயாகிலும் சிவலிங்கத்திலேயாகிலும் நம்மைப் பூசிக்கிறதுமென்றோ கோடிக்குணம் அதிக பலம். அதிலேயும் மணமாம், வெண்கலம், பஞ்ச லோகம், கல்லு இதுகளாலே பண்ணின விக்கிரகம் வீட்டிலே வைத்துப் பூசிக்கலாகாது. பண்ணினால் ஆயுசு, அயுசூரியம், குலம், தர்மம், புத்திராள் சிரமமாகவே நசிக்கும்.

**வில்வத்தின் மகிமை**

இன்னும் வில்வ விருக்ஷத்தினாலேதான் வில்வப்பழத்தினாலேதான் நம்மைப் பூசிக்கிறவன் இகத்திலே மகதை சூரியத்தைப் பொசித்து நம்முடைய லோகத்தை யடைவன். அப்படி வில்வ விருக்ஷத்தின் கீழேயிருந்து யாதொருவன் எந்த மந்திரத்தைச் செபிக்கிறானோ அவனுக்கு ஒரு நாளிலே புரச்சானைசித்தியாம். யாதொருவன் வில்வ வனத்திலே குடிசைக் கட்டிக் கொண்டு வசிப்பானோ அவனுக்குச் சகல மந்திரமும் செபத்தினாலேயே சித்திக்கும்.

அப்படியே மலை மேலேயும் நதி தீரத்திலேயும் வில்வ மூலத்திலேயும் எவன் செபிக்கிறானோ தான் வாளயட்சரன்….. ட்சதான் ஒருவரும் விக்கனம் பண்ண மாட்டார்கள். ஒரு பாவமுமவனை யடைய மாட்டாது. அவன் சிவசாயுச்சிய மடைவன் க்ஷக மண்டலம், செலம், அக்கினி, வாயு, ஆகாசம், மலை, தன் ஆத்மா, இதுகளிடத்திலே நம்மை நித்தியம் நியமத்துடனே ஒரு பத்திரத்தினாலே யாகிலும் பூசிக்கிறவன் சகல பலமும் அடைவன். அதிலேயும் ரகு குலோரப் பவனாரே கேளும்.

**ஆத்ம பூசை**

ஆத்ம பூசைக்குச் சரியான வேறொரு பூசையில்லை. சண்டாளனும் ஆத்ம பூசையினாலே நம்முடைய சாயுச்சியமடைவன். இன்னும் கம்பளாசனத்திலே சகலகாமியம் கிங்ணாசத்திலே, புலித்தோலிலே முத்தி. தெர்ப்பாசனத்திலே ஞானம். பத்திராசனத்திலே அயிசூரியம் சித்திக்கும். பூமியிலே மந்திரஞ்சித்தியாது. கிழக்கு முகமாய்த்தான் வடக்கு முகமாய்த்தான் செபம், பூசைகள் செய்ய வேணும். இனி மேல் அட்சமாலைகளைச் சொல்லுகிறோம் இராமரே சாவதானமாய்க் கேளும்.

**அட்ச மாலை :**

படிகங்களிலே சாம்பிராச்சியம், புத்திர சிவமணியிலே அயிசூரியம். தெர்ப்பை முடிச்சியிலே ஞானம். ருத்திராட்சத்திலே சகல சித்தியும் பவளங்களிலே லோகவசியம். நெல்லி விரையிலே மோட்சம். முத்துக்களிலே சருவ வித்தை. மாணிக்கங்களிலே மூன்று லோக அயிசுவரியம். நீல மரகதக்கல்லிலே சத்துரு செயம். பொன்மணியிலே மகத சூரியம். வெள்ளி மணியிலே கன்னியாலாபம்.

இங்கே சொன்ன சகல சித்திகளுக்கும் ரசகுளிகைகள் சிவமாலைகளிலே சித்திக்கும். இது நூற்றெட்டு மணி மாலை உத்தமோத்துமம். நூறு மணி உத்தமம். ஐம்பது மணி மத்திமம். அம்பத்திநாலுமப்படியே உத்தமம். இருபத்தேழும் இருபத்தஞ்சும் நூறு மணி மாலையாகில் ஐம்பதெழுத்தைக் கிரமமாக ஐம்பது மணியிலேயும் தலை கீழாய் அளந்தெழுத்தை அம்பது மணியிலேயும் தாபித்து இரகசியமாக ஒருவருக் குங் காட்டலாகாது. இப்படி அட்சரமயமான செபமாலையிலே ஒரு அவிருத்தி செபம்புரச்சரனை பற்றற்றதனை புரசரனை பலத்தைக் கொடுக்கும். தெனத்தியை ஆசனத்திலேயும் வடலக்குதியை குய்யத்தின் மேலேயும், வைத்திரு. கையொளி முத்திராசம் என்பிக்கும். இது ஆசனங்களில் உத்தமம். இந்த யோனிமுத்திரா சனத்திலிருந்து எந்த மந்திரத்தைச் செபித்தாலும் அவனுக்குச் சகல சித்தியும் கூடும்.

**மந்திரம்**

மந்திரங்களுக்குச் சின்னம் ரு. வெ. ம. ம. மீ விதம் மூற்கிதம் சு, ச, க்ஷி, ஷ, வார்த்தீக்கிறம். இப்படிப்பட்ட அனேகம் தோஷனவத்தை உத்தமமான மந்திரங்க ளாலும் யோனி முத்திராசனத்திலிருந்து செபிக்கிறவனுக்கு இதுகள் நன்றாகச் சித்திக்கும்.. மற்றொருவனுக்குச் சித்தியாது. பிரமமே முகூர்த்தம் முதல் கொண்டு மத்தியானமட்டுமே புரச்சரனை செபம் பண்ணவேணுமென்றும் அதற்கு மேல் செபிச்சால் மந்திரங்கெடும். மற்ற காமியங்கள், நித்தியங்கள், நைமித்தியங்கள், தபச்சரனைகள் தான், இதுகளிலே எக்காலமும் செபிக்கலாம். தோஷமில்லை.

**செபம்**

யாதொருவன் நம்முடைய சகுணாகாரத்தைத் தியானித்துக் கொண்டு சீருத்திரம், சடாக்ஷரம், பிரணவம், அதர்வண சிரசு இதுகளை நிட்கரமனையாய், சிதேந்திரயனாய் செபிக்கிறானோ அவனந்தத் தேகத்துடனே தானே சிவனாவான். இந்தப்படிக் கீதையை யாதொருவன் சிதேந்திரியனாய்க் கொண்டு படிக்கிறானோ அவன் சம்சாரத்திலும் முத்தனாவன். அதற்குச் சருவாத்மா சந்தேகமில்லை.

**சூதர் சொல்வது**

சூதர் சொல்லுகிறார். இந்தப்படி மகாதேவர் இராமருக்கு அருளிச் செய்து அதன் பிறகு அங்கே உடனே அந்தரத்தான மடைஞ்சார். இரகுநாதரும் அப்படியே கிருதார்த்தராய்க் கரையேறினோமென்று நிச்சயித்தார். இந்தப்படி இந்தச் சிவகீதை யை நாம் உங்களுக்குச் சொன்னோம். இந்தச் சிவகீதையை ஏகாக்கிரச் சித்தனாய் பத்தி சிரத்தைகளுடனே கூடி எவன் படிக்கிறானோ? எவன் கேட்கிறானோ? அவனு க்கு முத்தி உள்ளங்கையில் இருக்கும்.

**சிவகீதையின் மகிமை**

ஆகையால் நைமிசாரண்யத்திலிருக்கும் முனியீசுரர்களே இந்தச் சிவகீதை யை ஏக சித்தர்களாய் கேளுங்கள். அனாயசத்திலே உங்களுக்கு முத்தியாம். அதிலே

சமுசயமில்லை. காயக்கிலேசம் மனக்கலக்கம், தனக்காணி தனக்குப் இப்படிப்பட்ட ஓராபத்தும் யாதொரு சிவகீதையை கேட்கையினாலே வாராது. சாட்சாக்கார கைவல்லியமும் சித்திக்கும். ஆகையால் ரிஷிஈசுபரர்களே அவசியம் இந்தச் சிவகீதை சிரவணம் பண்ணுங்கோள். இப்படி ரிஷிகளுக்கு சூதர் அனுக்கிரச்ச பின்பு ரிஷிகள் சூதரைக் குறித்துச் சொல்லுகிறார்கள்.

**ரிஷிகள் கூற்று**

வாருமைய்யா சூதரே! இன்று முதற்கொண்டு எங்களுக்கு நீரே ஆசாரியார், பிதா, குரு. ஏனென்றால் இந்த அஞ்ஞானத்திலும் நின்றும் நீரன்றோ எங்களைக் கரையேற்றுவீர். நீர் பிறப்பிச்ச பிதாவைப் பார்க்கிலும் ஞான உபதேசம் பண்ணுகிற வரே அதிசயமான குருவும் பிதாவும். ஆகையால் சூத புத்திரரே உம்மைப் பார்க்கி லும், வேறொருவர் குருவன்று. இந்தப்படி சூதரை வெகுவாகத் துதித்து நைமிசாரண்யத்தில் சகலமான ரிஷியீசுபரர் களும் சூதர் புத்திரரைக் கொண்டாடிக் கொண்டே சந்தோஷித்துக் கொண்டு சாய்ங்காலத்திற் சாந்தியை அனுஷ்டிக்கும் பொருட்டு கோமதி நதி தீரத்துக்குப் போனார்கள்.

**முடிவுரை**

இந்த ஸ்ரீராமர் பத்மமென்னும் மகாபுராணத்தில் சிவகீதை என்னும் உபநிடதத் திலே பிரம வித்தையான யோக சாஸ்திரத்திலே சிவராகவ சம்வாதத்திலே அதிகாரி நிரூபனம் மந்திர சோதிப் பிரகாரம் யோகம் என்னும் பதினாறாம் அத்தியாயம் முற்றும்.

**நாராயண பரமசிவேந்திர சுவாமிகள்**

அகண்டானந்த நிர்மல ஆகாச பரிபூரண சச்சிதானந்த நிரலேப் நிரவேற்றிய நிர்க்குண நிறைஞ்சன் நிஷ்களந் நிஷ்பிரபஞ்ச, நிராமய அசங்க அன்னிய அசலபரம் அமுசம். ஸ்ரீமன் நாராயண பரமசிவேந்திர சுவாமியினுடைய பாத பத்மங்களை அடியேன் சதாகாலமும் சிரசிலே வைத்திருக்கிறேன். குரு பாதம் துணை இந்த சாஸ்திரம்.

அரி பிரம்மா(னந்) தம் பரம சுகுரிதங்கேவலம் ஞான... விசுவாதீதம் கேகன - சதுர் சம, தத்துவம் மசியாதி ரெட்சியம் ஏக நித்தியம், விமலமசலம் சர்வதா சாக்ஷி பூதம், பாவாதீதம் திரிகுண ரகீதம் சற்குருந்தன்னமாமீ மோகாம்பிகா கடாக்ஷத்து மோகவிகீனம் கிரூதி சிட் சயம் ஏகாத்மகம் ரெஷகிரீசம் அசேஷ வேதாந்த தேசிகம் வந்தே சற்குருவே நமா.

# சிதானந்த கீதை

சகல வேதாந்த சாத்திரத்தையும் சங்கிறகம் பண்ணி இந்தச் சாஸ்திரம் பார்த்த பேர்கள் எல்லாம், ஞானோதயம் ஆகும் பொருட்டாகத் தத்துவசாரமென்கிற கிரந்தத்தைச் சிதானந்தசாமியள், தமிழினால் பனுவலாகப் பண்ணிச் சச்சிதானந்த யோகிக்கு உபதேசம் பண்ணின கிரமம்.

நித்திய கர்மங்களும், நைமித்திய கர்மங்களும், வெகுசனங்கள் ஆசரித்ததினாலே, சித்த, சுத்தி உண்டாக அனேக விதங்களாயிருக்கிற உபாசனையிலே மனசுவைக்கிற சித்த முண்டாய், மோட்சத்திலே இச்சையாய் சாதன சதுஷ்டயங் கைவந்து, சற்குருவைச் சேர்ந்து செனன மரண ரூபமான சம்சாரத்தைத் தாண்டுகிறதுக்கு உபாயம் கேட்கின்ற சீடனுக்குச் சற்குருவானவர் ஞானோதயம் பண்ணின கிரமம்.

அகிலாண்ட கோடி அண்டத்திலும் ஒரு மயிரணுவுக்கிடமில்லாமல் வியாபக பரிபூரணமாய், அகலமாய், நித்தியமாய், நிர்விடையமாய்ச், சாந்தமாய், நிர்விகாரமாய், அவாள் மனசு கொஞ்சமாயிருக்கிற பிரம சைதன்னியம் ஒன்றுண்டு. அது சச்சிதானந்த சொரூபமாயிருக்கும். தனைவினாலொரு பதார்த்தம் சற்றுமில்லை. அந்தப் பிரமத்தினிடத்தில், ஏகதேகத்திலே வசனத்துக்குள்ளே அடங்காத மாயையானது ஆகாசத்திலே மேகப்படலம் போலவும் செல மத்தியிலே பாசித்திட்டு போலவும் படிகப் பருவதத்தின் மத்தியிலே நுரைக்கீற்றென்று சொல்லப்பட்ட திராசபடலம் போலவும் ஒரு மகா மாயையுண்டு.

அந்த மாயைக்குச் சத்துவாதிரசதமோ குணமென்னப்பட்ட மூன்று குணங்களும் சமானமாய் இருக்கிறதே மாயையினுடைய சொரூபம். அந்தகாரமாயை மூலப்பிரகிருதி என்று சொல்லப்படும். அந்தப் பிரகிருதி மாயை, பிரபஞ்ச சிருட்டிக்கு இச்சித்த வேளையில் சத்துவ குணம் அதிகரிக்கும். அந்தச் சத்துவ குணத்துக்கும் அவ்வியத்தமென்று பேர் சொல்லப்படும். அந்த அவ்வியத்திலே நிருமலச் செலப் பிரதி பிம்பம் போலே பிரிதி விம்பிச்ச பிரம சைதன்னியத்துக்கும் சருவக்கிஞராகிய ஈசுரனென்றும் பேர் சொல்லப்படும். அந்த ஈசுரன் பிரபஞ்சத்துக்கு அபீஷ்ட தானமாயிருக்கும் அவரைச் சிருட்டி, திதி, சங்கார மென்கிற மூன்று தொழிலுக்கும் கருத்தாவென்று சொல்லப்படும். அதற்குப் பின்பு, அந்த அவ்வியத்தக் கற்பம் பேதிச்சுக் கொண்டு, ரசோ குணப்பிரதானமான மாயை மகத்துவமென்கிற மாயையானது வெளியில் புறப்பட்டு தாமரையிலை செலத்தை மறைத்தது போலவும் அவ்வியத்துவ மென்கிற மாயையே கிஞ்சிஞ்ஞுத்துவமென்ற ரசோ குணமாயை மறைத்தது. அந்த ரசோ குணம் பிரதான மகத்துவமென்கிற மாயையிலே பிரிதி விம்பிச்ச பிரம சைதன்னியத்துக்கு இரண்ய கருப்பமென்று பேர் சொல்லப்படும். அவர் பிரபஞ்சத்துக்கு ஆங்கார ஸ்தானமாக இருப்பர்.

அதற்குப் பின்பு அந்த மகத்துவ கற்பம் பேதிச்சுக் கொண்டு, தமோ குணப் பிரதானமான அகங்கார மென்கிற மாயை வெளியிலே புறப்பட்டு, அந்த ரசோ குண

மான மகத்துவ மாயையை மறைத்திருக்கும். அந்த தமோ குணமாகிய அகங்கார மாயையிலே பிரிதி பிம்பிச்ச பிரம சைதன்னியத்துக்கு விராட புருஷனென்று பேர் சொல்லப்படும்.

அவர் பிரபஞ்சத்துக்குப் பத்திர புட்பங்களுடனே கூடியிருக்கிற விருட்சத்தானமாய் விளங்கித் தோன்றுவர். அதற்குப் பிறகு அந்த அகங்காரக் கற்பம் பேதிச்சுக் கொண்டு வெளிப் புறப்பட்டு, ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி அஞ்சு பூதத்தன்மாத்திரைகளும் ஒன்றன் பிறகே ஒன்றாகக் கற்பம் பேதிச்சுக் கொண்டு வெளிப்புறப்பட்ட ஒன்றுமேலொன்று தாமரையிலைகள் அடுக்கி வைத்தார் போலிருக்கும். அந்தப் பிரதானமான மூலப்பிரகிருதி முதல் பிருதிவி தன்மாத்திரை வரைக்கும் ஒன்றுக்கொன்று பத்து பங்குக் குறைந்திருக்கிறபடி யினாலே ஒன்பது மொன்பது பிரகாரங்கள் போலே தோன்றும். இங்ஙனம் சொன்ன ஒன்பது ரூபத்திலேயும் பிரம மாத்திரம் ஏகபூரணமாக விளங்கும்.

அதன் பிறகு அந்த அவ்வியத்தவுபாதி காரண ஈசுரன் செகத்தைச் சிருட்டிக்க வேணுமென்று நினைத்து, பிருதிவி முதல் ஆகாசம் பரியந்தம் ஒன்றற்கொன்று ஆவற்ண ரூபங்களாய் இருக்கிற தன் மாத்திரைகளாகிற சூட்சுமப் பூதங்களிலே பிரபஞ்ச சிருட்டிக்கி எவ்வளவு மாத்திரம் வேணுமோ அவ்வளவு மாத்திரம் அந்தத் திரிகுணாத்மங்களான பஞ்சப் பூதங்களைக் கிரகித்து முன்னே வைத்துக் கொண்டு, அதனிடத்தில் உண்டான சத்துவ ரசோ குண பாகமிரண்டையும் அப்பால் வைத்து, அந்த பிருதிவி முதலான பூதங்கள் தமோ குண பாகத்தை ஆகாச முதல் கிரமமா எடுத்து முன்னே வைத்து கொண்டு, ஒவ்வொரு பூத பாகத்தை இரண்டாகப் பகிர்ந்து, பகிர்ந்த பாதிகளை வேறே வைத்து, மற்ற பாதிகளை ஒவ்வொன்று நான்காய்ச் செய்து மற்ற நாலம்சத்துடனேயும் நோக்க பஞ்சீகர்ணமென்று சொல்லப்படும்.

இப்படி சேர்ந்து ஒவ்வொரு பூதத்தின் ஐந்து அய்ந்து பூதமுங் காணப்படும். இந்த பஞ்ச கிருத, பஞ்ச பூதங்களினாலே பண்ணப்பட்ட பிரமாண்டமும் அதற்குள் ளாகப் பதினாலு லோகமும் அதற்குள்ளாகச் சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பீசம், முதலான அந்தந்த லோகங்களுக்கு யோக்கியமான தேவ, மனுஷ, யட்ச, ராட்சச, கின்னர, கிம்புருஷ, கந்தருவ, சித்திய, வித்தியாதர, நாகாதியான அனேகவித சரீர வர்க்கங்களையும் நாலுவிதம் பூதராசியளையும் வியட்டி, சமட்டி, சமான, வாயு உண்டாச்சுது. இந்த அஞ்சும் வாயுவென்று பேரிட்டு அந்த பிரமாண்டத்திலே வைக்க, அந்த பஞ்ச வாயுக்கள் பிரமாண்டமெல்லாம் வியாபிச்சு, அதில் பதினாலு லோகங்க ளுக்குள்ளே வியட்டியாயிருக்கிற தூல சரீரங்களிலே வியாபிச்சு, பிரவேசிச்சு, இருதையம், குதம், நாவி, கண்டம், சருவ சரீரங்களை ஆதாரமாகப் பண்ணிக் கொண்டிருக்கும்.

இதில் பிராண வாயு மேல் சுவாசமாக நடக்கும். அபான வாயு: கீழ் நிச்சுவாச மாகப்போம். வியான வாயு சர்வ சரீரமும் வியாபிச்சுக் கொண்டு அன்னரசத்தை அந்தந்த நாடியினிலே பகிர்ந்து ஏற்றுவிச்சுக் கொண்டிருக்கும்.

உதான வாயு கண்டத்திலேயிருந்து கொண்டு பிராணங்களை வெளிப்படுத் துகிற தொழில் பண்ணி கொண்டிருக்கும் சமான வாயு நாவித் தானத்திலேயிருந்து நகசிகை பரியந்தம் சமானமாக வியாபிச்சுக் கொண்டிருக்கும். இவை எல்லாம் உண்டு பண்ணி அந்த ஈஸ்பரன் அந்தப் பிரமாண்டத்தை முந்திய ஒன்பது ஆலானங்களுக்கு மத்தியிலே நிறுத்தினார். அதன் பிறகு, அந்தச் சூட்சும பூதங்களுடைய ரசோகுண தாமிசைகளை ஆகாச முதற் கிரமமாக எடுத்து முன்னே வைத்துக் கொண்டு ஒவ்வொரு பூத பாகம் நாலாகப் பண்ணி, அதில் ஒவ்வொரு பாகமெடுத்து அப்பாலே வைத்து, மற்ற மூன்று பாகங்களும் பஞ்ச வாயு ஆச்சுது. அதற்கு விபரம் ஆகாச ரசோ குண முக்கால் பங்கினாலே பிராண வாயு உண்டாச்சுது. வாயுவின் ரசோ குணத்தின், முக்கால் பங்கினாலே அபான வாயு உண்டாச்சுது. அக்கினி ரசோ குணத்தின் முக்கால் பங்கினாலே உதான வாயு உண்டாச்சுது. அப்புவின் ரசோ குண முக்கால் பங்கினாலே வயான வாயு உண்டாச்சுது. பிருதிவி ரசோ குணத்தின் முக்கால் பங்கினாலே சமான வாயு உண்டர்ச்சுது.

பிராணன், பாணன் இந்த இரண்டு தீபாக்கினிச் சகாயமாக இருந்து நாலு பேதமாக இருக்கிற பட்சனமெல்லாம் விழுங்கல், சுவைத்தல், பருகுதல், நக்கல் இந்த நாலு வகை உண்டிகளையும் பாகம் பண்ணும். இப்பால் முன் சொன்ன ஐந்து பூதத்திலும் நிறுத்தி வைத்த, பாகங்களும், ஆகாய முதலாக வைத்து கன்மம் இந்திரியங்கள் உண்டாச்சுது.

அதெப்படியென்றால் ஆகாச ரசோ குணத்தின் கால் பங்கினாலே வாக்கிந்திரியமும் வசனிக்கிற தொழிலும் வன்னிய தேவதையும் உண்டாச்சுது. வாயுவின் ரசோ குணத்தின் கால் பங்கினாலே பாணி இந்திரியமும் கொடுத்து வாங்கிற தொழிலும் இந்திரன் அதிதேவதையும் உண்டாச்சுது. அக்கினி ரசோ குணத்தின் கால் பங்கினாலே பாத இந்திரியமும் கேமனத் தொழிலும் உபேந்திரன் அதி தேவதையும் உண்டாச்சுது. அப்புவின் ரசோ குணத்தின் கால் பங்கினாலே வாயுரு விந்திரியமும் மலத்தை வெளிப் படுத்துகிற விசர்க்கத் தொழிலுமிறுத்தி அதி தேவதையும் உண்டாச்சுது. அக்கினி ரசோ குணத்தின் பிருதிவி ரசோ குணத்தின் கால் பங்கினாலே, உபஷ்த இந்திரியமும் ஆனந்தத் தொழிலும் பிரமன் ஆதி தேவதையும் உண்டாச்சுது. இந்த ஐந்தும் கன்மேந்திரியம் என்று பேரிட்டுப் பிரமாண்டத்திலே வைக்குமிடத்தில் அந்தக் கன்மேந்திரியங்கள் பிரமாண்டமெல் லாம் வியாபிச்சு அதில் பதிநாலு லோகங்களிலேயும் இருக்கிற வியட்டி தூல சரீரங்களிலேயும் வியாபிச்சு பிரவேசிச்சு அந்தக் கொள்கை ஸ்தானங்களிலே இருந்து வசனிக்கிறதும் வாங்கிறதும் கெமனிக்கிறதும் மலம் தள்ளுகிறதும் ஆனந்தம் காட்டுகிற தொழிலே இது முதலானதுகளை பண்ணி கொண்டிருக்கும்.

அதன் பிறகு, சூட்சும பூதங்களுடைய சத்து வணகு அமிசையில் ஆகாச முதலாக எடுத்து முன்னே வைத்துக் கொண்டு ஒவ்வொரு பூதப்பாகம் நாலாகப் பண்ணி, பூதம் ஒன்றுக்கு முக்கால் பங்கு கிரமமாக எடுத்து அதில் ஆகாச சத்துவ குணத்தின் முக்கால் பங்கினாலே அந்தக்கரணமாகிய தேயசும், சூரியன் அதிதேவதையும் சூக்ஷமை தொழிலும் உண்டாச்சுது.

வாயுவின் சத்துவ குணத்தின் முக்கால் பங்கினாலே மனசு சந்திரன் வேததையும் சங்கற்பம் தொழிலும் உண்டாச்சுது. அக்கினியின் சத்துவ குணத்தின் முக்கால் பங்கினாலே புத்தியும் விஷ்ணு அதி தேவதையும் நிச்சயிக்கிற தொழிலும் உண்டாச்சுது.

அப்புவின் சத்துவ குணத்தின் முக்கால் பங்கினாலே சித்தமும் பிரம அதிதேவதையும் பழகின பழக்கத்தில் சந்தானம் பண்ணுகிற தொழிலு முண்டாச்சுது. பிருதிவியின் சத்துவ குணத்தின் முக்கால் பங்கினாலே அகங்காரமும் சம்பு அதிதேவதையுய் அபிமானத் தொழிலுமுண்டாச்சுது.

இந்த தேயசு, மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் ஐந்தும். பிரமாண்டமெல்லாம் வியாபிச்சு, அதில் பதினாலு லோகமும் வியாபிச்சு, அதில் வியட்டி, தூல, சரீரங்களிலேயும் பிரவேசித்து, அந்தந்தக் கொள்கை ஸ்தானங்களிலே இருந்து சங்கல்பம் நிட்சயமனு சந்தானம் அபிமானம் என்கிற விருத்திகளுண்டாம் இருந்தது.

அதன் பிறகு சத்துவ குண அம்சத்தினுடைய கால் பங்குகள் ஆகாசாதி கிரமமாக எடுத்து முன்னே வைத்துக் கொண்டு ஆகாச தத்துவ குணத்தின் கால் பங்கினாலே சிரோத்திர இந்திரியமும் சத்தங் கேட்கிற தொழிலும் திக்கு அதி தேவதையும் உண்டாச்சுது. வாயுவின் சத்துவ குணத்தின் கால் பங்கினாலே தொக்கு இந்திரியமும் பரிசமும் உண்டாச்சுது. அக்கினியினுட சத்துவ குணத்தின் கால் பங்கினாலே சட்சு இந்திரியமுஞ் சூரியன் அதி தேவதையும் ரூபம் அறியிற் தொழிலும் உண்டாச்சுது, அப்புவின் சத்துவ குணத்தின் கால் பங்கினாலே சிங்குவை இந்திரியமும் வருணன் அதிதேவதையும், ரசமறியிற் தொழிலுமுண்டாச்சுது. பிருதுயின் சத்துவ குணத்தின் கால் பங்கினாலே ஆக்கிரான இந்திரியமும் அசுவினி தேவதையள் அதிதேவதையும் கந்த மறியிற் தொழிலுமுண்டாச்சுது.

இந்த ஞானேந்திரியம் என்னும் அந்தப் பிரமாண்டத்திலே வைத்தபடியினாலே அந்த ஞானேந்திரங்கள் பிரமாண்டமெல்லாம் வியாபிச்சு அதில் பதினாலு லோகங்க ளிலேயும் இருக்கிற வியஷ்ட்டி தூல, சரீரங்களிலேயும் பிரவேசித்து அதனதன் கொள்கை ஸ்தானங்களிலே இருந்து சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் இவைகளோட கூடியிருந்தது. அதன் பிறகு ஈசுரன் இத்தனை உண்டு பண்ணியும் பிரமாண்டம் செடமாகத்தானே இருக்குது என்றறிந்து முன் அந்த அவ்வியத்தமானவுடனே கூடியிருக்கிற ஈசுவரன் தமோ குண மாயையுடனே கூடியிருக்கிற விராட புருஷனைக் கூடி அழைத்து, “தம்பி நீ உன்னுடைய அகங்கார மாயையுடனே கூடி பிரமாண்டத்திலே பிரவேசித்து சாக்கிர பிரபஞ்சத்துக்கும் தூல சரீரங்களுக்கும் அபிமானியாய் இரும்” என்று சொல்லி ஆக்ஞாபிச்ச படியினாலே அந்த விராட புருடரானவர் தாமத குணமுடைய அகங்கார மென்கிற மாயையோடே கூடி, பிரமாண்டத்திலே பிரவேசித்து, சகலமான சாக்கிர பிரபஞ்சத்துக்கும் தூல சரீரங்களுக்கும் அபிமானியாயிருந்தார்.

அப்படி இருந்தும் பிரமாண்டஞ் சடமாகத்தானே இருந்தபடியினாலே அதன் பிறகு ரசோகுண மாயையுடனே கூடிய இரண்ய கற்பரை அழைத்து, "தம்பி நீ உன்னுடைய மகத்துவமென்கிற மாயையுடனே கூடி பிரமான்டத்திலே பிரவேசித்து சகலமான சூட்சும சரிரங்களுக்கும் சொற்பன அவித்தைக்கும், அபிமானியாய் இருக்க சொல்லி இருந்தார்" என்று.

அப்படி இருந்தாலும் பிரமாண்டஞ் செடமாகத்தானே இருந்தது. விராடபுருடன் இரண்ய கற்பனும் இந்த இரண்யகற்பரும் போய் பிரவேசித்திருந்து பிரமாண்டஞ் செடமாகத்தானே இருக்குதென்று அந்த அவ்வியத்த உபாதி காரணமாய் இருக்கிற ஈசுரனானவர் அந்தத் தூல, சூட்சும தேகங்களிரண்டையும் தைன்னிய முண்டாக்கி விச்சு சேட்டிக்கப் பண்ண வேண்டி நினைத்தான்.

தன்னுடைய அவ்வியத்த மாயையோடே பிரமாண்டம் பேதிச்சுக் கொண்டு பிரமாண்டத்துக்குள்ளே இருக்கிற சீவராசியளுடைய பிரமாந்திர மார்க்கத்தினாலே பிரவேசித்தும், இதை ஆகாசத்திலே இருந்து சகலமான காரண சரீரங்களுக்குச் சுழுத்தி யவத்தைக்கும், அபிமானியாகயிருந்து அந்தத் தூல சூட்சும தேகங்களிரண்டையும் சேதனம் பண்ணிக் கொண்டு இருந்தார்.

அவருக்கு ஈசுர தத்துவ முண்டானதுக்கும், சருவக்கிஞாதி குணங்களுண்டான துக்கும் லட்சணம் இந்தப்படி ஈசுரர் சொரூபந் தெரியச் சொன்னோம். இனிமேல் சீவத்துமுங் கிஞ்சிகத்துவாதி குணங்களுடாகிறதுக்குத் தெரியச் சொல்லுகிறோம்.

அதெப்படியென்று கேட்கிற சீடனுக்குக் குரு சொல்லுகிறது. அந்த ஈசுரன் தானே பிரமாண்டத்துக்குள்ளாக இருக்கிற வியஷ்டிகளாய் இருக்கிற தேகங்களு டைய பிரமாந்திரங்களைப் பேதிச்சுக்கொண்டு சத்துவ குணப்பிரதானமான மாயை யோடே கூடப் பிரவேசித்து இருதைய ஆகாச மத்தியத்திலே நின்றார். அந்த மாயக் காரியமான தேகேந்திரிய கூட்டத்திலே பிரவேசித்தவுடனே இந்தச் சத்துவ மாயை யானது மலினசத்துவமாச்சுது. அந்த மாயை அவித்தையென்று பேருண்டானதாய் அந்தச் சிவனுக்குத் தானேவேறே ஆவரண ரூபமாய் சொஸ்த சொரூபத்தைத் தெரிய வொட்டாமல் அவனும் அந்த அக்கிஞ் ஞானத்தாலே ஆவரிக்கப்பட்டுத் தன்னைத் தானறியாமல் மூன்று சரீரமுந் தானாய் இந்தந்த சர்மங்கள் தானுள்ளவனைப் போலே கர்த்தாபொறுதாவென்று கிலேசப்பட்டு கொண்டிருக்கிற சீவத்துவமுங் கிஞ்சிகத்துவமும் இனிமேல் அந்தச் சீவன் என்று பேர் பெற்ற ஈசுரனுடைய தூல சரீர சொரூபந் தெரியச் சொல்லுகிறோம்.

அந்தத் தூல சரீரமாவது கர்ம சக்கிராத பஞ்சம பூரதி காரியம், சுக்கில, சுரோணித, சம்பவம், வயசுவரணம் ஆச்சிரம சாதி நாம ரூபங்களுடனே கூடித் தொக்கு, சரும, மாமிச, கொழுப்பு, உதிரம் உள்ள சுக்கிலம் இந்தச் சத்த தாதுக்களுடனே கூடி, சீவனுக்குச் சுக துக்கங்களுக்கு இருப்பிடமாய், சாக்கிர அவஸ்தையிலே சகல போகங்களையும் அனுபவிச்சுக் கொண்டிருப்பன். இதுவே தூல சரீர சொரூபம்.

இனிமேல் சீவனுடைய சூட்சும சரீரம் தெரியச் சொல்லுகிறோம். அதாவது ஞானேந்திரியம் அய்ந்து. கன்மேந்திரியம் அய்ந்து. பிராணாதி பஞ்சகம் அய்ந்து. அந்தக்கரணம் ஐந்து. இந்த இருபதுக்குஞ் சூட்சும சரீரம், இந்த சரீரம் சீவனுக்குப் போகசாதனம்.

இனிமேல் அந்த சீவனுடைய காரண சரீர சொரூபந் தெரியச் சொல்லுகிறோம். முன்னே பிரவேசித்த ஈசுரனுடனே கூட வந்த சத்துவ குணப் பிரதானமான அவ்வியத்தமென்கிற மாயையாலேசம்காரண சரீரமொன்று சொல் (லுகிறோம்) லப்படும்.

இனிமேல் அந்தச் சரிரத்திரையங்களிலே அந்தர் பூதமான பஞ்சகோச சொரூபந் தெரியச் சொல்லுகிறோம். தூல சரீரம், அன்னமய கோசம், பஞ்சப் பிராணன்கள் ஐந்து. கன்மேந்திரியம் ஐந்து. பிராணமய கோசம், மனசு, கர்மம், ஞானேந்திரியங்களும், மனோமயகோசம், புத்தியும், ஞானேந்திரியங்களும், விஞ்ஞானமய கோசம். காரண சரீரமே, ஆனந்தமய கோசம். முன்னமே இந்தத் தேகேந்திரியங்களிலே பிரவேசித்த ஆத்மாவானவர் பஞ்ச கோசங்களினாலே ஆவரிக்கப்பட்டுத் தூல சரீர சொரூப அன்னமய கோச தர்மங்களைத் தனதென்று பிரமிச்சு தான் பிராமணன், தான் சுதந்தர புருடன், தான் சிறு பிள்ளைவயசுள்ளவன், வர்ணாச்சிரமம், சாதி வியத்தி இதுகளுண்டானவனென்றும் இப்படி அன்னமய கோசத்தைத் தனதென்று தான் சமுசயப்படுகிறேன் என்றும் மனோமய கோசத்தர்மங்களைத் தனதென்றுந் தான் செய்ததென்றும் விஞ்ஞானமய கோசத்தைத் தனதென்றும் நானென்றும் நீயென்று சொல்லியும், ஆனந்தமய கோசத்தைத் தனதென்று இது முதலான தன்னைப் பார்க்கிலும் அன்னியமான பஞ்சகோச தர்மங்களைத் தனதென்கிற பிரமையினாலே கருத்த வஸ்திரத்தினுடைய மத்தியிலே இருக்கிற படிகமானது கருப்பாகத் தோன்றுகிறாப் போலே அக்கிஞானமான பஞ்ச கோச மத்தியிலே இருக்கிறதினாலே தான் சீவனென்று பிரமிக்கிறதே அல்லாமல் தானானாவிந்த அஞ்சு சரீரங்களுக்குச் சாட்சி இந்தப்படி பஞ்சகோச சொரூபஞ் தெரியச் சொன்னோம்.

இனிமேல் அந்தச் சீவனுடைய அவஸ்தாதிறையச் சொரூபங்களைத் தெரியச் சொல்லுகிறோம். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்று மூன்றவத்தையுண்டு. சாக்கிர அவஸ்தையாவது கூடத்தருடைய பிரகாசத்தைக் கிரகிச்சுக் கொண்டு, விஞ்ஞானமயமென்கிற பேருண்டாய், மனோமயனுடனே கூடி புருவ மத்தியிலே நின்று சகல இந்திரியங்களும் அந்தந்த ஸ்்ானங்களிலே இந்திரியங்கள் நிலை பெற்றிருக்க சாத்த, பரிச, ரூப, ரச, கந்தகமான விசையங்களைப் பொசித்துக் கொண்டு விசுவன் சிதாபாசன விபகாரிகளென்கிற பேர்களை வச்சுக் கொண்டு இருக்கிறதே சாக்கிர அவத்தை.

இந்த அவஸ்தையிலே கிழியும் யாகமும் சிரவண முதலானதுகளை பண்ணுகிறவன் தானே இகலோகம், பரலோகம் இதுகளிலே சுகதுக்கங்களைப் பண்ணுகிறவன், விபகாரி சீவனென்று சொல்லப்படுவன். இது சாக்கிர அவத்தைக்கும் தூல சரீரத்துக்கும் அபிமான முண்டானவன் விசுவன். அதன் பிறகு இந்தச் சாக்கிர அவத்தையிலே விபகாரித்து ஆயாசப்பட்டு இராசாவானவர் நிறை கொலுவிலே

இருந்து ஆயாசப்பட்டு அந்தபுரத்திலே பிரவேசிக்கிறதுக்கு இச்சித்தாப் போலே அந்த பிக்கு ஞானமயன் அக்கிஞான அவிமுகனாய்த் திரும்பி நாடி மத்தியிலே பிரதானி ஸ்தானமாக மனோமயன் தன்பிறகே தேசேந்திரியங்களும் அவர் சாக்கிர பிரபஞ்ச வாசனைகளுடனே கூடி அந்த விஞ்ஞான மயன் நித்திரையினாலே மறையப்பட்டு இருக்கிற சமயத்திலே, ஈசுரனாலே பண்ணப்பட்டு பிரபஞ்சத்தை மறைவுபண்ணி மலைகள், நதிகள், சமுத்திரங்கள், ரூபமான விசித்திரமான சகத்தை நாடி மத்தியிலே உண்டுபண்ணிகொண்டு,, அந்த விசித்திர போகங்களைப் பொசித்துக் கொண்டு நாடி மத்தியிலே, நடக்கிறது சொப்பன அவத்தையென்று சொல்லப்படும்.

அந்தச் சொப்பன அவத்தைக்கும் சூட்சும தேகத்துக்கும் அபிமானி தைசதன். அப்பாலும் அந்த நாடி அதிக்கிறிமித்து அந்த விஞ்ஞான மயன் அக்கிஞானம் என்கிற ஆனந்தமய கோசத்திலே பிரவேசிக்கிற சமயத்திலே மனோமயன் திசேந்தியங்களு டனே கூடி அங்கே தானே இச்சித்திருப்பான். அந்தச் சமயத்திலே சீவனுக்குப் பிரபஞ்ச ஞானமில்லாமல் போம். அந்தச் சிதாபாசன பிரக்கிஞனுடனே ஏகிபவிச்சுக் கொண்டு, அக்கிஞானத்தினாலே மறைபட்டுச் சொற் சொரூப சுகானந்தத்தை அனுப விச்சுக் கொண்டிருப்பன். இதுவே சுழுத்திய வத்தை. இந்தச் சுழுத்திய வத்தைக்கும் காரண சரீரத்துக்கும் அபிமானி பிரக்கிஞனென்று சொல்லப்படுவன். இந்தப்படி சீவன் சுகிற்தம், பாவம் இந்தக் கர்ம பல ரூபமான சாக்கிர, சொப்பன, சுழுத்தி, யவத்தைகளை அனுபவிச்சுக் கொண்டிருப்பன். எப்படி அவத்தாத்திறையங்களை அனுபவிக்கிறானோ அந்தப்படி கர்ம வசத்தினாலே சென்ன மரணங்களை அனுபவிக்கிறவனைப் போல கிலேசப்பட்டுக் கொண்டிருப்பன்.

அந்த மரண அவத்தை யெப்படி யென்றால், அதனுடைய வசனஞ் சொல்லுகிறோம். அந்தச் சீவனானவன் ஞானேந்திரியங்கள் ஐந்து. பிரானாதி ஐந்து. பூதம் ஐந்து. கர்மம் ஒன்று. இதுகளெல்லாம் ஆனந்தமய கோசமென்கிற அவஸ்தையினாலே ஆவரிக்கப்பட்டு இந்தத் தூல தேகத்தை விட்டு தேசாந்திரத்தை அடைந்து துக்க ரூபமான நானா யோனியனிலேயும் பிரவேசித்தவனைப் போலே கிலேசப்பட்டுக் கொண்டிருப்பன்.

இப்படிச் சொன்ன குருவினுடைய சரனா விந்தங்களிலே சீடனானவன் சாஷ்டாங்கமாகத் தென்டன் பண்ணி, கைகட்டி வாய் புதைத்துச் சொல்லுகிற உத்தாரம் "சுவாமி அடியேனுக்கு மோட்ச மார்க்கங்களைக் காண்பிக்கச் சொல்லிக் கேட்ட விடத்திலே சுவாமியவர்களிந்த அக்கிஞான பஞ்சப் பூத பிரபஞ்சத்தை விஸ்தரிச்சுச் சொன்னதினாலே, எனக்கு யென்ன பிரயோசன மாச்சுது" என்று கேட்ட சீடனைப் பார்த்து குருவானவர் காரியமானவர் தம்பி வாரும் பிள்ளாய்! நீ மிகுதியும் புத்திசாலியானவன். நீ சொன்னது எதார்த்தமானாலும் சகத்துக்குச் சீவன் பரமாத்மா. இந்த மூன்று வஸ்துவினுடைய சொரூபமும் பழுதையினிடத்திலே தோற்றின பாம்பு இல்லாது போனாப் போலே சீவத்துவமும் நாமரூபாற் மகமான பிரபஞ்சமும் இல்லாமல் போம்.. இந்த இரண்டு சொரூபமும் பொய்யாத் தோற்றின பிறகு ஆத்மா மாத்திரம் மேகங்கள் விலகிப் போன தின் பிறகு, சூரியன் பிரகாசமாகத் தோன்று கிறது போலே பிரகாசித்துக் கொண்டிருப்பன்.

இனிமேல் ஈசுரனிடத்திலே இருக்கிற பிரபஞ்சமும் சருவகிஞ்ஞசத்துவ குணங்கள் முதலானது தோணாமல் ஆத்மா மாத்திரம் பிரதட்சயமாகக் காண்பிக்கிற மெதுவோ? எந்த உபாயத்தை அனுசரித்து பார்த்தால் ஆத்மா கருதலாக மலம் போல தோணுவரே அந்த உபாய கிரமத்தை நாம் விசித்திரமாகச் சொல்லுகிறோம். சாவதான சித்தனாய்க் கேளும் பிள்ளையாய்.

ஈசுரன் முன் உண்டுபண்ணிவிச்ச பிரமாண்டத்தை இப்புறம் வைத்துக் கொண்டு அந்தப் பிரமாண்டமாயப் பண்ணிவச்சிருக்கிற பஞ்ச பூதங்களினுடைய தமோ குண அம்சத்தை அபஞ்சிகரணம் பண்ணி அந்தச் சத்துவ குண காரியமான அந்தகரணத்தையும் சுரோத்திர முதலான ஞானேந்திரியங்களையும் தமோ குணத்து டனே கூட்டி அந்த ரசோகுணத்தினுடைய காரியமான பஞ்ச பிராணன்களையும் கன்மேந்திரியங்களையும் சத்துவ குண தமோ குணங்களுடனே சேர்க்க அந்தப் பஞ்ச பூதங்கள் அபஞ்சிகிறுதமாய் குட்சும பூதங்களாகத் தானே தன்மாத்திரைகளாய் திரிகுண சொரூபங்களாய்த் தானே இருக்கும்.

அந்தப் பஞ்சப் பூதங்கள் பிரமாண்டத்துக்கு வெளியிலே ஆவர்ண ரூபங்களா இருக்கிற மகாபூத தன்மாத்திரைகளுடனே சேர்ந்து மகா பிருதிலி தன்மாத்திரையை மகாசெல தன்மாத்திரையுடனே சேர்த்து, அந்த மகா செலம் தன்மாத்திரையை மகா அக்கினி தன்மாத்திரையுடனே சேர்த்து அந்த மகாஅக்கினி தன்மாத்திரையை மகாவாயு தன்மாத்திரையுடனே சேர்த்து அந்த வாயு தன்மாத்திரையை மகாஆகாச தன்மாத்திரையுடனே சேர்த்து, அந்த ஆசாச தன்மாத்திரையை மகா அகங்காரத்திலே அடக்கி, அந்த அகங்காரத்தை மகத்துவத்திலே அடக்கி, அந்த மகத்துவத்தை அவ்வியத்திலே அடக்கி, அந்த அவ்வியத்தை மூல பிரகிருதியைச் சொரூபத்திலே லயம் பண்ணி உறைந்த நெய் அக்கினி சன்னதிதானத்திலே உருகி நின்றது போலே இந்தப் பிரமாண்ட முதல் மூலப் பிரகிருதி வரைக்கும் பிரமையினாலே தோன்றின. பிரபஞ்சமானது நானாக்கினியிலே உருகி பிரபஞ்ச சொரூபந்தோணும். மலத்தானே நித்திய சுத்தமாய்ப் புத்த முத்த சொரூபமாய்ப் பரமானந்த சொரூபமாய்ச் சத்தர் மாத்திரமாய்ச் சருவ அதிஷ்டானமான பிரமாத்திரமாக இருக்கும். இதுவே சருவக் கிஞத்துவ குணங்கள். பரிகரிக்கிறதுக்கும் ஈசுரத்துவமில்லாதே இருக்கிறதுக்கும் உபாயம். இனிமேல் சீவதத்துவமும் சீவனிடத்திலே இருக்கிற கிஞ்சிகத்து வாதி குணங்கள் பரிகரிக்கிறதுக்கு உபாயஞ் சொல்லுகிறோம்.

அதெப்படி யென்றால் தான் தேகேந்திரியங்களுக்கு சாட்சியாக இருந்து பார்த்து குடத்திலே வைத்த தீபம் போலே தான் தேகேந்திரியங்களுக்கெல்லாம் வேறுபட்டு, கடஸ்தானமாயிருக்கிற தேகத்தைப் பிரத்தேகம் பண்ணி, அந்தத் தேகத்தை அபஞ்சிக் கிறுதமாக பண்ணி, அந்தத் தத்துவ குண காரியமான அந்தக் கரணத்தையும், ஞானேந்திரியங்களையும் தமோகுணத்துடனே சேர்த்து அந்த ரசோகுண காரியமான பஞ்ச பிராணன்களையும் கர்மேந்திரியங்களையும், அந்தச் சத்துவ குண தமோ குணங்களுடனே சேர்த்து அந்த மூன்று குணமான பிருதிவி யைச் செலத்திலே சேர்த்து செலத்தை அக்கினியிலே சேர்த்து, அக்கினியை வாயுவிலே சேர்த்து வாயுவை ஆகாசத்திலே சேர்த்து, ஆகாசத்தை அவ்வியத்த மென்கிற ஆனந்தமய கோச ரூபமான மூலாக்கினி ஞானத்திலே அமிழ்த்தி, மூலாக்

கினி ஞானத்தை பிரத்தேகாரமாவினிடத்திலே லயம் பண்ணி, கிஞ்சிகதத்துவாதி முதலான குணங்களும், சீவ தத்துவமும் பரிகரிக்கப்பட்டதாய், சோகமகம்ஸா என்னப்பட்ட சீவிசுரான கட்செலமும் மகாசெலமும் ஏக மானாப் போலே சீவனுக்கும் பிரமத்துக்கும் அய்க்கியமுண்டாம்.

இன்னும் உபாயந்திரம் சொல்லுகிறோம். அதெப்படியென்னில் விபகாரிக சீவனென்று சொல்லப்பட்ட சிதாபாசனானவன், கர்த்ததுவபோத தத்துவந் தன்ன தென்று சொர்க்க நரகத்தையும் அனுபவித்துக் கொண்டு கர்ம ரூபமான சாக்கிர, சொப்பன, சுழுத்தி இந்த மூன்று அவத்தைகளையும் அனுபவித்து ஆயாசப்பட்ட வனாய் தானாவதார சுழுத்தியிலே நானே வடத்திலே இருக்கிறேன். எனக்கு அதிஷ் டானமானவர் ஒருத்தரில்லாமல் போனால் எனக்கு இத்தனை மகத்துவ மெப்படி வந்ததென்று யோசனை பண்ணி வெளிமுகமாய் பார்க்கிற சிரோத்திராதி இந்திரியங் களையும் மனசையும் உள்முகப்படுத்தி விச்சுக் கொண்டு தனக்குக் காரணமான அந்த அக்கிஞானத்தை கர்பத்திலே யாரோ இருக்கிறாரென்று விசாரித்துப் பார்க்க இந்தச் சிதாபாசனுடைய பிரகாசத்தினாலேயும் கூடஸ்தருடைய பிரகாசத்தினாலே யும் நெருப்பு பட்ட பஞ்சு போலே அந்த ஆனந்தமய கோசமென்கிற மூலா வித்தையானது நசிச்சுப் போய்விடும். இதுவே இருதயக்கிரந்தி பேதமென்று சொல்ல ப்படும். லிங்க சரீரமில்லாமலிருக்கும். அதன் பிறகு இந்த லிங்க சரீரமில்லாமல் போம்.

இந்த லிங்க சரீரமில்லாமல் போனவுடனே மேக வான மத்தியிலே இருக்கிற சூரியன் வெளியாய் பிரகாசிக்கிறா போலே - மத்தியான காலத்து சூரியனைப் போலே - பிரகாசித்து கொண்டிப்பார். ஆத்மாவினுடைய பிரகாசத்தினாலே விஞ்ஞான மயம், மனோமயம், பிராண மயமென்று பேருண்டான மூன்று தோஷங் களும் பழுக்கக் காய்ந்த இருப்புக் கட்டியிலே விழுந்த செலபிந்து போல சொழித்து, அதனுடைய நாம ரூபங்களில்லாமல் போம்.

அப்போது ஆத்மானவர் கலச கற்பத்திலே இருக்கிற தீபம் போல சீவன் முத்த னுடைய நகசிகை பரியந்தம் அன்னமய கோசத்தை வியாபிச்சு பிராத்த கர்மத்துக்கு அனுகூலமாகத் தேகேந்திரியங்கள் சேட்டிக்க தானதுகளிலே ஓட்டாதவனாக யிருந்து கொண்டு சர்வக்கிஞ்ஞனாக இருந்தாலும் மூடனைப் போலே விபகரித்துக் கொண்டிருப்பன். விபகார காலத்திலே இந்தப்படி யிருந்தாலும் சமாதி காலத்திலே இந்த அன்னமய கோசமும் கரைந்து போனாப்போலே பாவனைப் பண்ணிக் கொண்டிருப்பன். இந்தப்படியிருக்கிற சீவன் முத்தனுக்கு மகா மேரு பருவதங்கள் போலே இருக்கிற சஞ்சித கர்மங்கள் தாமரையில் செலம் ஒட்டாதது போல அந்தக் கர்மங்கள் இந்தச் சீவன் முத்தனிடத்திலே ஒட்டியிராது. பிராத்த கர்மாத்திரம் அனுப வியாமல் தீராது.

இந்தச் சீவன் முத்தனானவன் பிராத்துவ கர்மமனுபவிக்கிற காலத்திலே வருகிற புண்ணிய பாவங்கள் இவனுக்குச் சென்மங்களைக் கொடுக்க மாட்டாது. பட்சணத்துக்கு வறுத்த கடலையானது, எந்தப்படி ருசியாய் இருக்குமோ அந்தப்படி சீவனமுத்தனுக்கு அன்னாபானாதி போகங்களைச் சென்மங்களைக் கொடுக்க

மாட்டாது. இந்தச் சீவன் முத்தன் சஞ்சாரம் பண்ணுகிறது கீழ்தேசமானாலும் அது காசி பூமிகளிலேயும் அதிக புண்ணியச் புண்ணியச் சேத்திரங்களாக யிருக்கும். அந்தச் சீவன் முத்தனுடைய கிருபாகடாக்ஷம் யாதொருத்தரிடத்திலே யுண்டாயிருக் குமோ அவர்கள் சகல பாவங்களிடத்திலே இருந்து விடுபட்ட பேராய் சகல சிரேயுசு களையுமடைவார்கள்.

அந்தச் சீவன் முத்தனுடைய குலமெலாம் பவுத்திரம். அவருக்கு யாதொரு வரானாலும் ஒரு கவளம் அன்னமும், உதகமும் கொடுத்து ரட்சை பண்ணு கிறார்களோ அவர்களுக்குக் கோடி கன்னிகாதான பலன் பலிக்கும். அவரை வெகு காலம் அன்னோதகம் தனகனக வஸ்து வாகனங்களினாலே யாதொருத்தர் உபசரிக் கிறார்களோ அவர்களுக்கு ஞான அப்பியாசம் பண்ணாமல் தானே பிரம்மலோக பதவி கிடைக்கும். அந்தப் பிரம்ம நிட்டரானவர் வெகு சென்மங்கள் சுகிர்தம் பண்ணாமல் ஞானோதயமாகிறதில்லையே ஆனபடியினாலே அந்தப்பிரமநிட்டர் முன் பண்ணின சுகிர்த பலங்கள் அவரை உபசரித்த பேருக்குச் சேரும் ஆனபடியினாலே அந்தப் பிரமநிட்டர்களைச் சாருவதாய்ப் பொசித்து உபசரிக்கத் தக்கது. அந்தப் பிரமநிட்டாள் ஈசுர சொரூபமாயிருக்கிற பேர். இதுவே சகலமான வேதசாஸ்திர ஸ்மிருதி புராணங்களுடைய சித்தாந்தம். இப்படி சீவன முத்தனானவர் பிராத்து வட்சபரியந்தமும் யோகியாய் ராச்சிய பரிபாலனம் பண்ணி கொண்டிருந்தாலும் பிரவிற்தனாகி தன்னைச் சார்ந்த பேருக்கு ஞானோபதேசம் பண்ணி, சிஷ்யர்களைச் சிறுதாற்தளாகப் பண்ணிக் கொண்டிருந்தாலும், யோகியாய் மவுன மாறாரிச்ச கந்த மூல பலங்களை பொசிச்சுக் கொண்டு வனங்கள், பருவதங்கள், குகைகளிலே வாசம் பண்ணிக் கொண்டிருந்தாலும், மோட்ச மிந்த மூன்று பேருக்கும் சமமாயிருக்கும். இதுவே சீவன் முத்தி லெட்சணம்.

இனி விதேக முத்தி லெட்சணம் சொல்லுகிறோம். இன்னும் அன்னமய கோசமானது தேவுபாதி பிறத்தேகாரமாவினிடத்திலே நின்று விருட்சத்தினிடத்திலே இருந்து பழுத்தயிலை ஒட்டு விட்டுக் கீழே விழந்தது போலே ஒட்டு விட்டு விழுந்து விடும் அந்த தூல தேக உபாதி விழுந்து போனவுடனே குளத்து செலத்துள்ளே நிறைய முகந்து அமிழ்ந்து இருக்கிற குடம் யாதொன்றுண்டோ அந்தக் குடத்துக்குள்ளே இருக்கிற செலமானது அந்தக் குடமுடைந்தவுடனே அந்தக் குளத்து செலத்துடனே ஏகமாய் நின்றாப் போலே சீவப் பிரமமென்கிற இரண்டு பேருக்கும், ஐக்கியமுண்டாய் ஏகரூபமாய் பரிபூரண சொரூபமாய் இருக்கிற காலத்திலே அசைவில்லாமல் கம்பீரமாய் தேசுமில்லாமல் இருட்டுமல்லாமல் இன்னபடியென்று வாக்கினாலே சொல்லவும் படாமல் இன்னபடியென்று கண்ணினாலே பார்க்கப் படாமல் சத்தா மாத்திர மிச்சம் உண்டாயிருக்கும். இப்படியென்று சொல்லி இந்த பிரகரணம் யாதொருத்தர் நித்தியம் பாராயணம் பண்ணிக் கொண்டு வருகிறார்களோ, அவர்கள் சகல துரிதங்களிலே நின்றும் விடுபட்டு கிரமமாக மோட்சத்தை அடைவார்கள். யாதொருத்தர் இந்தப் பிரகரணத்தைக் குருமுகமாகச் சிரவணம் பண்ணி, சிரவணம் பண்ணினதை நன்றாய் மனனம் பண்ணிக் கொண்டு மனனம் பண்ணினதை யாதொருத்தர் அனுபவத்திலே நிட்டை சாதிச்சு வருகிறார்களோ அவர்களே சீவன முத்தர். இந்தப்படி பிரகரணம் வாசுதேவ சொரூபரான விமர்சானந்த யோகீதாசாமியள் சரணாவிந்தங்களிலே பிருங்கம் போல சஞ்சரிக்கிற

சிதானந்த யோகிசுரானவர் சச்சிதானந்தயோகிக்கு உபதேசம் பண்ணின சிதானந்த கீதை முற்றும்.

---

# புடைமருதூர் மரபு ஆராய்ச்சி உரை

சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் குறிப்பிடும் சைவம், எப்போது யாரால் தோற்றுவிக்கப்பட்டது. என்று கூற முடியாது. தோத்திரங்கள் மூலம் நாயன்மார்கள் சிவனைப் போற்றி உள்ளனர். இறைவன், உயிர்கள் போன்றவற்றை அறிவுப் பூர்வமாகச் சிந்தித்துச் சைவசித்தாந்தத்தை முதன் முதலில் நெறிப்படுத்தியவர் மெய்கண்டாரே ஆவார். இவருடைய சிவஞான போதம் திட்டமும் நுட்பமும் வாய்ந்ததாகும். இவருடைய மரபில் வந்தோர் எண்ணற்ற சித்தாந்த நூல்களை இயற்றி உள்ளனர். இன்றுள்ள திருவாவடுதுறை ஆதீனம், தருமபுர ஆதீனம் போன்ற ஆதீனங்கள் சைவ சித்தாந்த நெறியினைக் காத்து வருகின்றன. பெருமளவில் சித்தாந்த நூல்களை வெளியிட்டும் வருகின்றன.

சைவ சித்தாந்த கருத்துக்களை எளிமைப்படுத்தி வினா விடை போல் கி.பி. 17ஆம் நூற்றாண்டின் இறுதியிலும், 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் 'திருப்புடைமருதூர்' என்ற ஊரில் வாழ்ந்த ஒருவர், நூல் எழுதி 'புடைமருதூர் மரபு' என்று பெயரிட்டுள்ளார்.

இந்நூல் ஓலைச்சுவடியாக வேதாரண்யத்தில் வாழ்ந்து வரும் சொக்கநாத தேசிகர் என்ற ஆசிரியர் வீட்டில் இருந்தது. இவர் குடும்பம் யாழ்ப்பாணத்தில் யாழ்ப்பாணத்தில் இருந்து வேதாரண்யம் வந்த குடும்பமாகும். புடைமருதூர் மரபு மட்டுமின்றி ஐம்பதுக்கும் மேற்பட்ட ஓலைச்சுவடிகளை 1979ஆம் ஆண்டில் அடியேன் இலவசமாக அரசிற்காகத் திரட்டித் தந்துள்ளேன். புடைமருதூர் மரபு உட்பட அச்சில் வராத நான்கு சுவடிகளையும் நகல் செய்து அப்போதைய தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநராக இருந்த டாக்டர் இரா. நாகசாமிக்கு அனுப்பி வைத்தேன். பேராசிரியர் சண்முகம் பிள்ளை மற்றும் மு. அருணாசலம் இருவரும் புடைமருதூர் மரபு என்ற நூல் அச்சில் வரவில்லை என்று தெரிவித்தனர். சுமார் இருபது இருபது ஆண்டுகள் கழித்துத் தற்போது புடைமருதூர் மரபு என்ற நூல் அச்சில் ஏறுகிறது.

'சித்தாந்த மரபு' என்ற பெயரில் சைவ உரை நடை நூல் ஒன்று சிவஞான முனிவர் காலத்திற்கு முன் எழுதப்பட்டது. இந்நூல் திருவாவடுதுறை ஆதீன வெளியீடு என்று கருதி இந் நூலுக்கு மறுப்பாகச்'சித்தாந்த மரபு கண்டனம்' என்ற நூலைத் தருமபுர ஆதீனம் வெளியிட்டு மகிழ்ந்தது. இந்த மறுப்பு நூலுக்கு எதிராகச் சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம் என்ற நூலை சிவஞான முனிவர் இயற்றித் தம் புலமையை நிலை நாட்டினர். இம்மூன்று நூல்களையும் ஒன்றாகத் திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்டுள்ளது.

முக்கியமாக மறுக்க வேண்டிய இடங்களில் மறுக்காமல் தேவையில்லாத இடங்களில், தருமபுர ஆதீனம் மறுத்து எழுதியதாகச் சிவஞான முனிவர் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். அது மட்டுமின்றிச் சித்தாந்த மரபு எழுதிய புலவர் ‘அனாமதேயப் பேர் வழி' என்றும் குறிப்பிட்டுள்ளார். எத்தனையோ நூல்களின் ஆசிரியர் பெயர்கள் தெரியவில்லை என்ற நிலை தமிழ் மொழியில் உண்டு.

சித்தாந்த மரபில் உள்ள கருத்துக்கள் பெரிய மாற்றமின்றிப் புடைமருதூர் மரபு என்ற சுவடியில் உள்ளது. புடைமருதூர் மரபு என்ற நூலின் பின்பகுதியாகச் சித்தாந்த மரபினைக் குறிப்பிடலாம்.

சென்னை உ.வே.சா. நூலகம் 1983-இல் 'சைவ சித்தாந்த வினாவிடை' என்ற பெயரில் ஒன்பது சைவ சித்தாந்த நூல்களை ஒன்று திரட்டி நூலாக வெளியிட்டது. அதில் நான்காவது நூலாக சைவசித்தாந்த உரை நடை (பக். 38 முதல் 58 வரை) அச்சிடப்பட்டுள்ளது. இந்த வினாவிடை நூலும் புடைமருதூர் என்ற நூலின் முற்பகுதியும் பெரும்பாலும் ஒன்றாக மரபு உள்ளது. சில செய்திகள் மட்டும் வேறுபட்டுள்ளன அல்லது இடம் பெறவில்லை. ஆகப் புடைமருதூர் மரபு என்ற நூலே இரண்டாகச் சித்தாந்த மரபு என்றும் சைவ வினாவிடை என்றும் அக்காலத்தில் ஓலைச்சுவடிகளில் எழுதி வைத்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

சைவ வினாவிடை நூலாசிரியர் பெயர் தெரியவில்லை என்றே அந்நூல் பதிப்பாசிரியர் குறிப்பிடுகிறார். இருப்பினும் வினாவிடை நூல்களும் பெரும்பாலும் திருவாவடுதுறை, தருமபுர ஆதினங்களைச் சேர்ந்தவர்களாலேயே எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று அந்நூலின் அணிந்துரையில் டாக்டர். இரா. நாகசாமி குறிப்பிட்டுள் ளார். அவருடைய கருத்து பொதுவாக ஏற்புடைத்தேயாகும்.

புடைமருதூர் மரபு என்ற இந்நூல் குறித்துத் திருவாவடுதுறை ஆதீனக் குருமகான் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிகரிடம் குறிப்பிட்டபோது புடைமருதூர் திருப்புடைமருதூர் என்றும் அங்கும் திருவாவடுதுறை ஆதீனக் கிளைமடம் இருப்ப தையும் குறிப்பிட்டு அக்கிளைமடத்தில் இருந்த தம்பிரான் ஒருவரால் புடைமருதூர் மரபு இயற்றப்பட்டிருக்கலாமோ? என்ற ஐயத்தை வெளிப்படுத்தினார்கள். சுவாமிக ளின் நுட்பமான அறிவைக் கண்டு வியந்தேன்.

அடியேன் நெல்லை மாவட்டம் திருப்புடைமருதூர் சென்று அங்குள்ள திருவாவடுதுறை கிளை மடத்தை ஆய்வு செய்தேன். கோயிலையும் ஆய்வு செய்தேன். கோயிலில் பெருங்குளம் செங்கோல் மடத்தைச் சேர்ந்த ஒரு குருவின் சிலை இருப்பதைப் பார்வையிட்டேன். திருப்புடைமருதூரில் திருவாவடுதுறை மடத்தின் கிளைமடம் இருப்பது போன்று செங்கோல் மடத்தின் கிளையும் அக்காலத்தில் இருந்திருக்கலாம். பேணுவாரின்றிச் செங்கோல் மடம் மறைந்திருக்க லாம். செங்கோல் மடமும் சைவத்தை வளர்த்து வந்த பழைய மடமாகும். எனவே இவ்விரு மடங்களில் ஒரு மடத்தினைச் சேர்ந்த புலவர் அல்லது தம்பிரான் புடைமருதூர் மரபினை இயற்றி இருக்க வேண்டும் என்று கருதுகிறேன்.

எது எப்படி இருப்பினும் சித்தாந்தத்தைச் சொல்லும் புடைமருதூர் மரபு என்ற இந்நூல் திருப்புடை மருதூரில் இயற்றப்பட்டது உறுதியாகும். வேறு சில ஊர்களின் மரபினை வேறுபடுத்தவே 'புடைமருதூர் மரபு' என்ற பெயரும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

புடைமருதூர்மரபு இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டு, சைவ வினாக்களுக்கு விடைபோல் எழுதப்பட்டுள்ளன. சித்தாந்தத்தில் வரும் கலைச் சொற்களுக்கு விளக்கம் எழுதப்பட்ட நூல் எனவும் இதனைக் கூறலாம்.

மலசேர்க்கை தொடங்கி பஞ்சாட்சர சிந்தனை என்பது வரை உள்ள பகுதியே தருமபுர ஆதீனத்தின் கண்டனத்திற்கு ஆளானது. பெந்தலட்சணம் என்றொரு சிந்தனை தொடங்கி ஆத்மலட்சணம். என்றொரு சிந்தனை வரை உள்ள 26 தலைப்புகள் உ. வே. சா. வின் சைவ வினா விடையில் உள்ளன. சுத்த அவத்தை தொடங்கி திருச்சிற்றம்பலம் வரை உள்ள ஏழு தலைப்புள்ள கருத்துகள் சைவ சித்தாந்த வினா விடை நூலில் இல்லை. புடை மருதூர் மரபில் மட்டுமே உள்ளன.. பதி, பசு, பாசம் என்ற முப்பொருளைச் சித்தாந்த அடிப்படையில் விளக்கியுள்ள இந்நூலைத் தருக்க - நூல் என்றே குறிப்பிடலாம். தடை விடைகளால் உண்மைக் கருத்து நிலை நாட்டப்படுகிறது.

ஆத்ம லட்சணம் என்றொரு சிந்தனையில் உடலை உயிர் சுமக்குதோ? உடல் உயிரைச் சுமக்குதோ? உயிரை உடல் சுமக்குது. எங்கும் வியாபகமாக இருக்கிற உயிரை உடல் சுமக்குதேயானால் கொட்டைப்பெட்டி போலே சுமந்து கொண்டு திரியுமோ? ஆனாலென்ன? திருவருளானது உயிராய், உணர்வாய்த் தேகமாய்க் காரணமாய்ப் புவனமாய்ப் போகமாய் எல்லாமாயிருந்து நடத்திவிக்கும். அதெப்படி யென்னில் ஆத்மா பதிந்து கொண்டு. இன்ப துன்பத்தைப் பொசிப்பிக்கும். திட்டாந்தம் வருமாறு. சமுத்திரத்திலே பரவன் தோணியைத் துடுப்பிட்டுத் தள்ளிக் கொண்டு போவன். அது அப்படிப் போல சமுத்திரத்தைப் போலே ஆத்மா. பரவனைப் போலே திருவருள். தோணியைப் போலே தேகம். துடுப்பைப் போலே கருவி கரணாதிகள். பதி. ஒன்று; பசுக்கள் பல. பாசமும் ஒன்றுக்கு மேற்பட்டவை என்பது இங்கே குறிப்பாக உணர்த்தப் படுகிறது: மெய்ப்பொருள் : கர்த்தர், ஆத்மா, ஆணவம், கன்மம், மாயை என்ற ஐந்து பொய்ப் பொருள் ஆகாசப்பூ, முயல் கோடு. அழிபொருள தேகாதி பிரபஞ்சம் - என்று ஓரிடத்தில் காண்கிறோம். "வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்", என்றும் "காயமே இது பொய்யடா காற்றடைத்த பையடா" என்றும் தத்துவ ஞானியர் கூறுவர்.

சிவஞானபோதம், சிவஞானசித்தி, சிவப்பிரகாசம் போன்ற நூற்களின் சூத்திரங்கள் புடைமருதூர் மரபில் எடுத்தாளப் பட்டுள்ளன, சூத்திரங்களின் ஓரிரு வரிகளே கையாளப்பட்டுள்ளன. சுருதி. என்றே மேற்படி நூல்கள் குறிப்பிடப்பட்டுள் ளன.

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்த கோடி கன்மங்களைச் சிவன் ஒருவராயிருந்து கட்டி முடிக்கிறதற்குத் திட்டாந்தம். ஊரில் இருப்பவர் பல

பேருடைய புடவைகளை வாங்கி வெளுத்து அவரவர் புடவையை அவரவரிடம் தரும் வண்ணான்; பல பேருடைய மாடுகளை மேய்த்து அவரவர் வீட்டிலே கொண்டு சென்று விடும் இடையன் என்ற இருவரைப் புடை மருதூர் மரபு நூல் கூறுகிறது. நல் மேய்ப்பனாக இறைவனைக் காண்கிறோம். அக்கால ஊர்ச் சமுதாய அமைப்பினையும் இத்திட்டாந்தம் மூலம் அறிகிறோம்.

சைவ மரபில் காணப்படும் பல சொற்களுக்கு. எளிய வகையில் புடைமருதூர் மரபு நூலாசிரியர் விளக்கம் தருகிறார். சான்றாகப் பெந்தலட்சணம் என்ற தலைப்பில் உலகில் நித்தியம் மானவை, அநித்தியமானவை குறிப்பிடப்பட்டு உயிரானதும் பகையையும் உறவையும் அறிய மாட்டாமல் ஆணவ மலத்தில் விழ அந்த நேரத்தில் கர்த்தா அறிந்திரங்கிக் கன்மமாகிய மருந்தைக் கொடுக்கும் திறத்தைக் குறிப்பிடுகிறார். செம்பும், களிம்பும் கூட உதித்தது. செம்பை அறவைத்தவுடனே களிம்பு நீங்கும். இப்படிப் போல ஆத்மாவுக்கு அபக்குவ காலம் விட்டு பக்குவ காலத்திலே அபக்குவம் நீங்க மோட்சமடையும். சிற்றறிவுடைய உயிர் பேரறிவுடைய இறைவனை பேரறிவுடைய இறைவனை அடைந்தே தீரும் என்று காண்கிறோம். அரசு நிர்வாகச் செய்திகளும் புடைமருதூர் மரபில் இடம் பெற்றுள்ளன. சான்றாக ஓரிரண்டைக் காண்போம். இரண்டு பாளையக்காரர் ஒன்றுக்கொன்று விரோதமாய்ச் சீர்மை யெல்லாம் கொள்ளையிட்டுத் தீயும் கொளுத்திக் குடிபடைக்கு இடுக்கண்கள் பண்ணிக் கொண்டு இருந்தார்கள். அப்படியிருக்கிற போது சீர்மைக்கு நல்லராசா வந்தவுடனே. பாளையக்காரர் குறும்புகளை யெல்லாம் ஒடுக்க அவரவர் இச்சையிலே ஒடுங்கியிருந்தார்கள். நூல் எழுதப்பட்ட காலத்தில் தமிழ் நாடெங்கும் பாளையக்காரர்கள் ஆதிக்கம் செலுத்தியதை வரலாற்றில் காண்கிறோம். பாளையப் பட்டுகளை அடக்கியே ஆங்கிலேயர் நாட்டைக் கைப்பற்றினர் என்பது வரலாறு

கலாதியில் திருவருள் விரவல் என்றொரு சிந்தனயில் ஓர் அறிவியல் உண்மை கூறப்படுகிறது. ஒரு கண்ணுக்கு ஒளி மிகுந்தவுடனே வெள்ளெழுத்துண்டாம். அப்போது கண்ணாடி வைத்தால் ஒளியானது கண்ணாடியிலே செறிந்து சிறுகச் சிறுக ஒளியை விடும். அப்போது கண் காணும். ஆங்கில நாடக மேதை ஷேக்ஸ்பியரின் நீங்கள் விரும்பிய வண்ணமே (As you like it) என்ற நூலில் மனிதப் பிறவியின் ஏழுநிலைகளைக் குறிப்பிடும் போது வயது முதிர்ந்த காலத்தில் மூக்குக் கண்ணாடி அணிவதை ஆசிரியர் குறிப்பிடுவார். ஆக ஷேக்ஸ்பியர் காலத்தில் கண்ணாடி அணியும் வழக்கம் பிரிட்டனில் இருந்துள்ளது.. புடை மருதூர் மரபு இயற்றப் பெற்ற 17-18 நூற்றாண்டளவில் தமிழகத்திலும் இவ்வழக்கம் வந்துள்ளது தெரிகிறது. ஆசாரியர் எழுந்தருளுதல் என்றொரு சிந்தனையில் பிறவியிலே படலை மறைத்த கண்ணை வயித்தியன் வந்து உரித்தவுடனே கண் தானே பார்வை பெற்ற விவரத்தைப் புடை மருதூர் மரபு குறிப்பிடுகிறது. கண் அறுவைச் சிகிச்சை முறையை இங்கே காண்கிறோம். கண் தொடர்பான சித்த வைத்திய நூல்கள் பல உள்ளன. என்பதை நாமறிவோம். சித்தாந்தக் கருத்துக்களை அறிஞர்கள் நூல்களில் விளக்கியுள்ளார்கள். புடை மருதூர் மரபில் வரும் கருத்துகள் எளிமை வாய்ந்தவை என்பதால் இங்கே விவரிக்கவில்லை. நூலின் முற்பகுதியில் உள்ள இரு கீதை

நூல்களின் நோக்கமும் புடைமருதூர் மரபின் நோக்கமும் உயிர்கள் இறைவனிடம் சரணடைய வேண்டும் என்பதேயாகும்.

*'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு'*

என்று வள்ளுவரும் இறைவனைப் பற்றும்படி குறிப்பிட்டுள்ளார்.

எளிமையான சொற்களை ஓரிரு வரிகளில் குறிப்பிடும் புடைமருதூர் மரபு ஆசிரியர் பொருளாழம் மிக்க சொற்களுக்கு விரிவாக பல உதாரணங்களுடனும் மேற்கோள்களுடனும் குறிப்பிட்டுள்ளார்.

நல்வினை தீவினைகளுக்கு உதாரணம் கூறும் போது தாலிகட்டிய மனைவி யையும் வைப்பாட்டியையும் குறிப்பிட்டு மனைவி வீட்டில் பதினைந்து நாளும் வைப்பாட்டி வீட்டில் பதினைந்தும் நாளும் தங்கும் கணவன் முதலில் வைப்பாட்டி யின் மீது ஈமொய்க்கவும் தாங்காதவன் பின்னர் அவளை அடியோடு வெறுக்கிறான். இல்லற, நெறி கூறும் நூல்களின்படி மனைவியுடன் வாழ்க்கை நடாத்திய தலைவன் துறவு நூலைக் கேட்டு மனைவியையும் மறந்து துறவு நெறியில் செல்கிறான். மனைவி மற்றும் வைப்பாட்டி இருவரையும் விட்டு நீங்குகிறான். கன்மம் மாறல் என்ற தலைப்பில் ஆன்மாவுக்கு முன் ஆர்ச்சித்த கன்மம் பின்னும் பின் ஆர்ச்சித்த கன்மம் முன்னும் முறை மாறிவரும் என்பதற்கு அரிய எடுத்துக்காட்டுகளைக் கூறுகிறார். முதலில் பனையும் பின் வாழையும் அதற்குப் பின் கத்தரியையும் இறுதியாகக் கீரையையும் பயிரிட்டாலும் முதலில் பலன் தருவது கீரை என்கிறார். இதே போல பிறவற்றையும் குறிப்பிடுகிறார்.

சிவனை இடைவிடாமல் துதித்தால் இருவினை நீங்கி சிவப்பேறு எய்தலாம்.

*'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'*

என்ற குறளின் கருத்தே புடைமருதூர் மரபின் தாத்பரியம் எனலாம்.

புடைமருதூர் மரபின் முதல் பகுதியில் இடம் பெறும் பத்தித் தலைப்புகள் வருமாறு.

1. பெந்த லட்சணம் என்றொரு சிந்தனை
2. கலத்தல் என்றொரு சிந்தனை
3. அனாதி முத்தத்தன்மை என்றொரு சிந்தனை
4. முப்பொருள் தன்மை என்றொரு சிந்தனை
5. நின்மல தரிசனம் என்றொரு சிந்தனை
6. மலச்செயல் என்றொரு சிந்தனை
7. கன்மத் தன்மை என்றொரு சிந்தனை

8. மாயைச் சிந்தனை என்றொரு சிந்தனை
9. பெத்தருக்கு மூன்று வினை முத்தருக்கு மூன்றுவினை என்றொரு சிந்தனை
10. கன்மம் அனாதி என்றொரு சிந்தனை
11. கன்மம் முந்துதல் மாயை முந்துதல் என்றொரு சிந்தனை
12. யோனி பேதம் என்றொரு சிந்தனை
13. அவத்தைத் தன்மை என்றொரு சிந்தனை
14. கலாதியில் திருவருள் விரவல் என்றொரு சிந்தனை
15: கேவல சகலம் என்றொரு சிந்திகள்.:
16. சிவஞானத்தால் சிவத்தை அறிதல் என்றொரு சிந்தனை
17. மலபரிபாகம் என்றொரு சிந்தனை
18. கன்ம பரிபாகம் என்றொரு சிந்தனை
19. இருவினை ஒப்பு என்றொரு சிந்தனை
20. சத்திநிபாதம் என்றொரு சிந்தனை
21. ஆசாரியார் எழுந்தருளுதல் என்றொரு சிந்தனை
22. ஐந்து பொருளும் வியாபகம் என்றொரு சிந்தனை
23. திருவருள் அறிவித்தல் என்றொரு சிந்தனை
24. ஆணவமலம் எல்லா உயிர்களையும் மறைத்தல் என்றொரு சிந்தனை
25. திருவருள் எல்லா உயிர்களுக்கும் இடம் கொடுத்தல் என்றொரு சிந்தனை
26. உயிர் நெக்குறாமை என்றொரு சிந்தனை
27. ஆத்மலட்சணம் என்றொரு சிந்தனை
28. சுத்த அவத்தை என்றொரு சிந்தனை
29. சிவஞானிக்குப் பிராத்துவம் இல்லை என்றொரு சிந்தனை
30. மெய்ப்பொருள், பொய்ப்பொருள், அழிபொருள் என்றொரு சிந்தனை
31. சிவத்துக்கு விகாரம் இல்லை என்றொரு சிந்தனை
32. அறிந்து பிரிந்தது என்றொரு சிந்தனை
33. திருவடித் தாமரை என்றொரு சிந்தனை
34. திருச்சிற்றம்பலம்

நூலின் இரண்டாம் பகுதியில் வரும் தலைப்புகள் வருமாறு

1. மலசேர்க்கை
2. செய்தியுள்ளன
3. கன்ம விருப்ப பந்தம்
4. மாயை விருப்புணர்ச்சி
5. பசு முதல்வனோ (ஆத்மா முதல்வனோ) சிவன் முதல்வனோ?
6. மலமயக்கம்
7. தனுபடைத்தல்
8. மலங்கழித்தல்
9. மலபரிபாகமாவது
10. சத்திநிபாதமாவது
11. இருவினை ஒப்பு
12. ஆசாரியார் சிந்தனை

13. மலம் நீங்கல்
14. சுவாநுபவ முதன்மை
15. பிறப்பு இறப்பு
16. பஞ்சகிருத்தியம் நித்தியம்
17. ஆத்மா கிருத்தியப்படுதல்
18. பதிமலங் கலத்தல்
19. நரக வேதனைச் சிவனுக்குண்டா?
20. ஆத்மா கிஞ்சுகனோ? சுதந்திர வீரனோ?
21. கெட்டு மோட்சமடைதல்
22. மூவகை நிறைவு
23. ஆத்ம ஞானத்துக்குக் கண் முதலிய உவமைகள்
24. பசு உடலைப் பற்றல்
25. சேர்ந்ததின் வண்ணம் சார்ந்ததின் வண்ணமாய் இருக்க மென்பதற்கு ஆகாசம் முதலிய உவமைகள்
26. பதிவியாபகம்
27. மலவியாபகம்
28. மாயை வியாபகம்
29. கன்ம வியாபகம்
30. அருளறிவித்தல்
31. மலமறைத்தல்
32. அரன்கன்மம் கொடுத்தல்
33. வினை வேறே கன்மம் வேறே
34. மூவகைக் கன்மமாவது
35. பிரார்த்துவ மறிதல்
36. ஆகாமியமாவது
37. சாதியாகிப் போகம் பிரார்த்துவ சொரூபம்
38. கன்மம் மாறல்
39. பிரார்த்துவம்
40. பஞ்சாட்சரம் என்றொரு சிந்தனை

# புடைமருதூர் மரபு

**1 பெந்தலட்சண மென்றொரு சிந்தனை:**

பெந்த லட்சணமாவதென்ன? தேகம் அநித்தியம்; அசேதனம்; உரூபம். உயிர் நித்தியம்; சேதனம்; அரூபம். நித்தியத்துக்கு அநித்தியம் பகை. இப்படி பகையை உறவென்று கொள்ளுவானேன் என்றால் உறவினையும் அறியாது பகையையும் அறியாது உயிர்க்கு ஒரு நோயுண்டு. அதென்ன நோய்? ஆணவமல நோய். அதெப்போ உண்டானது? உயிருண்டானவன்றே உள்ளது. அந்த நோயைக் கர்த்தா அறிந்திரங்கிக் கன்மமாகிய மருந்தைப் பொசிப்பிக்கிறதற்குத் திறத்தைக் கொடுத்தது.

ஆத்மா பகையை உறவென்று கொண்டதனால் ஆத்மா கர்த்தாவோட இருக்கும்? ஆன்மாவும், கர்த்தாவும் ஒன்றாய் இருக்க ஆத்மா ஆணவ மலத்தோடே சேருவானேன்? சேரும். சேருமென்னில் ஆதித்தியப் பிரகாசம் இருக்கிற போது கண் இருளோடே சேருமோ? சேராது. ஆனால் ஆத்மாவும் கர்த்தாவும் ஒன்றாயிருக்க ஆத்மா ஆணவ மலத்தோடு சேருவானேன் என்றால் ஆத்மா அபக்குவத்தினாலே ஆணவ மலத்தோடே சேர்ந்தது, ஆனால் அபக்குவமும் ஆணவ மலமும் என்ன வகையாக இருக்கும். இராக்காலமும் இருளும் போலே இருக்கும். இராக் காலத்துக் கண் இருளோடே சேருகிறது போல அபக்குவ காலத்து ஆத்மா ஆணவ மலத்தோடே சேர்ந்தது. ஆணவம் அபக்குவமாய் இருந்து பக்குவமாகிற தன்மை அதெப்படிப் போல அரூபமாய் இருந்து விரிகிறது போல. இப்படி இருக்கிற ஆணவமலம் ஆத்மாவுக்கு இயற்கையோ? செயற்கையோ? என்றால் இயற்கை. பாலென்கிற குணிக்குக் குணம் வெள்ளை. கரி என்கிற குணிக்குக் குணம் கறுப்பு. குணியை விட்டு குணம் நீங்காது. குணியழியக் குணம் அழியும். இப்படிப் போல ஆத்மாவுக்கு இயற்கை என்றால் குணம் குணி வஸ்துவாக வேண்டுமே? குண குணி வஸ்து வானால் ஒரு காலமும் நீங்காதே. நீங்கியல்லோ மோட்சம் அடைகிறது. ஆனதினாலே இயற்கையும் அல்ல. ஆனால் செயற்கையே. செயற்கை என்றால் வெளுத்தப் ஆணவமலம் படவைக்கு அழுக்கேறுமே அதை வெளுக்க வெளுக்க அழுக்கே. ஒரு காலத்தையும் காட்டுமே. இப்படிப் போல ஆன்மாவுக்கு. ஆணவமலம் செயற்கை என்றால் மோட்சாதி பரியந்தம் நீங்கிறதும் வாறதும் போறதும் வாறதுமாய் இருக்கும். நீங்கியல்லோ மோட்சம் அடைகிறது. அதனாற் செயற்கையும் அல்ல. ஆனால் என்ன? ஆதி நீக்கத்தினாலே அனாதி செயற்கை. அதென்னவாய் இருக்கும். சகசமாய் இருக்கும். சகசத்துக்குப் பொருள் என்ன? சக வென்பது கூட, சம வென்றது உதித்தது. கூட உதித்தது நீங்குமோ? நீங்கும். அதெப்படிப் போல செம்பும் களிம்பும் கூட உதித்தது. செம்பை அற வைத்தவுடனே களிம்பு நீங்கும். இப்படிப் போல ஆத்மாவுக்கு அபக்குவ காலம் விட்டு பக்குவ காலத்திலே அபக்குவம் நீங்கி மோட்சமடையும். அதெப்படி இப்படிப் போல என்றறிக.* [* சைவ சித்தாந்த உரைநடை என்ற நூலில் சொற்களில் மிகுந்த வேறுபாடு உண்டு. (பக். 44-45)]

### 2. கலத்தல் என்றொரு சிந்தனை:

கலத்தலாவது என்ன? ஆத்மாவோடே கர்த்தா இன்று கலந்ததோ? அன்று கலந்ததோ? அன்றே கலந்தது. அதெப்படிப் போல. மரம் இளமை, ஈரம், அக்கினி. ஈரம் மிகுதியோ? அக்கினி மிகுதியோ? ஈரம் மிகுதி. ஈர மிகுதியை அக்கினியானது நாளிலே உலர்த்தி அக்கினி மேலிடும். அதெப்படிப் போல பட்ட கம்பை முரித்துக் கடைந்தவுடனே அக்கினி உண்டாம். இப்படிப் போல. மரத்தைப் போல ஆத்மா.. இளமையைப் போல அபக்குவம். ஈரத்தைப் போலே ஆணவமலம். அக்கினியைப் போலே திருவருள். திருவருளானது ஆத்மாவோடே மலமிகுதியினாலே அன்றே கலந்து மல பரிபாகப்படுத்தித் திருவருள் மேலிடும். அதெப்படி இப்படிப் போல என்றறிக.

**3. அனாதி முத்தத்தன்மை என்றொரு சிந்தனை:**

அனாதி முத்தத் தன்மையாவதென்ன? ஆத்மாவும் கர்த்தாவும் ஒன்றாக இருக்க ஆத்மா பஞ்சவிடயங்களிலே பற்றுவானேன்? பற்றுமென்றால் ஆத்மா ஆணவமல நோயினாலே பஞ்சவிடயங்களைப் பற்றும். அந்த ஆணவமலம் கர்த்தா வைப் பற்றாதோ? பற்றாது. அதெப்படிப் போல? அந்த ஆணவமல நோயினாலே, ஆத்மா பஞ்சவிடயங்களைப் பற்றுகிறதற்கும் அந்த ஆணவமலம் கர்த்தாவைப் பற்றாததற்கும் திட்டாந்தம் எப்படி என்னில் ஆதித்தன் சந்நிதானத்திலே படிகத்தை வைத்தால் படிகத்தினுடைய நிழலினாலே படிகம் பஞ்சவண்ணத்தையும் பற்றும். படிகத்தினுடைய நிழலும் ஆதித்தனைப் பற்றாது. அப்படிப் போல படிகத்தைப் போலே ஆத்மா. படிகத்தின் நிழலைப் போலே ஆணவமலம். பஞ்சவண்ணத்தைப் போலே பஞ்சவிடயம். இப்படிப்போல ஆதித்தன் சந்நிதானத்தைப் போலே கர்த்தா வினுடைய சந்நிதானம். கர்த்தாவினுடைய சந்நிதானத்திலே ஆத்மாவினுடைய ஆணவமல நோயினாலே பஞ்சவிடயங்களையும் பற்றும். ஆணவமல நோயின்றி ஆத்மா பஞ்சவிடயங்களையும் பற்றாது. அதெப்படி? இப்படிப்போல என்றறிக.

**4. முப்பொருள் என்றொரு சிந்தனை:**

முப்பொருள் தன்மையாவது என்ன? ஆத்மா வசப்படும் தன்மை. திருவருள் வசப்படாத் தன்மை. அதெப்படிப் போல? ஆத்மா பெத்த காலத்திலே ஆணவ மலத்தின் இடமாக வசப்படும். முத்திக் காலத்திலே திருவருளின் இடமாக வசப்படும். ஆணவமலம் ஆத்மாவைத் தன்வசப்படுத்தும். திருவருள் ஆணவ மலத்துக்கு வசப்படாது. இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் இராக் காலத்துக்குக் கண் இருளோடே சேரும். பகல் காலத்துக்குக் கண் ஒளியோடே சேரும். இருள் கண்ணைத் தன் வசப்படுத்தும். ஒளி இருளுக்கு வசப்படாது. அதெப்படி இப்படிப் போல என்றறிக.* [* முப்பொருள் தன்மை, கண் ஒளி இருள் என இரு பிரிவாக உ. வே. சா. நூலகச் சைவசித்தாந்த வினா - விடை நூலில்.. பதிப்பிக்கப்பட்டுள்ளது.]

**5. நின்மலதரிசனம் என்றொரு சிந்தனை:**

நின்மல தரிசனம் ஆவதென்ன? கலவாக் காட்சி கண்ணுக்கின்மையின் அருள் விரவலின்றி உயிர்க்கு அறிவில்லை என்கிறது. அதெப்படிப் போல? ஒளியிலே கலவாத கண்ணுக்குக் காட்சி இல்லாதது போல. அருள் விரவாத ஆத்மாவுக்கு அறிவில்லை. ஒளியிலே கலந்த கண்ணுக்குக் காட்சி உண்டானது போல அரூள் விரவின் ஆதமாவுக்கு அறிவுண்டு. அதெப்படி? இப்படிப் போல என்றறிக.

**6. மலச்செயல் என்றொரு சிந்தனை**

மலச்செயலாவது என்ன? ஆத்மாவை மயக்கிறதற்குச் செயலுண்டோ? இல் லையோ? உண்டு. அதெப்படிப் போல? கள்ளுண்டவனை† மயக்கிறது போலவும் விஷம், தீண்டினவனை மயக்கிறது போலவும் இப்படிப் போல என்றறிக.

[† உ. வே. சா. நூலில் கள்ளுக்குப் பதில் சாராயம் உள்ளது.]

**7. கன்மத்தன்மை என்றொரு சிந்தனை:**

கன்மத் தன்மை ஆவதென்ன? கன்மத்தை ஆத்மா விரும்பிற்றோ? கர்த்தா கொடுத்ததோ? ஆனால் ஆத்மா விரும்பிற்று. அதெப்படிப் போல? குழந்தை, பசி, பால், சங்கு, ,குழந்தைக்குப் பசி உண்டானவுடனே குழந்தையானது பாலிலே விரும்பி அழும். அந்த விருப்பத்தைத் தாயானவள் அறிந்திரங்கிச் சங்கிலே பாலைக் கறந்து கொடுத்துப் பசியைத் தீர்ப்பாள். இப்படிப்போல குழந்தையைப் போன்ற ஆத்மாவினுடனே கூடிப் பசியைப் போன்ற ஆணவமல நோயினாலே ஆத்மா கன்மத்தை விரும்பிற்று. குழந்தையைப் போலே ஆத்மா. பசியைப் போலே ஆணவ மலம். பாலைப் போலே கன்மா. சங்கைப் போலே தேகம். தாயைப் போன்ற கர்த்தா அறிந்திரங்கிச் சங்கைப் - போன்ற தேகத்தைக் கொடுத்துப் பாலைப் போன்ற கன்மத்தைப் பொசிப்பிக்கும். அதெப்படி இப்படிப் போல என்றறிக.‡

[‡ உ. வே. நூலில் இல்லாத பகுதி இதில் உண்டு.]

**8. மாயைச் சிந்தனை என்றொரு சிந்தனை:**

மாயைச் சிந்தனை யாவதென்ன? மாயா தேகத்தை ஆத்மா விரும்பிற்றோ? கர்த்தா கொடுத்ததோ? ஆத்மா விரும்பிற்று. அதெப்படிப் போல. குருடன், குருடு, கோல், இடம், கோல் கொடுப்போன். குருட்டை உடையவன் குருடன். குருடனுக்கு என்னத்தின் பேரில் விருப்பம்? கோலின் பேரிலே விருப்பம். அந்த விருப்பத்தை உரித்துடையவன் அறிந்திரங்கிக் கோலைக் கொடுத்துக் குருடனுக்கு. இச்சையான இடங்களிலே கூட்டிச் கொண்டே போவன்... இப்படிப் போல. குருடனைப் போலே ஆத்மா. குருட்டைப் போலே ஆணவமலம். கோலைப் போலே தேகம். இடத்தைப் போலே நரக சொர்க்கங்களிலே கூட்டிக் கொண்டு போய் இன்ப துன்பத்தைப் பொசிப்பிக்கும். அதெப்படி இப்படிப் போல என்றறிக.§

[§ உ. வே. சா நூலிற்கும் இதற்கும் வேறுபாடுண்டு.]

**9. பெத்தருக்கு மூன்று வினை முத்தருக்கு மூன்று வினை என்றொரு சிந்தனை:**

பெத்தர்கள், முத்தர்கள் வினையாவதென்ன? பெத்தனுக்கு ஆகாமியம், சஞ்சிதம், பிராத்துவமாய் இருக்கும். முத்தர்களுக்கு ஆகாமியம், சஞ்சிதம், பிராத்துவமாய் இருக்கும். இப்படிப் போல பெத்தனுக்கு ஆகாமியத்திலே ஏறுகிற வினைச் சஞ்சதத்திலே கட்டுப்பட்டு பிரார்த்துவம் பொசிக்கிறபோது யான் எனதென் னும் செருக்கற்றுக் கர்த்தாவினுடைய உதவியை நினைந்து முன்னிலையற்றும் பொசிக்கிறதினாலே திரும்பவும் ஆகாமியம் ஏறாது. இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் பயிரிடுகிறது போல ஆகாமியம். பயிர்ப்பலன் களஞ்சியத்திலே கட்டிவிக்கிறது போலச் சஞ்சிதம். கட்டி வைத்ததிலே சிறுகச்சிறுக எடுத்துத் தின்கிறது போல பிரார்த்துவம் இப்படிப் போல என்றறிக.¶

[¶ உ. வே. சா நூலக நூலில் இப்படி முயன்றறிக என்ற தலைப்பில் செய்திகள் உள்ளன. சொற்களில் மாறுபாடு உண்டு.]

**10. கன்மம் அனாதி என்றொரு சிந்தனை :**

கன்மம் அனாதியாவது என்ன? அளவிறந்த ஆத்மாக்களுக்கு அனாதியா இருக்கப்பட்ட கன்மம் ஒன்றிலே இருந்து அளவிறந்த கன்மம் உண்டாமோ? உண்டாம். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஒரு ஆலம் விதையிலே இருந்து அளவிறந்த கொம்புகளும் குழைகளும் பூக்களும் காய்களும் உண்டாகிறது போல என்றறிக.

**11. கன்மம் முந்துதல் மாயை முந்துதல் என்றொரு சிந்தனை:**

கன்மம் முந்துதல் மாயை முந்துதல் ஆவதென்ன? முந்துதல் மாயை முந்துதல் என்ற வினாவுக்கு விடை பனை முந்தினதோ? பனங்கொட்டை முந்தின தோ? ஆனால் பனங்கொட்டை முந்தினது. பனையில்லாமல் பனங்கொட்டை உண்டாமோ. ஆனால் பனை முந்தினது. ஆனால் பனங் கொட்டை இல்லாமல் பனை உண்டாகிறதும் இல்லை. இல்லாமல் கொட்டை உண்டாகிறதும் இல்லை. இப்படிப் போல கன்மம் உண்டானவன்றே மாயையும் உண்டு. மாயை உண்டான அன்றே கன்மமும் உண்டு. இப்படிப் போல என்றறிக.

**12. யோனி பேதம் என்றொரு சிந்தனை:**

யோனி பேதமாவது என்ன? எல்லா உயிர்களுக்கும் கர்த்தா ஒரு தனுவாய்க் கொடாமல் பலபல தனுவாய்க் கொடுப்பானேன்? ஆனால் ஆத்மா விரும்பினதைக் கொடுக்கும். ஆனால் எல்லா உயிர்களும் ஒரு நோயோடே சேர பலவிதம் உண்டாமோ? உண்டாம். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஒரு ஊரிலே பத்துப் பேருக்குச் சுரம் வந்தவுடனே அவர்களுக்கு வெவ்வேறு விருப்பம் உண்டாகிறது போல என்றறிக.

**13. அவத்தைத் தன்மை என்றொரு சிந்தனை**:

அவத்தைத் தன்மையாவது என்ன? கேவல அவத்தையிலே கிடக்கிற ஆத்மாக்கள் கருவி கரணங்கள் ஒன்றும் இல்லாமல் துன்ப மயமாய் அழுந்திக் கிடக்கும். இப்படிக் கிடக்கிற காலத்திலே தழற்பொறி நீங்கினாற் போலக் கலை என்கிற தத்துவம் ஆணவ மலத்தைச் சிறிது நீக்கிச் சகலத்தில் கொண்டு வந்து விடும். அப்போது சகலமாகிய தேகத்தைப் பற்றிப் பொய்யை மெய்யென்றும் மெய்யைப் பொய்யென்றும் செனன மரணத்திலே சுழன்று மாறுபாடாய்க் கருதி நிற்கும். அப்படி நிற்கிற காலத்திலே சிவ புண்ணிய மேலீட்டினாலே ஆத்மா சுத்தாவத்தைக்கு வந்து பொய்யைப் பொய் என்றும் மெய்யை மெய்யென்றும் சுபாவத்தைக் கருதி நிற்கும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் கேவலமாகிய இருளிலே கலந்த கண் ஒன்றும் தெரியாமல் கிடக்கும். விளக்கு வந்தவுடனே இருள்

நீங்கும். ஆதித்தப் பிரகாசத்திலே கண் மாசறு காட்சி யாகக் காண்கிறது போல என்றறிக,

**14. கலாதியில் திருவருள் விரவல் என்றொரு சிந்தனை!**

கலாதியில் திருவருள் விரவல் ஆவதென்ன? திருவருளானது கலாதி என்கிற தத்துவத்திலே விரவி ஆத்மாவுக்குச் சிறுகச் சிறுக அறிவைக் கொடுக்கும். நிரம்ப அறிவைக் கொடுத்தால், .ஆகாதோ? ஆத்மாவுக்கு ஒன்றும் தெரியாது போம். இதற் குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஒரு கண்ணுக்கு ஒளி மிகுந்தவுடனே வெள் ளெழுத்துண்டாம். அப்போது கண்ணாடி வைத்தால் ஒளியானது கண்ணாடி யிலே செறிந்து சிறுகச் சிறுக ஒளியை விடும். அப்போது கண் காணும். இப்படிப் போல .கண்ணைப் போல ஆத்மா. ஒளியைப் போலே திருவருள். கண்ணாடியைப் போலே கலாதி. எழுத்தைப் போலே திரிபதார்த்த உண்மை. அதெப்படி? இப்படிப்போல என்ற றிக.

**15. கேவல சகலமென்றொரு சிந்தனை:**

கேவல சகலமாவது என்ன? பெத்தனுக்குக் கேவலம் உண்டு. சகலமும் உண்டு. பெத்தன் கேவலத்திலே கிடக்கிற போது ஒரு பொசிப்பும் இல்லாமல் கிடப்பன். சகலத்திலே வந்தபோது பாலும் சாதமும் பொசிக்கிற போது இன்பம். ஆச்சுதே. ஆனால் கேவலமும் சகலமும் ஒன்றென்று சொல்லப் படுமோ? சொல்லலாம். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் குருடன் நித்திரை பண்ணுகிறபோது இருள் மயமாய்க் கிடப்பன். விழித்து நடக்கிறபோது முட்டு முழங்கால் பெருகிற்றது போல என்றறிக.

**16. சிவஞானத்தால் சிவத்தை அறிதல் என்றொரு சிந்தனை:**

சிவஞானத்தை அறிதல் எப்படியென்னில் ஆதித்தப் பிரகாசத்தினாலே கண் ஆதித்தனைக் காணுகிறது போல என்றறிக.

**17. மலபரிபாகம் என்றொரு. சிந்தனை:**

மலபரிபாகம் ஆவதென்ன? ஆத்மாக்களுக்குத் தேகாதி பிரபஞ்சம் எல்லாம் பொய்யென்று கண்டு ஆசாரியார் சந்நிதானத்திலே போய் ஞானத்தை விரும்பிக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டையைப் பொருந்தி இருக்கிறது போல என்றறிக.

**18. கன்ம பரிபாகம் என்றொரு சிந்தனை:**

கன்மம் பரிபாகம் ஆவதென்ன? கன்ம பரிபாகம் பிறந்த ஆத்மாக்கள் எப்படி யிருக்குமானால் ஞானத்திலேயும் விருப்புற்று உலகத்திலேயும் விருப்புற்று கிரி யைத் தொழிலிலும் வழுவாமல் சென்று வருவானென்றறிக.

**19. இருவினை யொப்பு என்றொரு சிந்தனை:**

இருவினை ஒப்பாவதென்ன? ஆத்மா பசு புண்ணியத்தையும் புத்தி, பூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் செய்யும். பசுத் துரோகத்தையும் புத்தி. பூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் செய்யும். சிவத்துரோகத்தையும் புத்தி பூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் செய்யும். இப்படி ஒன்றுக் கொன்று கூடியும் குறைந்தும் இருந்தால் இருவினையுஞ் சமன் பிறக்கிற காலம் எப்போது? இதற்குள்ளே ஆத்மா சிவ புண்ணியத்தையும் புத்தி பூர்வமாகவும் அபுத்தி பூர்வமாகவும் செய்யும். அந்தப் புண்ணியம் மேலிட்டவுடனே இருவினையும் சமனொத்துத் தள்ளிவிடும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஒரூ. ஊரிலே இரண்டு பாளையக்காரர் ஒன்றுக் கொன்று விரோதமாய்ச் சீர்மையெல்லாம் கொள்ளையிட்டுத் தீயும் கொளுத்தி குடிபடைக்கு இடுக்கண் பண்ணிக்கொண்டு இருந்தார்கள். அப்படி இருக்கிறபோது சீர்மைக்கு நல்லராசா வந்தவுடனே பாளையக்காரர் குறும்புகளையெல்லாம் ஒடுக்க அவரவர் இச்சையிலே ஓடுங்கி இருந்தார்கள். இப்படிப்போல பாளையக்காரரைப் போலே புண்ணியம், பசுத்துரோகம், சிவத்துரோகம். குடிபடையைப் போலே ஆத்மா.. ராசாவைப் போலே சிவ புண்ணியம். அதெப்படி இப்படிப் போல என்றறிக.*

[* நூல் எழுதப்பட்ட காலத்தில் பாளையக்காரர்கள் நிர்வாகத்தில் தமிழகம் இருந்தது. பாளையக்காரர்களால் மக்களுக்கு இடையூறே மிகுதி என்ற விபரத்தை இங்கே காண் கிறோம்.]

**20. சத்திநிபாதம் என்றொரு சிந்தனை:**

சத்திநி பாதம் ஆவதென்ன? சத்திநிபாதம் பிறந்த ஆத்மாக்களுக்குத் திருவருள் விளங்கித் தோன்றும். சத்திநி பாதம் பிறவாத ஆத்மாக்களுக்குத் திருவருள் விளங்காமல் மறையும் என்றறிக.

**21. ஆசாரியார் எழுந்தருளுதல் என்றொரு சிந்தனை:**

ஆசாரியார் எழுந்தருளுதல் ஆவதென்ன? சிஷ்யனுக்கு ஆசாரியார் மலபரிபாகமாகிறதற்கு முன்னமே எழுந்தருளுமோ? மலபரிபாகமானதின் பின் எழுந்தருளுமோ? மலபரிபாகம் ஆவதற்கு முன்னமே எழுந்தருளுமானால் எல்லா உயிர்களையும் ரட்சிக்க வேண்டுமே. ஆனால் மலபரிபாகம் ஆனதின் பின்பு எழுந்தருளும் என்றால் உடனே சிஷ்யனுக்கு மோட்சமாச்சுதே. ஆசாரியார் வேண்டுவதில்லையே. மலபரிபாகமானாலும் அவன் தானே திரிபதார்த்த உண்மையை அறியமாட்டானே!. † ஆனதினாலே ஆசாரியார் எழுந்தருளித் திரிபதார்த்த உண்மையை அறிவித்துப் பாததாமரையைச் சேர்ப்பிக்கும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் பிறவியிலே படலை மறைத்த கண்ணை வயித்தியன் வந்து உரித்தவுடனே கண் தானே பண்ட பதார்த்தங்களைக் காண மாட்டாது. அந்தக் கண்ணுக்கு ஆதித்தன் காட்டுகிறது போல ஞானாசிரியர் வந்து அறிவிக்கிற தென்றறிக.

[† திரிபதார்த்தம் பதி, பசு, பாசம் இனி ஆணவம், கன்மம் மாயையுமாகும்.]

**22. ஐந்து பொருளும் வியாபகம் என்றொரு சிந்தனை:**

ஐந்து பொருளும் வியாபகமாவது என்ன? கர்த்தா, ஆத்மா, ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் ஆக ஐந்து பொருளும் வியாபகம்‡ என்றறிக.

[‡ வியாபகம் - எங்கும் பரவியிருத்தல்.]

**23. திருவருள் அறிவித்தல் என்றொரு சிந்தனை**

திருவருள் அறிவித்தலாவதென்ன? திருவருளானது எல்லா உயிர்களுக்கும் உயிருக்குயிரா இருந்து அறிவிக்கும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் அபக்குவ காலத்திலே அப்பிரகாசமாயும் பக்குவ காலத்திலே பிரகாசமாகியும் இது தன்மை எப்படியென்னில் ஆதித்தப் பிரகாசம் எல்லாக் கண்களுக்கும் காட்டுகிறது போல என்றறிக.

**24. ஆணவமலம் எல்லா உயிர்களையும் மறைத்தல் என்றொரு சிந்தனை:**

ஆணவமலம் எல்லா உயிர்களையும் மறைத்தலாவதென்ன? தன்னிடத்திலே சேர்ந்த ஆத்மாக்களை இருள் மறைக்கிறது போல. இதற்குத் திட்டாந்தம் இருளானது உலகம் எங்கும் தோன்றி மறைக்கிறது போல என்றறிக.

**25. திருவருள் எல்லா உயிர்களுக்கும் இடம் கொடுத்தல் என்றொரு சிந்தனை :**

திருவருள் எல்லா உயிர்களுக்கும் இடம் கொடுத்து ரட்சிக்கிறது எப்படியென்னில்? திருவருளானது எல்லா உயிர்களுக்கும் உயிருக்குயிராக இடங்கொடுக்கிறது போல. இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஆதித்தப் பிரகாசம் எல்லாக் கண்களுக்கும் இடம் கொடுக்கிறது போல என்றறிக.

**26. உயிர்நெருக்குறாமை என்றொரு சிந்தனை:**

உயிர் நெருக்குறாமை ஆவதென்ன? எல்லா உயிர்களும் வியாபகமாய் இருந்தால் ஒன்றுக்கொன்று நெருக்கப் படாதோ? இதற்குத் திட்டாந்தம் எப்படி யென்னில் இருக்கிற நட்சத்திரங்கள் பலவிதமாய் இருந்தாலும் நட்சத்திரத்தின் பிரகாசம் ஒன்றாய் இருக்கிறது.

**27. ஆத்மலட்சணம் என்றொரு சிந்தனை:**

ஆத்மலட்சணம் ஆவதென்ன? ஆத்மா வியாபகமோ? ஏக தேசமோ? ஏகதேசம். ஏகதேசமானால் அழிந்துபோமே? ஆனால் வியாபகம். அதெப்படியென்னில் உடலை உயிர் சுமக்குதோ? உடல் உயிரைச் சுமக்குதோ? உயிரை உடல் சுமக்குது. எங்கும் வியாபகமாய் இருக்கிற உயிரை உடல் சுமக்குதேயானால் கொட்டைப்

பெட்டிபோலே சுமந்துகொண்டு திரியுமோ? ஆனாலென்ன? திருவருளானது உயிராய் உணர்வாய்த் தேகமாய்ச் கரணமாய்ப் புவனமாய்ப் போகமாய் எல்லாமாய் இருந்து நடத்தி விக்கும். அதெப்படி யென்னில் ஆத்மா பதிந்து கொண்டு இன்ப துன்பத்தைப் பொசிக்கும். இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் சமுத்திரத்திலே பரவன் தோணியைத் துடுப்பிட்டுத் தள்ளிக் கொண்டே போவன். அது எப்படிப்போல? சமுத்திரத்தைப் போலே ஆத்மா. பரவனைப் போலே திருவருள் தோணியை போலே தேகம் துடுப்பைப் போலே கருவிகரணாதிகள்!§ அதெப்படி? இப்படிப் போல என்றறிக.

[§ *பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்.* - என்பார் வள்ளுவர்.]

**28. சுத்த அவத்தை என்றொரு சிந்தனை:**

சுத்த அவத்தையாவது என்ன? தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆத்ம ரூபம், ஆத்ம தரிசனம், ஆத்ம சுத்தி சிவரூபம், சிவதரிசனம், சிவபோகம், சிவயோகம், இந்தப் பத்தும் நின்மலசாக்கிரம், நின்மல சொற்பனம். நின்மல சுழுத்தி, நின்மல துரியம், நின்மலதுரியாதீதம் ஆக 5. ஐஞ்சவத்தையிலடங்கும் முறைமை யென்னில் தத்துவ ரூபமாவது தத்துவத்தினுடைய தொழில்கள் எல்லாம் அழிந்து அதனுடைய செயலாய் நிற்கை தத்துவரூபம். அப்போது ஆசாரியார் தத்துவத்துக்குச் செயல் இல்லை. உன்னுடைய செயலே செயலென்று அறிந்தவுடனே அப்படியோ என்று தத்துவம் சடமென்று அறிந்து நிற்கை தத்துவ தரிசனம். அப்போது ஆசாரியார் தத்துவத்துக்குச் செயலே செயலென்று அறிவித்தவுடனே தானென்று முன்னிலைப் பட்டு நிற்கை. ஆத்மரூபத்திலே தத்துவசுத்தி நின்மலசாக்கிரகம் அப்போது ஆசாரியார் உனக்கே செயலே இல்லை. உனக்கு மேலே திருவருள் உண்டு. அந்தத் திருவருள் சகளம் என்றறிந்தவுடனே திருவருள் செயலென்று அறிந்து நிற்கை. சிவரூபத்திலே அறம் தரிசனம் நின்மலம் சொற்பனம். அப்போது உனக்குச் செயலே இல்லை. திருவருள் செயலே செயலென்று அறிவித்தவுடனே அப்படியோ என்று திருவருள் செயலாய் கண்டு நிற்கை சிவதரிசனத்திலே ஆத்ம சுத்தி இது நின்மல சுழுத்தி. அப்போது ஆசாரியார் திருவருளுக்கு மேலே ஒருசிவம் உண்டு. ஆனந்தமாய் இருக்கும். அதை உன்னாலே பொசிக்கக்கூடாதே. திருவருளிலே அழுந்தியதுவாய் நிற்க சிவயோகம். நின்மலதுரியம் அப்படியழுந்தி யதுவாய் நிற்கிற போது திருவருளானது ஆத்மாவுக்கு ஆனந்தத்தைப் பொசிப்பிக்கும். அங்ஙனம் ஆத்மாவுக்கு ஒன்றும் தெரியாமல் இன்ப வடிவாய் திகைத்து நிற்கை சிவயோகம். இது நின்மல துரியாதீதம், இப்படிபோல என்றறிக.

**29. சிவஞானிக்குப் பிரார்த்துவம் இல்லை என்றொரு சிந்தனை:**

சிவஞானிக்குப் பிரார்த்துவம் இல்லை ஆவதென்ன? ஆனால் சிவஞானிக்குப் பிரார்த்துவம் உண்டோ? இல்லையோ? உண்டு. உண்டெனவானால் அவர்களுக்கு உண்டி. உறக்கம், பயம், கர்த்தாவினுடைய எல்லினாலே பொசிக்கிறதற்குப் பிரார்த் துவமில்லை. இதற்குத் திட்டாந்தம் எப்படி யென்னில் ஒரு ஊரிலே மணியக்காரன்

இடத்திலே சேவிக்கிற சேவகன் அவன் செய்கிற அக்கிருத்திய, கிருத்தியங்கள் எல்லாம் மணியக்காரனைச் சாருகிறது போல என்றறிக.

**30. மெய்ப்பொருள். பொய்ப்பொருள். அழிபொருள் என்றொரு சிந்தனை :**

மெய்ப்பொருள் ஆவது கர்த்தா, ஆத்மா, ஆணவமலம், கன்ம மலம், மாயாமலம் இந்த ஐந்து பொருளும் மெய்ப்பொருள். பொய்ப் பொருளாவது ஆகாசப்பூ, முயற்கோடு. இது பொய்ப் பொருள். அழி பொருளாவதென்ன? தேகாதி பிரபஞ்சம் எல்லாம் அழிபொருள் என்றறிக.

**31. சிவத்துக்கு விகாரமில்லை என்றொரு சிந்தனை:**

சிவத்துக்கு விகாரமில்லை யாவதென்ன? எல்லா உயிர்களும் சிவத்துக்கு ள்ளே கலந்து இருக்க அந்த உயிர்கள் படுகிற இன்ப துன்பம் சிவத்துக்குச் சாருமோ? சாராது.. இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் ஒருவன் தேகத்திலே வாழுகிற புழுக்கள் இன்பதுன்பம் படுகிறபோது அந்த இன்ப துன்பமெல்லாம் தேகத்துக்குடை யவனுக்கு இல்லாதது போல என்றறிக.

**32. அறிந்து பிரிந்தது என்றொரு சிந்தனை:**

அறிந்து பிரிந்ததாவது என்ன? ஆணவம், கன்மம், மாயை இந்த மூன்று மலத்தினுடைய செய்தியும் ஆசான் அனுக்கிரகத்தினாலே அறிந்தவுடனே அந்த மும்மலமும் ஆத்மாவை விட்டுப் பிரிந்து விடும். இதற்குத் திட்டாந்தம் எப்படியெ ன்னில் வீட்டிலே கள்வன் வந்து கன்னக்கோல் வைத்துத் திருடிக் கொண்டு போகிற காலத்திலே ஒருநாள் வீட்டுக்குடையவன் அவனைக் கள்வனென்று அறிந்தவுடனே அவன் அந்த வீட்டிலே நில்லாமல் ஓடிப் போவது போல என்றறிக.

**33. திருவடித் தாமரை என்றொரு சிந்தனை**

திருவடித் தாமரை யாவதென்ன? கர்த்தாவுக்குக் குணமாகிய திருவருளே திருவடித் தாமரை என்றால் இதற்குத் திட்டாந்தம் எப்படியென்னில் நிலவு உதிக்கிறபோது நிலவினுடைய குணமாகிய ஒளியை உலகங்கள் எல்லாம் நிலவு கால் வீசித்தென்று சொல்லுகிறது போல என்றறிக.

**34. திருச்சிற்றம்பலம்**

ஏகன் என்பது இறைவன். அனேகன் என்பது ஆத்மா இருள் என்பது ஆணவ மலம். கருமம் என்பது கன்ம மலம். மாயையிரண்டென்பது சுத்த மாயையும் அசுத்த மாயையுமாம். ஆக இவை ஆறாதியில் என்பது. இவை ஆறும் ஒரு காலத்திலே உண்டாகாமல் அனவரதம் உள்ள பொருள்களாம். இவ்வாறு பொருளையும் திரிபதார் த்தத்தில் அடக்குதலுமாம். இதில் தான் தனி ஏகனாகிய சிவனுக்கு எண்ணிறந்த தன்னியல்புக் குணமுண்டு. அதில் இரண்டு குணம் சொல்லுகிறோம். அதேதென்னில்

ஒருவரும் அறியாமல் தானே அறிகிற குணமொன்று. ஆத்மாக்களுக்கு அறிவிக்கிற குணமொன்று. ஆக இரண்டு குணத்துக்குஞ் சுருதி சித்தியார் அஞ்ஞாம் சூத்திரத்திலே,

"பொறிபுலன் கரணமெல்லாம்" என்ற விருத்தத்தில்
அறிதரும் சிவனே அறிந்தறிவித்து நிற்பன் என்றது.

இனி ஆத்மாவுக்கு எண்ணிறந்த தன்னியல்புக் குணமுண்டு. அதிலே இரண்டு குணம் சொல்லுகிறோம். அதே தென்னில் அறிவித்தால் அறிகிற குணமொன்று. பிறருக்கு அறிவிக்க மாட்டாத குணமொன்று. ஆக இரண்டு குணத்துக்கும் சுருதி சிவஞான போதத்தில் எட்டாம் சூத்திரத்தில் 'அறிவிக்கவன்றி அறியாவுளங்கள்' என்றது.

இனி ஆணவ மலத்துக்கு எண்ணிறந்த தன்னியல்புக் குணமுண்டு. அதில் இரண்டு குணம் சொல்லுகிறோம். அதே தென்னில் ஆத்மாக்களுக்கு ஆத்மாவையும் அன்னியப் பொருளாகிய அருளையும் மறைவிக்கிற குணமொன்று. ஆத்மா இல்லாத தேகத்திலேயும் அன்னிய பொருளிலேயும் விருப்பத்தைக் கொடுக்கிற குணமொன்று. ஆகச் சிவப்பிரகாசத்தில்,

“*அந்நியமானவை உணர்த்தி அநனியமாய் நிறைந்தறிவு*
*அறியாமையினாலும்*” என்றது.

கன்மத்துக்கு எண்ணிறந்த தன்னியல்புக் குணமுண்டு. அதில் இரண்டு குணம் சொல்லுகிறோம். அதேதென்னில் ஆத்மா ஆணவ மலத்தைப் பொருந்தினால் மலமாய்ப் போற குண மொன்று. அருளினிடமாகத் தன்மத்தைக் கூட்டி மோட்சத்தைப் பொருந்தினால் அருளாய்ப் போற குணமொன்று ஆக இரண்டு.

மாயைக்கு எண்ணிறந்த தன்னியல்புக் குணமுண்டு. அதில் இரண்டு குணம் சொல்லுகிறோம். அதேதென்னில் ஆத்மா ஆணவ மலத்தைப் பொருந்தினால் மலமாய்ப் போற குண மொன்று. அருளைப் பொருந்தினால் அருளாய்ப் போற குணமொன்று. சொன்ன கன்மம் இரண்டு. சொன்ன மாயை 2 ஆக நாலுக்கும் இக்குணம் இரண்டுக்கும் சுருதி சிவப்பிரகாச உண்மையில் 'மாயை மாமாயை' என்ற விருத்தத்தில் முழுவதும் ஆக இது தன்னியல்புக் குணசேர் இயல்பு.

ஆத்மா ஆதியிலே மலத்திலே அழுந்தினதுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக் கொடுத்து அந்தச் செய்தியை கர்த்தா இரக்கத்தினாலே அறிந்து விருப்பத்துக் கேற்ற சரீரத்தைக் கொடுத்து அந்தத் தநு விடமாக விரும்பிய கன்மங்களைக் கூட்டிப் பொசிப்பித்தார். இஃது ஆதியிலே பிரபஞ்சம் உண்டான முறைமை. இது பொது இயல்பு.

**1. மல சேர்க்கை**

ஆத்மாவுக்கு ஆணவமலம் இயற்கையோ? செயற்கையோ? இயற்கையானால் பாலுக்கு வெளுப்பும் கரிக்குக் கறுப்பும் ஒரு காலத்திலும் நீங்காதது போல ஆத்மாவுக்கு ஒரு காலமும் ஆணவமலம் விட்டு நீங்காது. செயற்கையானால் வெள்ளைப்புடவையிலே அழுக்கேறுகிறது போல மோட்சத்திலே ஆணவமலம் வந்து பொருந்தும். ஆகையினாலே இயற்கையுமன்று. செயற்கையுமன்று. சித்தாந் தம் எப்படியென்னில் நெல்லுக்குமியும் செம்புக்குக்களிம்பும் போல அனாதி செயற் கை. அனாதி சையோகமென்பதுமாம். 'நெல்லுக்குமியும் நிகழ்செம்பினில்' என்பது சுருதி.

ஆத்மாவுக்கு ஆணவமலத்தைக் கர்த்தா கூட்டினாரோ மலம் தான் வந்து பிடித்ததோ? கர்த்தா கூட்டினாரானால் கொள்கைக் குற்றமுண்டு. நின்மலராய்ச் சர்வ பூரண அனுக்கிரகராய் இருக்கிற படியினாலே கர்த்தா கூட்டின தன்று. ஆணவ மலம் சடமாகையினாலே மலந்தானே வந்து பிடிக்க மாட்டாது. இனிச் சித்தாந்தம் எப்படியென்னில் ஆத்மாவே ஆணவ மலத்தினால் அழுந்தும்.

**2. செய்தியுள்ளன:**

ஆத்மாவுக்குக் செய்தியுண்டோ? இல்லையோவென்னில் ஆத்மா சுதந்திர வீனனாகையால் சிவனுக்கே செய்தியல்லாமல் ஆத்மாவுக்குச் செய்தியில்லை யென்றால் ஆத்மா நரக தண்டனை வேண்டுவதில்லை. வேதாகமங்களில் விதி விலக்கும் சொல்ல வேண்டுவதில்லை. வேத ஆகமங்களில் நரக தண்டனையும் விதி விலக்கும் சொல்லி இருப்பதனாலே ஆத்மாவுக்குச் செய்தியுண்டு. இதற்குச் சுருதி சித்தியாரில்

'அருளினால் உரைத்த நூலின் வழிவராத தன்மம் செய்யின்' என்றது.

**3. கன்ம விருப்ப பந்தம்:**

ஆத்மாவுக்குக் கன்மத்திலே உண்டாகிய விருப்பம் சிவன் கொடுத்த விருப்ப மோ? ஆத்மாவுக்குள்ள விருப்பமோ? சிவன் கொடுத்த விருப்பமென்றால் தீவினை செய்தாய் நரகத்திலே போட்டு தண்டிக்க வேண்டுவதில்லை. அப்படி தண்டிக்கையி னாலே சிவன் கொடுத்த விருப்பமன்று. இனி உண்மை எப்படியென்னில்? ஆணவ மலமே ஆத்மாவுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக் கொடுத்தது ஆணவ மலம் சடமாகையினாலே. ஆணவமலத்துக்குச் செயலில்லை. விஷம்-கள்-பாஷாணம் காற்று, தீ, நீர் முதலான சடங்களுக்குச் செய்திவுண்டானாற் போல மலமாகிய சடத்துக்குச் செய்தியுண்டு. ஆகையினாலே ஆணவ மலமே ஆத்மாவுக்குக் கன்மத்தில் விருப்பத்தைக் கொடுத்தது.

விருப்பத்தைக் கொடுத்த ஆணவ மலமும் ஆத்மாவுக்குக் கன்மத்தை அறிந்து எடுக்க மாட்டாது. விரும்பின ஆத்மாவும் கன்மத்தை அறிந்து எடுத்து பொசிக்க

மாட்டாது. விரும்பப்பட்ட கன்மமும் ஆத்மாவை அறிந்து வந்து பொருந்த மாட்டாது. இந்தச் செய்தியைக் கர்த்தா அறிந்து இரக்கத்தினாலே விருப்பத்துக் கேற்ற சரீரத்தைக் கொடுத்து அந்தச் சரீரத்தினிடமாகக் கன்மங்களைக் கூட்டிப் பொசிப்பிப்பார்.

ஆணவ மலமே ஆத்மாவுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக் கொடுத்ததென் பதற்குக் குழந்தை, பிணியாளன் முதலிய உவமைகள் வருமாறு.

குழந்தைக்குப் பாலிலே உண்டாகிய விருப்பம் தாய் கொடுத்த விருப்பமோ? தாய் கொடுத்த விருப்பமானால் தாய் பால் கொடுத்த போதெல்லாம் குடிக்க வேண்டும். அப்படிக் குடியாத படியினாலே தாய் கொடுத்த விருப்பமன்று. குழந்தைக் குள்ள விருப்பமானால் இடைவிடாமல் குடிக்க வேண்டும். அப்படிக் குடியாதபடி யினாலே குழந்தைக்குள்ள் விருப்பமுமன்று. இனி உண்மை எப்படியென்னில்? பசி குழந்தைக்குப் பாலிலே விருப்பத்தைக் கொடுத்தது. விருப்பத்தைக் கொடுத்த பசியும் குழந்தைக்குப் பாலை அறிந்து எடுத்துக் கொடுக்க மாட்டாது. விரும்பின குழந்தை யும் பாலை அறிந்து எடுத்துக் குடிக்க மாட்டாது. விரும்பப்பட்ட பாலும் குழந்தை வாயை அறிந்து புகுத மாட்டாது. இந்தச் செய்தியைத் தாயானாவள் அறிந்து இரக்கத்தினாலே பாலைப் பாலாடையிலே விட்டுக் கொடுப்பாள். குழந்தை 1, பசி 1, பால் 1, தாய் 1, பாலாடை 1 ஆக 5. குழந்தையைப் போலும் ஆத்மா. பசியைப் போலும் ஆணவமலம். பாலைப் போலும் கன்மம். தாயைப் போலும் சிவன். பாலாடை போலும் சரீரம் ஆக 5.

பிணியாளனுக்கு மருந்திலே உண்டாகிய விருப்பம் பரிகாரி கொடுத்த விருப்பமோ? பிணியாளனுக்குள்ள விருப்பமோ? பரிகாரி கொடுத்த விருப்பமானால் பரிகாரி மருந்து கொடுத்த நேரமெல்லாம் குடிக்கவேண்டும். அப்படிக் குடியாதபடி யினாலே பரிகாரி கொடுத்த விருப்பமன்று. பிணியாளனுக்குள்ள விருப்பமானால் மருந்தை இடைவிடாமல் குடிக்க வேண்டும். அப்படிக் குடியாத படியினாலே பிணியாளனுக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மை எப்படியென்னில்? பிணியே பிணியாளனுக்கு மருந்திலே விருப்பத்தைக் கொடுத்தது. விருப்பத்தைக் கொடுத்த பிணியும் பிணியாளனுக்கு மருந்தை அறிந்தெடுத்துக் கொடுக்க மாட்டாது. விரும்பின பிணியாளனும் மருந்தை அறிந்தெடுத்துக் கொள்ளமாட்டான் விரும்பப்பட்ட மருந்தும் பிணியாளனை அறிந்து எடுத்து கொடுக்க மாட்டாது. இந்தச் செய்தியைப் பரிகாரி அறிந்து இரக்கத்தினாலே மருந்தை ஒரு பாத்திரத்திலே விட்டு கொடுப்பான். பிணி 1, பிணியாளன் 1, மருந்து 1, பாத்திரம் 1, பரிகாரி 1, ஆக 5. பிணியைப் போலும் ஆணவமலம். பிணியாளனைப் போலும் ஆத்மா. மருந்தைப் போலும் கன்மம். பரிகாரி போலும் சிவன். பாத்திரத்தைப் போலும் சரீரம்.

**4. மாயை விருப்புணர்ச்சி** :

மாயை விருப்புணர்ச்சி ஆத்மாவுக்கு மாயா சரீரத்திலே உண்டாகிய விருப்பம் சிவன் கொடுத்த விருப்பமோ? ஆத்மாவுக்குள்ள விருப்பமோ? சிவன் கொடுத்த விருப்பமானால் சிவன் சரீரம் கொடுத்தபோதெல்லாம் சரீரத்தைப் பற்றிக் கொண்டே

இருக்க வேண்டும். அப்படி பற்றாதபடியினாலே சிவன் கொடுத்த விருப்பமுமன்று. ஆத்மாவுக்குள்ள விருப்பமானால் சரீரத்தை மோட்சத்திலும் இடைவிடாமல் பற்றிக் கொண்டே இருக்க வேண்டும். அப்படி பற்றாத படியினாலே ஆத்மாவுக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மை எப்படியென்னில்? மலமே ஆத்மாவுக்கு சரீரத்திலே விருப்பத்தைக் கொடுத்தது. விருப்பத்தைக் கொடுத்த ஆத்மாவுக்கு மாயா சரீரத்தை அறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. இந்தச் செய்தியைக் கர்த்தா அறிந்து இரக்கத் தினாலே விருப்பத்துக்கேற்ற சரீரத்தைக் கொடுத்து விரும்பிய வனங்களிலே வைத்து விரும்பிய கன்மங்களைக் கூட்டி பொசிப்பிப்பர். இதற்குவமை குருடனுக்குக் கோலிலே உண்டாகிய விருப்பம். கோல் கொடுத்திழுக்கிறவன் கொடுத்த விருப்பமோ? குருடனுக்குள்ள விருப்பமோ? கோல் கொடுத்திழுக்கிறவன் கொடுத்த விருப்பமானால் அவன் கோல் கொடுத்த போதெல்லாம் கோலைப் பிடிக்க வேண் டும். அப்படிப் பிடியாதபடியினாலே கோல்பிடித்திழுக்கிறவன் கொடுத்த விருப்பமு மன்று. குருடனுக்குள்ள விருப்பமானால் கோலை இடைவிடாமல் பிடித்துக் கொண் டேயிருக்க வேண்டும். அப்படிப் பிடியாத படியினாலே குருடனுக்குள்ள விருப்பமு மன்று. இனி உண்மை எப்படியென்னில்? குருடே குருடனுக்குக் கோலிலே விருப்பத் தைக் கொடுத்தது. விருப்பத்தைக் கொடுத்த குருடும் குருடனுக்குக் கோலை அறிந்து எடுத்துக் கொடுக்க மாட்டாது. விரும்பின குருடனும் கோலை அறிந்து எடுத்துக் கொள்ள மாட்டான் விரும்பப்பட்ட கோலும் குருடன் கையை அறிந்து வந்து பொரு ந்த மாட்டாது. இந்தச் செய்தியைக் குருடனுக்கு உண்மையாயுள்ளார்கள் அறிந்து இரக்கத்தினாலே கோலை எடுத்துக் கொடுத்து அவன் கொண்டு போய் விடச் சொன்ன விடங்களிலே கோலைப் பிடித்திழுத்துக் கொண்டு போய் விடுவார்கள் குருடன் 1 கோல் 1 குருடு 1 கோல்கொடுத்திழுக்கிறவன் 1 இடம் 1 ஆக 5. குருடனைப் போலும் ஆத்மா.. குருட்டைப் போலும் ஆணவமலம். கோலைப் போலும் சரீரம். கோல் கொடுத்திழுக்கிறவன் போலும் சிவன். இடங்களைப். போலும் புவனங்கள்.

#### 5. பசு முதல்வனோ? (ஆத்மா முதல்வனோ?) சிவன் முதல்வனோ?

சிவன் முதல்வனானால் ஆத்மாவுக்குத் தனுகரனாதியில் விருப்பமிருக்கை யிலே சிவன் மோட்சம் தருகிறோமென்றழைத்தால் அவர் அழைத்த வழி செல்ல வேண்டும். அப்படி வாராத படியினாலே சிவன் முதல்வனல்லன். ஆத்மா விரும்பின படிக்குத் தேகாதி பிரபஞ்சத்தைக் கொடுக்கிறவன். இதற்குவமை குருடன் முதல்வ னோ கோல் கொடுத்து இழுக்கிறவன் முதல்வனோ? கோல் கொடுத்திழுக்கிறவன் முதல்வனானால் குருடனுக்குக் குளக்கரைக்குப் போக வேண்டும் என்று இச்சையிரு க்கையிலே கோல் கொடுத்திழுக்கிறவன் கோவிலுக்கு வாவென்றழைத்தால் வர வேண்டும். அப்படி வாராதபடியினாலே கோல் கொடுத்திழுக்கிறவன் முதல்வனல் லன். நினைந்தபடிக்குக் குளக்கரைக்குக் கொண்டு கொண்டு போய் விடுகையினாலே குருடனே முதல்வன்.¶

[¶ இங்குக் கூறப்படும் உவமை மேலும் ஆய்வு செய்தற்குரியதாகும்.]

**6. மல மயக்கம்:**

ஆணவமலம் மலசையோகத்தை விரும்பினவனை மயக்கும்; விரும்பாத வனை மயக்காது. இதற்குவமை ஒரு விடயனானவன் பரத்தை யோகத்தை விரும்பி னவிடத்து அவனை அவர்கள் மயக்குதல் போலும். சந்நியாசி விரும்பாதபடி யினாலே அவர்கள் மயக்காதது போலும்.

**7. தனு படைத்தல்:**

சிவன் ஆத்மாக்களுக்குச் சரீரம் படைக்குமிடத்துத் தம்முடைய நினைவின்படி படைப்பாரோ? தம்முடைய நினைவின்படி படைப்பாரானால், எல்லாம் ஒரு வடிவாகவே படைக்க வேண்டும். அப்படியல்லாமல் பல வடிவாகப் படைக்கிறபடியினாலே தம்முடைய நினைவின்படி படைப்பாரல்லர். ஆத்மாக்கள் நினைவின் படியே படைப்பார். இதற்குவமை குயவன் பாண்டங்களை வனையுமிடத்துத் தன் நினைவின்படி வனைவானோ? வாங்குகிறவன் நினைவின்படி வனைவானோ? தன்னுடைய -நினைவின் படி வனைவானேயானால் எல்லாம் ஒரு வடித்தாகவே வனைய வேண்டும். அப்படியல்லாமல் - பல வடித்தாய் வனைகிற படியினாலேயே தன்னுடைய நினைவின்படி வனைவானல்லன், வாங்குகிறவன் நினைவின்படியே வனைவான். குயவன் 1 மண் 1 பாண்டம் வாங்குகிறவன் 1 ஆக 4 குயவனைப் போலும் சிவன் மண்ணைப் போலும் மாயை. பாண்டத்தைப் போலும் சரீரம். வாங்குகிறவர்களைப் போலும் ஆத்மாக்கள். இதற்குச் சுருதி சித்தியாரில் காரிய காரணங்களென்றது'

**8. மலங்கழித்தல்:**

சிவனானவர் ஆத்மாவினிடத்திலே இருக்கிற ஆணவமலத்தை மாயா கருவிக ளையும் கன்மங்களையும் கூட்டிப் போக்குவார். இதற்குவமை; வண்ணானானவன் புடவையிலுள்ள அழுக்கை உவர் சாணியூட்டி போக்குகிறது போல. இதற்குச் 'செழுநவையறுவைசாணியுவர் செறிவித்தழுக்கை' என்பது. சுருதி

**9. மல பரிகாரமாவது:**

மலம் - ஆணவ மலம். பரி என்றது உபசர்க்கம். பாகம் திரிவு கெடுதலுமாம். பக்குவம் வந்த காலத்தில் மல சத்தியானது ஆத்மாவின் ஞானத்தை மறையாதிருத்தல்.

**10. சத்திநிபாதம்:**

சத்தி - சிவசத்தி - நி. என்றது உபசார்க்கம். பாதம் - விழுதல் பதிதலுமாம். மலம் நீங்கின உயிரிலே -சிவஞானம் விளங்கித் தோன்றுதல்.

**11. இருவினையொப்பு:**

இருவினை ஒப்பாவது உலகத்தார் திரணம் பதர் முதலானவற்றைப் போல பக்குவ ஆத்மா ஆனவன் நல்வினையிலும் தீவினையிலும் விருப்பும் வெறுப்பும் இன்றிக் காண்டல். எல்லாரும் விரும்பப்பட்ட பதார்த்தங்கள் பொன், வெள்ளி, செல்வம், பெண், பால், தயிர், நெய், சந்தனம். வெறுக்கப்பட்ட பதார்த்தங்கள் புலி, கரடி, பாம்பு, தேள், நட்டுவாக்காலி, தரித்திரம், வியாதி முதலாயின. விருப்பும் வெறுப்பும் ஒன்றில்லாத பதார்த்தங்கள் பதர், திரணம் முதலாயின. இருவினை ஒப்புக்கு இன்னமும் ஒரு உவமை வருமாறு. ஒருவன் வைப்பாட்டிக்கும்* குடியில் உள்ளாளுக்கும் சரியாக வேண்டிய ஆடை ஆபரணங்களும் வீடும் பொசிப்பும் கொடுத்து அவள் வீட்டிலே பதினைந்து நாளும் இவள் வீட்டிலே பதினைந்து நாளுமாக வாழ்ந்து வருகையில் இல்லற நூல் கேட்டு கற்புடைய மனைவியுடன் கூடியிருந்து இல்லறம் சேர வைப்பாட்டியை இகழ்ந்து அவள் மேலே முன்னொரு ஈ இருக்கப் பொறாதவன் அவளைப் பள்ளர் முதலியோர் பிடித்திழுத்து ஈர்த்த விடத்தும் விருப்பின்றி விட்டு நீங்கி இல்லாளோடும் கூடி இல்லறத்தன்மம் நெடுநாள் செய்து வருகையிலே துறவற நூலைக் கேட்டு துறவறம் மென்றறிந்து குடியில் உள்ள இல்லாளை வைப்பாட்டியைப் போலே கண்டு விட்டு நீங்கி அவ்விருவரையும் விருப்பு வெறுப்பின்றிக் காண்டல் போல ஒருவன் நெடுங்காலம் பாவமும் புண்ணியமும் செய்து வருகையில் அறநூல் கேட்டுப் பாவத்தைத் தீதென்றறிந்து விட்டு நீங்கி புண்ணியத்தை முக்கியமென்றறிந்து நெடுநாள் செய்து வருகையில் ஞான சாத்திரத்தைக் கேட்டு ஞானமே முக்கியமென்றறிந்து புண்ணிய மும் செனன மரணத்தைக் கருதலால் பாபத்தைப் போலத் தீங்கென்றறிருந்து விட்டு நீங்கி அவ்விரண்டினையும் விருப்பும் வெறுப்புமின்றிக் காண்டல்

[* வைப்பாட்டியைத் தற்போது சின்னவீடு என்கின்றனர். வள்ளுவர் 'இருள் சேர் இருவினை' என்று புண்ணிய பாவங்களைக் குறிப்பிடுவர் புண்ணியம் பொன் விலங்கு. பாவம் இரும்பு விலங்கு என்று அறிஞர் கூறுவர் மலபரிபாகம், சத்திநி பாதம் இருவினை ஒப்பு நூலின் முற்பகுதியிலும் உள்ளன.]

**12. ஆசாரியார் சிந்தனை:**

கர்த்தா ஆசாரிய மூர்த்தமாகித் திருமேனி கொள்ளுதல் வருமாறு: "பிறவா முதல்வன் பிறந்தெ"ன்றும் "உணர்வாய் நின்ற ஞானக்கூத்தன் ஒருமூர்த்தி கொடுகுறுகி" என்றும் "முன்ன்மீட்டிய தவத்தினாலே இறையருள் உருவாய் வந்து" என்றும் இப்படி சாத்திரங்களிலே கர்த்தா தானே ஆசாரிய மூர்த்தமாகித் திருமேனி கொண்டு வருவர் என்பதற்கு. "மாயா வொருவன் மாயா வுருவினை-னேய்ந் தவரெம்மனோரே" என்று வாதி தடை சொன்னான்யென்னில் "திருவருளே உண்மை வடிவாகிய ஞானக்கிரியராகத் திருமேனி கொண்டு ஆத்மாவின் வழித்தாக ஒத்தொழுகி ஞானத்தை அனுக்கிரகம் பண்ணித் திருவடிகளிலே சேர்ப்பிப்பர்.

**13. மலம் நீங்கல்:**

சிஷ்யனுக்கு ஆசாரியார் சந்நிதானத்திலே வந்தபின் மலம் நீங்குமோ? வருமுன் மலம் நீங்குமோ? வந்தபிறகு மலம் நீங்குமானால் வந்த பேருக்கெல்லாம் மலம் நீங்க வேண்டும். அப்படி நீங்காதபடியினாலே வருமுன்னே மலம் நீங்கினதாம், வருமுன்னே மலம் நீங்குமானால் ஆசாரியார் வேண்டுவதில்லை யென்னிற் மலம் நீங்கின கண்ணுக்கே ஆதித்தன் காட்டுவது போல மலம் நீங்கின பக்குவ ஆத்மாவுக்கே ஆசாரியார் அறிவிப்பார்.

**14. சுவானுபவ முதன்மை:**

சுருதி குருவாக்கு, சுவா நுபவம் இம்மூன்றனுள் முதன்மை யாதென்னில் சுருதியும் குருவாக்கும் சுவா நுபவத்திற்குக் கருவியாதலின் சுவானுபவமே முதன்மை.

**15. பிறப்பு இறப்பு:**

ஆத்மா நித்தியனாக இருக்க பிறந்தான், இறந்தான் என்று சொல்லுகிறது எப்படி யென்னில் ஆத்மா மாயா கருவிகளைப் பற்றி அறிதலே பிறப்பு. மாயா கருவிகளை விட்டு நீங்கின அறியாமையே இறப்பு.

**16. பஞ்சகிருத்தியம் நித்தியம்:**

பஞ்ச கிருத்தியம் நித்தியமோ? அநித்தியமோ? சித்தியார் அஞ்சாம் சூத்திரத் தில்

'*உயிர்கட்கெல்லாம் விரிந்திடும் அறிவும் காட்டி*
*வீட்டையு மளிப்பன் மேலோன்*'

என்று திருவுளம் பற்றி யிருக்குகையால் பஞ்சகிருத்தியம் நித்தியம்,

சித்தியார் ஆறாம் சூத்திரத்தில்,

'*என்றும் தணலாக கருமம் என்று நித்தியமாகத்*
*திருவுளம் பற்றினது நித்தியமல்லாததால்*
*அவற்றுள்ளன்றில் ஒடுங்கமயன*'

கிருத்திய பதவிக்குப் பஞ்சகிருத்தியம் ஆத்மாவுக்கோ? சரீரத்துக்கோ? நித்தியமாக இருக்கிற ஆத்மாவுக்குக் கிடையாது. சரீரத்துக் கென்னில் சரீரம் சடமாகையினாலே சிருட்டி, திதி, சங்காரமாகிய முத்தொழிற்படுமிடத்து ஆத்மா அதிலழுந்து கையினா லும் திரோபாவமும் அநுக்கிரகமும் சரீரத்துக்கில்லாதபடியினாலும் பஞ்ச கிருத்தி யம் ஆத்மாவுக்கேயாம்.

**17. ஆத்மா பஞ்சக்கிருத்தியப்படுதல்:**

ஆத்மா பஞ்சக் கிருத்தியப்படுதலாவது. ஆத்மாவிற்கு அறிதல் தொழிலுண்டா னதே சிருட்டி. அறிதல் தொழில் நீங்கினதே சங்காரம். அறிதல் தொழில் நிகழுமிடத் துள்ள அறியாமையே திரோபாவம். இன்ப துன்பங்கள் பொசித்து புண்ணிய பாவங்களைக் கழித்தலே அனுக்கிரகம்.

**18. பதி மலங்கலத்தல்:**

ஒளியும் இருளும் ஓரிடத்திலே கூடி இராதது போல ஆத்மாவினிடத்திலே ஆணவ மலமும் சிவமும் கூடி இராதே. கூடியிருக்கிற தெப்படியென்னில்? ஒரு மரத்தினிடத்திலே வேர் தொடுத்து நுனி பரியந்தம் ஈரமும் அக்கினியும் கூடி இருத்தல் போலும் என்றறிக.

**19. நரக வேதனை சிவனுக்குண்டா?:**

நரகத்திலே கிடந்து அனுபவிக்குமிடத்து அந்த நரக வேதனை ஆத்மாவை விட்டு நீங்காத சிவனுக்கு முன் உண்டென்னில் அது கூடாது. அதெப்படியென்னில் ஒருவன் வயிற்றிலே கிடக்கிற புழுப்படும் இன்ப துன்பம் எல்லாம் அவனுக்கு இல்லாதது போலுமென்றறிக.

**20. ஆத்மா கிஞ்சிக்ஞனோ சுதந்திர வீனனோ?:**

ஆத்மா கிஞ்சிக்ஞனோ சுதந்திர வீனனோ? கிஞ்சிக்ஞன் என்றால் மின்மினிப் புழுவுக்குப் பிரகாசிக்கும் சுதந்திரம் சிறிதுண்டாக வேண்டும். அப்படி இல்லாதபடியினாலே கேவலன் கிஞ்சிக்ஞன் அல்லன். சுதந்திர வீனனென்றால் சிவன் உபதேசித்த ஆகமம் எல்லாவற்றையும் எக்காலத்திலேயும் அறிந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்படி இல்லாதபடியினாலே கேவலம் சுதந்திரவீனனும் அல்லன். ஆனால் எப்படியென்னில்? ஆத்மா கிஞ்சிக் ஞத்துவத்தையடைய சுதந்திர வீனனாம்.

**21. கெட்டு மோட்ச மடைதல்:**

ஆத்மா மோட்சத்தை அடையுமிடத்து கெட்டுக் கூடுவானோ? கெடாது கூடுவானோ? ஆத்மா கெட்டாலும் கூட மாட்டாது. இனிச். சித்தாந்தம் எப்படியென் னில்? விஷயங்களிலே செல்லும் ஆத்மபோத நிகழ்ச்சிக் கெட்டுக் கூடும்.

**22. மூவகை நிறைவு:**

வியாபகம், வியாத்தி, வியாப்பியம் ஆக 3. வியாபகம் நிறைவு. வியாத்தி சம நிறைவு. வியாப்பியம் ஒன்றிலே ஒன்றடங்கின நிறைவு. சிவனுடைய வியாபகம் சமுத்திர வியாபகம் போலும். ஆத்மாவும் ஆணவமலமும் வியாத்தியாயிருத்தல்.

நன்னீரும் உப்பும் வியாத்தியாயிருத்தல் போலும். சிவனுடைய வியாபகத்திலே ஆத்மாவும் ஆணவமலமும் வியாப்பியமாயிருத்தல் சமுத்திரவியாபகத்திலே தண்ணீரும் உப்பும்போல் இருத்தல்.

**23. ஆத்ம ஞானத்துக்குக் கண் முதலிய உவமைகள் வருமாறு:**

கண் 1, கண்ணொளி 1, கண்ணொளிக்குக் காணும் குணம் 1, கண்ணொளிக்குக் காணும் தொழில் 1, இருள் 1, பதார்த்தம் 1, விளக்கு 1, விளக்கை யுண்டாக்குகிறவன். 1, ஆக 8. கண்ணைப் போலும் ஆத்மா. கண்ணொளி போலும் ஆத்மஞானம். கண்ணொளிக்குக் காணும் குணத்தைப் போலும் ஆத்ம ஞானத்துக்கு அறியும் குணம். கண்ணொளிக்குக் காணும் தொழில் போலும் ஆத்ம ஞானத்துக்கு அறியும் தொழில். இருளைப் போலும் ஆணவமலம். பதார்த்தங்களைப் போலும் சுகதுக்கங்கள். விளக்கைப் போலும் மாயாசரீரம். விளக்கை உண்டாக்கி விளக்கு போன விடத்தில் கண்ணொளிக்குக் கரணும் தொழிலோன் போலும் சிவன். இப்படி போலச் சரீரம் போன விடத்து ஆத்ம அறியும் தொழிலொன்றுமே போனது. போன பொருள் இரண்டு இருக்கிற பொருள் 6 ஆக 8.

**24. பசு உடலைப் பற்றல்:**

ஆத்மா வியாபகமாய் இருந்து சரீரத்தைப் பற்றுதற்குப் படிக மலை, அக்கினி மலை முதலிய உவமைகள் வருமாறு. படிக மலை 1, படிக மலைக்குள் ஒளி 1, படிக மலை ஒளிக்குப் பற்றும் குணம் 1, படிக மலை ஒளிக்குப் பற்றும் தொழில் 1, வண்ணம் 1, வண்ணத்தைக் காண்பிக்கிறவன் 1, ஆக 6. படிக்மலையைப் போலும் ஆத்மா. படிகமலைக்குள் ஒளியைப் போலும் ஆத்ம ஞானம். படிகமலை ஒளிக்குப் பற்றும் குணத்தைப் போலும் ஆத்ம ஞானத்துக்கு அறியும் குணம். படிக ஒளிக்குப் பற்றும் தொழில் போலும் ஆத்ம ஞானத்துக்கு அறியும் தொழில். வண்ணத்தைப் போலும் மாயாசரீரம். வண்ணத்தைக் காண்பிக்கிறவன் போலும். சிவன். படிகமலை எந்தப் புறத்திலே வண்ணத்தைக் கொடுத்தாலும் பற்றிக் கொள்ளும். அதுபோல் எல்லாப் புவனங்களிலேயும் வியாபகமாய் இருக்கிற ஆத்மாவுக்குக் கர்த்தா எந்தப் புவனத்திலே சரீரத்தைக் கொடுத்தாலும் அந்தப் புவனத்திலே பற்றிக் கொண்டே யறியும். அக்கினி மலை 1, அக்கினி மலைக்கு ஒளி 1, அக்கினி மலைக்குச் சுடும் தொழில் 1, பஞ்சு 1, பஞ்சைப் பற்றவைக்கிறவன் 1, ஆக 6. அக்கினி மலையானது எந்தப் புறத்திலே பஞ்சைக் கொடுத்தாலும் பற்றிக் கொள்ளும். அதுபோல எல்லா புவனங்களிலும் வியாபகமாய் இருக்கிற ஆத்மாவுக்குக் கர்த்தா எந்தப் புவனங்களிலே சரீரத்தைக் கொடுத்தாலும் அந்தப் புவனங்களிலே பற்றிக் கொண்டே யறியும்.

**25. சேர்ந்ததின் வண்ணம் சார்ந்ததின் வண்ணமாய் இருக்குமென்தற்கு ஆகாசம் முதலிய உவமைகள்:**

ஆகாசமானது இருளோடு கூடினால் இருளாய் நிற்கும். ஒளியோடு கூடினால் ஒளியாய் நிற்கும். அதுபோல் ஆத்மா மலத்தோடு கூடினால் மலமாய் நிற்கும். சிவத்தோடு கூடினால் சிவமாய் நிற்கும்.

**26. பதி வியாபகம்:**

எண்ணிறந்த கோடி புவனங்களிலே இருக்கிற எண்ணிறந்த கோடி ஆத்மாக்க ளுக்கும் அறிவும் தொழிலும் நடத்துதலினாலே சிவன் வியாபகன் என்றறிக.

**27. மல வியாபகம்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் அறியாமை இருக்கையினாலே ஆணவ மலம் வியாபகம் என்றறிக.

**28. மாயா வியாபகம்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்த கோடி புவனங்களிலே தனுகரணாதிகள் புசிப்பு இருக்கையினாலே மாயை வியாபகம் என்றறிக

**29. கன்ம வியாபகம்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்த கோடி புவனங்களிலே மல பொசிப்பு இருக்கையினாலே கன்ம வியாபகம் என்றறிக.

**30. அறிவித்தல்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் சிவன் ஒருவராய் இருந்து அறிவிக்கிற தெப்படியென்னில் எண்ணிறந்த கோடி கண்களுக்கும் ஆதித்தன் ஒருவராய் இருந்து காட்டுதல் போல என்றறிக. இதற்குச் சுருதி 'இறைவன் என்றது'

**31. மலமறைத்தல்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களையும் ஆணவமலம் ஒன்றாயிருந்து மறைக்கிறது எப்படியென்னில் எண்ணிறந்த கோடி கண்களையும் இருள் ஒன்றாயிரு ந்து மறைத்தல் போல என்றறிக.

**32. அரன்கன்மம் கொடுத்தல்:**

எண்ணிறந்த கோடி ஆத்மாக்களுக்கும் எண்ணிறந்த கோடி கன்மங்களைச் சிவன் ஒருவராயிருந்து அறிந்து கூட்டி முடிக்கிற தெப்படி யென்னில் ஒரு வண்ணா னவன் ஒரு ஊரிலே இருக்கிற பல பேருடைய புடவையையும் வாங்கி வெளுத்து அவரவர் புடவையை அவரவர்க்கு அறிந்து கொடுத்தல் போலும். ஓர் இடையன் பல பேருடைய மாட்டையும் மேய்த்து அவரவர் வீட்டிலே அறிந்து கொண்டு போய் விடுத்தல் போலும். †

[† நூற்றுக்கணக்கான பசுக்களுக்கு மத்தியில் உள்ள கன்று அதன் தாயை அறிவது போல ஒவ்வொருவரும் செய்யும் கருமம் அவரவரையே அடையும் என்று நாலடியார் கூறும். கன்று உயிருள்ள பொருள். 'கருமம் சடமாகும். எனவே நாலடியார் கருத்து ஏற்புடையதன்று. வினையை அவ்வவ் உயிர்க்கு ஊட்ட இறைவன் அவசியம் தேவைப்படுகிறான் இக்கருத்தே ஏற்புடையதாகும்.]

33. **வினைவேறே கன்மம் வேறே:**

வினையாவது ஆணவமலத்தினாலே ஆன்மாவுக்குக் கன்மத்திலேயுண்டாகிய விருப்பம். கன்மமாவது புண்ணிய பாவங்கள் இதற்குச் சுருதி தேவாரத்திலே 'அல்லல் என் செயும் அருவினை யென்செயும் தொல்லை வல்வினை தொந்தம்தான் என்செயும்'

34. **மூவகைக் கன்மாவது** :

கன்மமாவது தூல கன்மம் என்றும் சூக்கும கன்மமென்றும் அதி சூக்கும கன்மம் என்றுங் மூன்று விதமாக இருக்கும். தூல கன்மமாவது ஆகாமியம்.

ஆகாமியமாவது ஆத்மா பிரார்த்துவம் புசிக்சையிலே நிகழா நின்ற இதாகிதங் கள்.

இதாகிதங்களாவன மனவாக்குக் காயங்களினாலே செய்யப்பட்ட நல்ல தொழி லும் தீய தொழிலுமாம்.

சூக்கும கன்மமாவது சஞ்சிதம். சஞ்சிதமாவது மாயையிலே கட்டுக்கிடையா கிய புண்ணிய பாவங்கள்.

அதிசூக்கும கன்மமாவது பிரார்த்துவம் பிரார்த்துவமாவது எடுத்த தேகத்திலே புசித்துத் தொலைவதாகிய சுக துக்கங்கள். சுக துக்கங்களுக்கு இருப்பிடமாவது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்துமாகிய விடயங்கள். இந்த விடயமும் விருப்புச் சத்தம், வெறுப்புச் சத்தம், விருப்புப் பரிசம், வெறுப்புப் பரிசம், விருப்புரூபம், வெறுப்புரூபம், விருப்புரசம், வெறுப்புரசம், விருப்புக் கந்தம், வெறுப்புக் கந்தம் என்று பத்துவிதமாய் இருக்கும்.

35. **பிரார்த்துவம் அறிதல்:**

ஆன்மாவினுடைய பிரார்த்துவ கன்மத்தைச் சிவனும் அறிவார். ஆன்மாவும் அறிவான்; இரண்டும் சரியோ என்றால் அச்சிவன் அறிகிறது மாத்திரம். ஆன்மா அறிந்து அழுந்துவான்.

**36. ஆகாமியுமாவது:**

ஆன்மா பிரார்த்துவம் புசிக்கிறதற்குச் சிவன் நல்வினை தீவினை இரண்டையும் கருவியாகக் கூட்டினார். கூட்டின தொழிலை ஆன்மா மலத்தினாலே தன்னுடைய தொழிலாக நினைத்துக் கொண்டான். ஆகையினாலே. அந்த இரண்டு தொழிலும் ஆன்மாவுக்கு ஆகாமியமாயிற்று.

**37. சாதியாயுசு போகம் பிரார்த்துவ சொரூபம்:**

கன்மமாவது சாதி, ஆயுசு, போகமென மூன்று விதமாய் இருக்கும். இவை மூன்றும் நல்ல சாதி, தீய சாதி எனவும், தீர்க்காயுசு, அற்பாயுசு எனவும் வெகுபோகம், அற்பபோகம் எனவும் ஆறுவிதமாகவும் இருக்கும்.

**38: கன்மம் மாறல்:**

ஆன்மாவுக்கு முன் ஆர்ச்சித்த கன்மம் பின்னும் பின் ஆர்ச்சித்த கன்மம் முன்னுமாக மாறிவரும். அது எப்படியென்னில் ஒரு பனை விதையை மண்ணிலே முன்னே போட்டுத் தண்ணீர் விட்டான். அதன் பின்னே வாழைவைத்தான். அதன் பின்னே கத்தரி நட்டான். அதன் பின்னே கீரை விதைத்தான். அவனுக்குக் கீரை பதினைந்து நாளையிலே பலனாய் வரும். கத்தரி ஒரு மாதத்திலே பலனாய் வரும். தென்னம்பிள்ளை அஞ்சு வருஷத்திலே பலனாய் வரும். பனை பத்து வருஷத்திலே பலனாய் வரும். அது போலக் கன்மமும் மென்மைவன்மைகட்கு ஈடாகப் பாகப்பட்டு மாறிப் மாறிப் பலனாய் வரும் இதற்குச் சுருதி சிவப்பிரகாசத்தில் 'தொடங் கடைவின்டையாதே தோன்று மாறி' என்பது.

**39. பிரார்த்துவம்:**

ஆத்மாவுக்குப் பிரார்த்துவ கன்மம் வருமிடத்து தைவீதம் பௌதீகம், ஆத்மீகம் என்று மூன்று விதமாய் வரும். அவற்றுள் தைவீகமாவது செனனமரணம்; நரை திரைகள் முதலாயின கர்த்தாவினால் வருவது. பௌதீகமானது மின், இடி, காற்று, மழை, தீ, நீர் முதலாயின. அவற்றால் ஆத்மீகமாவது ஆத்மாக்களால் அப்படி வருவது.

**40. பஞ்சாட்சர சிந்தனை என்றொரு சிந்தனை:**

பஞ்சாட்சர சிந்தனை யாவதென்ன? சிவநயம என்றிருப்பதற்குப் பொருள். சிகாரம் சிவம். வகாரம். அருள். யகாரம் ஆத்மா. நகாரம் திரோதாயி. மகாரம் மலம்: இந்த ஐந்து பொருளும் அனாதியாய் நித்தியமாய் வியாபகமாய் அரூபமாய், அகன்டிதமாய் ஒன்றாய் ஒரு கொத்தாய் இருக்கும். இதில் யகாரமாய ஆத்மா மகாரமாகிய மலத்தோடே சேர்ந்தவுடனே நகாரமாகிய திரோதாயி பொய்யை மெய்யென்றும் மெய்யைப் பொய்யென்றும் செனன மரணத்திலே சுழுன்று மாறுபாடாகக் கருதி நிற்கும். அப்படி நிற்கிற காலத்திலே சிவ புண்ணிய

முதிர்ச்சியினாலே அருட்சிவ மேலிடும். மகாரமாகிய மலம் சிகாரமாகிய சிவத்தி லொடுங்கும் நகாரமாகிய திரோதாயி வகாரமாகிய அருளிலே வொடுங்கும். யகார மாகிய ஆத்மா வகாரமாகிய அருளிலே ஒன்றாய்ப் பொசிக்கும். இது என்ன வாச்சுது. நமசிவாய ஆச்சுது. இதற்குத் திட்டாந்தம், சூரிய கிரகணம், கண், விளக்கு, இருள், இராக்காலத்துக்குக் கண் இருளோடே சேர்ந்தவுடனே விளக்கொளியினாலே பதார்த்த ங்களைத் திரிவாய்க் காணும். விடிந்தவுடனே இருள் ஒளியிலே அழிந்துபோம். விளக்குச் சத்தி கெட்டுப்போம். கண்ணும் ஒளியும் ஒன்றாய்ப் போம். இப்படிப் போல சூரியனைப் போல கர்த்தா. கிரகணத்தைப் போலே இருள். கண்ணைப் போலே ஆத்மா. விளக்கினைப் போலே திரோதாயி. இருளைப் போலே மலம். இராக் காலத்தைப் போலே அபக்குவம். அதெப்படி இப்படிப் போல என்றறிக.‡

[‡ சிவாயநம அல்லது நமசிவாய என்ற பஞ்சாட்சரமே நாயன்மார்களாலும் சித்தாந்தி களாலும் பெரிதும் போற்றப் பட்டுள்ளன. பஞ்சாட்சரத்தை வைத்துப் பல நூல்கள் எழுதப்பட்டுள்ளன. தகடூர் எனப்படும் தருமபுரியை ஆண்ட விடுகாதழகிய பெருமாள் என்ற அதியமான் மன்னன் கல்வெட்டுகளாகவும் பஞ்சாட்சர எழுத்துக்களை வெட்டி வைத்துள்ளான். நமசிவாய என்பது விளங்கா மொழியுமாகும். மேலும் விரிவுக்கு இவ்வாசிரியர் செப்டம்பர் 98 மெய்கண்டார் இதழில் எழுதிய கல்வெட்டில் ஐந்தெழுத்து மந்திரம் என்ற கட்டுரையைக் காண்க:

திருச்சிற்றம்பலம்.

---

# சிவபெருமான் 108 போற்றிகள்

இறைவனை அர்ச்சனை செய்வதற்கு வடமொழியுடன் தமிழ் மொழியும் பல காலமாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இதுவரை அச்சில்வராத வல்லம் தலபுராணம் என்ற ஓலைச் சுவடியில் சிவனுடைய 108 நாமங்களும் அம்மனுடைய 108 நாமங்களும் திருமாலுக்குரிய அர்ச்சனை சொற்களும் பிறவும் உள்ளன. சைவ அன்பர்கள் பயன் பெறும்பொருட்டு சிவனுடைய நாமங்கள் மட்டும் இங்கே சேர்க்கப்படுகிறது. சிவனுடைய 108 நாமங்களைச் சொல்லி அட்சதை வில்வமும் சேர்த்து அர்ச்சனை செய்தால் பெருகிய மழை விஸ்தாரமாய்ப் பொழியும். பூலோகமெல்லாம் தழைக்கும் என்று மேற்படி நூலிலேயே குறிப்புண்டு. விரும்புபவர் வடமொழியில் ஓத விரும்புபவர் போற்றி என்பதற்குப் பதில் நமஹ என்று கூறிக் கொள்ளலாம்.

1. ஓம் வச்சரீசுபரா போற்றி
2. ஓம் மகாதேவா போற்றி
3. ஓம் சிவா போற்றி
4. ஓம் பத்திராம்பிகைபதியே போற்றி
5. ஓம் சம்புவே போற்றி

6. ஓம் சதாசிவா போற்றி
7. ஓம் ருத்திரா போற்றி
8. ஓம் மிருடா போற்றி
9. ஓம் பூதகணாதிபா போற்றி
10. ஓம் வச்சிரபூசித பாதாம்பிகா போற்றி
11. ஓம் தேவேந்திரரோக வினாசா போற்றி
12. ஓம் கங்காதரா போற்றி
13. ஓம் பசுபதியே போற்றி
14. ஓம் சாம்பா போற்றி
15. ஓம் திரிபுராந்தகா போற்றி
16. ஓம் விபுவே போற்றி
17. ஓம் விசுவேசுவரா போற்றி
18. ஓம் கிரிசா போற்றி
19. ஓம் ஈசானா போற்றி
20. ஓம் ஈசா போற்றி
21. ஓம் சந்திரசேகரா போற்றி
22. ஓம் வச்சிர தீர்த்த வாசா போற்றி
23. ஓம் கௌதம க்ஷேத்திர வாசா போற்றி
24. ஓம் பகவா போற்றி
25. ஓம் வாக்குமி போற்றி
26. ஓம் திருதிமா போற்றி
27. ஓம் பூதிமா போற்றி
28. ஓம் ரிஷபத்துசனா போற்றி
29. ஓம் உமாபதியே போற்றி
30. ஓம் நிமலா போற்றி
31. ஓம் செகவிருக்ஷராசா போற்றி
32. ஓம் விருஷாகபியே போற்றி
33. ஓம் திலகா போற்றி
34. ஓம் சுகனே போற்றி
35. ஓம் சுராசரி போற்றி
36. ஓம் சுரபதி போற்றி
37. ஓம் தூயோன் போற்றி
38. ஓம் சங்கரா போற்றி
39. ஓம் விடைவாகனா போற்றி
40. ஓம் கபாலமாதனா போற்றி
41. ஓம் கபிலார்ச்சிதம்பாதா போற்றி
42. ஓம் கங்கரா போற்றி
43. ஓம் கபிலாக்ஷணா போற்றி
44. ஓம் மகேசா போற்றி
45. ஓம் திங்கணோபவா போற்றி
46. ஓம் சர்வா போற்றி
47. ஓம் பிரமதேசா போற்றி

48. ஓம் சூலபாணியா போற்றி
49. ஓம் பினாதகா போற்றி
50. ஓம் கபரத்தியே போற்றி
51. ஓம் ஞாலயோனியே போற்றி
52. ஓம் பஞ்சாக்ஷரா போற்றி
53. ஓம் சனாதகா போற்றி
54. ஓம் சேஷ்டா போற்றி
55. ஓம் பஞ்சகலார்ச்சனப் பிரியா போற்றி
56. ஓம் சித்தேசா போற்றி
57. ஓம் தெக்ஷிண கிருதுகவினாசா போற்றி
58. ஓம் சடையாய் போற்றி
59. ஓம் மகாகாளாய் போற்றி
60. ஓம் ஸ்ரீகண்டா போற்றி
61. ஓம் நீல கண்டா போற்றி
62. ஓம் கால கண்டா போற்றி
63. ஓம் அஷ்ட கரணா போற்றி
64. ஓம் அஷ்ட மூர்த்தியே போற்றி
65. ஓம் தீபித மூர்த்தியே போற்றி
66. ஓம் தயாகரனே போற்றி
67. ஓம் அமலா போற்றி
68. ஓம் மாயவங்கார கிருதியே போற்றி
69. ஓம் வீமா போற்றி
70. ஓம் தூய வாமனனுக்கிரகா போற்றி
71. ஓம் நடன சோதியே போற்றி
72. ஓம் கீர்த்தி வாசா போற்றி
73. ஓம் ஏகபாதா போற்றி
74. ஓம் விருபாக்ஷகா போற்றி
75. ஓம் நசனே போற்றி
76. ஓம் புருஷா போற்றி
77. ஓம் அகோரா போற்றி
78. ஓம் வாம தேவா போற்றி
79. ஓம் சத்தியோசாதனா போற்றி
80. ஓம் மயேச்சுரா போற்றி
81. ஓம் சரவஞ்ஞகா போற்றி
82. ஓம் வெண்பொடி மகிழ்வோன் போற்றி
83. ஓம் சோழ புத்திராச்சிதா போற்றி
84. ஓம் ஸ்ரீமானே போற்றி
85. ஓம் மகாபோகா போற்றி
86. ஓம் பயாபகா போற்றி
87. ஓம் சுத்த படிகசாங்கசா போற்றி
88. ஓம் சடிலா போற்றி
89. ஓம் சூரிய சந்திராக்கினி லோசா போற்றி

90. ஓம் இந்திர கீலமானதீசா போற்றி
91. ஓம் தேவதாரு வனவாசா போற்றி
92. ஓம் காமாரியே போற்றி
93. ஓம் காம தகனா போற்றி
94. ஓம் பூத பாவனா போற்றி
95. ஓம் பூதி மாசுரனே போற்றி
96. ஓம் பிரமசனாத்மா போற்றி
97. ஓம் மகாத்துமா போற்றி
98. ஓம் திரியிதா போற்றி
99. ஓம் விசுவாத்துமா போற்றி
100. ஓம் விசுவ சங்கரா போற்றி
101. ஓம் ஏகநாயகா போற்றி
102. ஓம் சிலேஷ்டா போற்றி
103. ஓம் எண் குணக்குருவே போற்றி
104. ஓம் தேக நாயகா போற்றி
10.5 ஓம் சினாசிதா போற்றி
106. ஓம் தபசித்தி பிரதா போற்றி
107. ஓம் முனிகினாற்சிதா போற்றி
108. ஓம் பத்திராம்பிகா பிராணவல்லபா போற்றி

---

## ஆசிரியர் எழுதிய நூல்கள்

1. தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும்
2. திருவோத்தூர் (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்)
3. திருக்குறள் பழைய உரை
4. வரலாற்றில் வல்லம்
5. கல்லிடைக்குறிச்சிக் கலைக் கோயில்கள்
6. விக்கிரமசிங்கபுர உலா
7. சிவகீதையும் சித்தாந்த மரபும்
8. புஷ்பவிதி (பத்தாம் பதிப்பு) உரையாசிரியர்
9. எசாலம் வரலாற்றுப் புதையல் (இணையாசிரியர்)
10. திருக்கோவிலூர் அகழாய்வு (துணையாசிரியர்) (ஆங்கில நூல்)

## இனி வர இருப்பவை

1. ஏமூர்த்தல வரலாறு
2. நாலடியார் பழைய உரை
3. பழனியாண்டவர் தாலாட்டு
4. மதி கெட்டான் நாடகம்
5. பெண்ணாகடம் வரலாறு
6. கடந்தை மாலை
7. செய்யாறு - கல்வெட்டுகள்
8. திருவாவடுதுறை ஆதீன வரலாறும் செப்பேடுகளும்
9. நெல்லை மாவட்ட வரலாறு
10. வரலாற்றில் முகாசபரூர்
11. திருப்பாம்புரம் தலவரலாறு



| | |
|---|---|
| **நூலாசிரியர்** | **ச. கிருஷ்ணமூர்த்தி**, எம்.ஏ., பி.எட், |
| **ஊர்** | திருவண்ணாமலை மாவட்டம் செய்யாறு வட்டம் அனுக்காவூர் அடுத்த விலாரிப்பட்டு. |
| **பெற்றோர்** | சடைசாமி - பூமாது அம்மாள். |
| **பிறப்பு** | 4.4.1949 |
| **கல்வி** | சென்னை ஆழ்வார்பேட்டை மாநகராண்மைக்கழக மேல்நிலைப் பள்ளி. (பள்ளிக்கல்வி) சென்னை மாநிலக் கல்லூரியில் கல்லூரி க்கல்வி. தமிழ் மற்றும் வரலாற்றில் முதுகலை பட்டங்கள். ஆசிரியர் பட்டம், தொல்லியலில் முதுகலை பட்டயம். தொல்லி யல் துறையில் 1978 முதல் பணியாற்றி வருகிறார். |
| **சாதனை** | தஞ்சையில் பணியாற்றிய காலத்தில் ஆயிரத்திற்கு மேற்பட்ட ஓலைச்சுவடிகள் மற்றும் காகிதப்பிரதிகள் நன்கொடையாக அரசிற்குத் திரட்டித் தந்துள்ளார். அச்சில் வராத பல நூல்களை நகல் செய்துள்ளார். வரலாற்றுக்கு முற்பட்ட பெருங்கற்கால ஓவியங்கள் பலவற்றைக் கண்டு பிடித்துள்ளார். பழங்காலக் காசுகள், சிற்பங்கள் மற்றும் தொல்பொருட்களைத் திரட்டித் தந்துள்ளார். அச்சில் வராத திருக்குறள் பழைய உரையைப் பதிப்பித்துள்ளார். இதுவரை 9 நூல்கள் எழுதியுள்ள இவர் தமிழக அரசின் சிறந்த நூலுக்கான பரிசினையும்பெற்றுள்ளார். நூற்று க்கு மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகள் எழுதியுள்ள இவர் சென்னை வானொலி நிலையத்திலும் உரை ஆற்றியுள்ளார். தமிழகத்தில் பல்வேறு மடங்களை ஆய்வு செய்துள்ள இவர், எழுதி வைத்து ள்ள பத்துக்குமேற்பட்ட நூல்கள் இனி வெளிவர உள்ளன. |

- நெல்லை நெடுமாறன்